

சிவமயம்.

# திருவாதவூரர்புராணம்

## மூலமும்-உரையும்.

### காப்பு.

#### விநாயகஸ்துதி.

பவளமால்வரையினிலவெறிப்பதுபோல்..........*
பரந்தநீற்றழகுபச்சுடம்பிற் ....... ..........*
றிவளமாதுடனின்றாடியபரமன் ... ...............*
சிறுவனைப்பாரதப்பெரும்போர் ....... ... *
தவளமாமருப்பொன்றொடித்தொருகரத்திற் ...*
றரித்துயர்கிரிப்புரத்தெழுதுங்................*
கவளமாகளிற்றின்றிருமுகம்படைத்த...........*
கடவுளைநினைந்துகைதொழுவாம் ... ... .. ...*

(இதன்பொருள்.)

பெரியபவளமலையினிடத்திலே சந்திரிகைவீசுவதுபோல்சிவந்ததனதுதிருமேனியிற்பரவப்பூசியதிருநீற்றினழகானது உமாதேவியினதுபசியதிருமேனியிலேபிரதிபலிக்கும்படி அத்தேவியுடனின்றுநிருத்தஞ்செய்தருளியபரமசிவனுடையபுத்திரனைப்பெரியபாரதயுத்தத்தைத்தனதுவெண்மைபொருந்திய பெரியகொம்பொன்றையொடித்துஒருகையிலெழுத்தாணியாகவைத்துக்கொண்டுஉயர்ந்தமகாமேருகிரியை ஏட்டாகக்கொண்டு அதனிடத்தெழுதியருளுங்கவளத்தைக்கொள்ளுகின்ற பெரியயானையினது திருமுகத்தையுடைத்தவிநாயகக்கடவுளைமனதிலே தியானித்து இரண்டுகைகளையுங் குவித்து வணங்குவாமென்றவாறு.

உ

# பாயிரம்.

(சபாபதிஸ்துதி.)

இதந்தருமடந்தையொடிசைந்துயிருடம்புபோல்.....*
விதம்படுலகங்களின்விரிந்தொளிவிளங்குவார்... .. ...*
மதங்கமொடுதுந்துமிவளங்கெழமுழங்கவே.........*
சிதம்பரநடம்பயில்செழுங்கழலிறைஞ்சுவாம்........*

(இ-ள்.) இதத்தைத்தருகின்ற சிவகாமியம்மையுடனே பொருந்தி உயிருமுடம்பும்போலப் பலவகைப்பட்ட எலலா வுலகங்களிலேயும் நிறைந்து சோதிசொரூபராய்விளங்குஞ் சபாநாயகரது மிர்தங்க வாத்தியத்துடனே பேரிகையும் வளப்பொருந்தமுழங்கச் சிதம்பரத்திலே நடனஞ்செய்யாநின்ற செழுமைபொருந்திய திருவடிகளை வணங்குவாமென்றவாறு. (க)

(சிவகாமிஸ்துதி.)

ஆடகசிதம்பரவணங்குமையணங்கிலா ... ...............*
நாடகனனந்தசுகநன்குடனடங்கிறு ... ...... ........ *
மேடகமணம்பொருவவெங்கணுமிசைந்துளாள் .. *
பாடகமிலங்குசிறுபங்கயமிறைஞ்சுவாம்...... . ......*

(இ-ள்.) பொன்னம்பலத்தினிடத்தே தங்கிய அழகிய உமாதேவி வருத்தமில்லாத நிருத்தஞ்செய்தருளுகின்ற சபாபதியினது அளவற்றசுகத்தை நன்மையாகப்பெற்றுக்கொண்டு அவருடையபாகத்தில் வாழ்பவள் இதழ்களையுடைய பூவிடத்திருக்குமணம்போலச் சராசரங்களனைத்தினு நிறைந்திருக்கின்றவள் இப்படிப்பட்ட சிவகாமியம்மையினது பாடகங்கள் விளங்குகின்ற சிறியதாமரை மலர்போன்ற பாதங்களை வணங்குவாமென்றவாறு. (உ)

(சுப்பிரமணியஸ்துதி.)

துங்கமதகும்பவுயிர்தும்பிமுகனெம்பிசீர்........ ....*
தங்குநெகிழஞ்சிறுசதங்கைகள்புலம்பவே... ..........*
மங்கையுமைகண்குளிரவந்துலவுகின்றதா ...... . *
ளங்கைமலர்கொண்டுமிகுமன்புடனிறைஞ்சுவாம்......*

(இ-ள்.) பரிசுத்தமாகியமதசலத்தைப்பொழிகின்றமத்தகத்தையுடையஉயர்வாகியயானைமுகவிநாயகருக்கிளைய முருகக்கடவுளினது சிறப்புத்தங்கியபொற்சிலம்புகளும் சிறியசதங்கைகளும்சத்திக்கமங்கையாகியஉமாதேவியினதுகண்கள்குளிரும்படிவந்துஉலாவாநின்ற பாதங்களை அழகியகையினிடத்திலே மலர்களைக்கொண்டு அருச்சித்து மிகுந்த அன்புடனேவணங்குவாமென்றவாறு. (ங)

(நூல்வரலாறு.)

தென்பொதியமாமுனிசிறக்கவருளெண்ணெண்...... *
ணின்புவியிலியாப்பெனுங்கடலுணுயேன்........... *

மின்பயிலுமாமதுரைமேவுதமிழ்மாறன்................*
துன்பமறநல்குகதைசொல்லலுறுகின்றேன்............*

(இ-ள்.) தென்றிசையில் விளங்கிய பொதியமலையிடத்திருக்கும் அகஸ்தியமாமுனிவர் யாவருஞ் சிறக்கும்படி முற்காலத்திலே நைமிசாரணியவாசிகளாகியமுனிவருக்குஅளிருசசெய்தபேரின்பத்தைத் தருகின்ற அறுபத்துநான்கு திருவிளையாடலென்னுஞ் சமுத்திரத்திலே ஒளிவிளங்கிய குதிரைகளை மதுரைமா நகரத்திலே வந்த பாண்டியராஜனது துன்பநீங்கக்கொடுத்தகதையை அடியேன்சொல்லத் தொடங்கினேனென்றவாறு. (௪)

அற்புகளிருந்தருள்பெருந்துறையடைந்தே......... *
சிற்பரமுணர்ந்துதிருவாசகமுரைப்பார் ................ *
முற்பகலருந்தவமுயன்றுபெருமன்பா ............ *
லுற்பவமொழிந்தமைமொழிந்திடரொழிப்பாம்......*

(இ-ள்.) பரமசிவனெழுந்தருளியிருந்த திருப்பெருந்துறையென்னுந்தலத்திற்சேர்ந்து அறிவுருவாகிய சிவத்தையறிந்து திருவாசகமுரைத்தருளிய மாணிக்கவாசகரானவர்முன்னாள்களிலே அரியதவங்களைமுயன்றுபெற்ற அன்பினாலே ஜனனமொழிந்து மோக்ஷமடைந்தகதையைச்சொல்லிப்பிறவித்துன்பத்தைநீக்குவாமென்றவாறு(௫)

( அவையடக்கம். )

கொண்டலனகண்டனருள்கொண்டுதமிழ்பாடித் ......*
தொண்டுபடுமன்பர்செயல்சொன்னநெறிதன்னால் ... *
வண்டமிழ்தெரிந்தவர்கண்மற்றெனுரைகுற்ற .........*
முண்டெனினுநன்கிதெனவுள்ளுவர்களெள்ளார் ....... *

(இ-ள்) மேகம்போன்றநீலகண்டத்தையுடையபரமசிவனதுகிருபையைக்கொண்டு திருவாசகமென்னுந்தமிழ்வேதம்பாடிஅடிமைத்திறஞ்செய்தஅன்பராகியமாணிக்கவாசகர்சரித்திரத்தைச்சொல்லியபடியால் வண்மைபொருந்திய தமிழையறிந்தபுலவர்கள்அடியேன்சொல்லும்பாடலிற்குற்றமுண்டாயிருந்தாலும்அக்குற்றத்தைக்கொண்டு இகழாமல் இதுநல்லதென்றுகொள்ளுவார்களென்றவாறு.(௬)

( நூற்பயன். )

இந்தவளநற்கதையியம்பினர்நயந்தே...................*
சிந்தையினினைப்பவர்செவிப்புலனிறைப்போர்...... *
புந்திமகிழப்புவிபுரப்பருடல்விட்டா .................. *
லந்தவுலகத்தினிலரன்சபையில்வாழ்வார் ............... *

(இ-ள்.) இந்தத் தெய்வீகமுள்ளநல்லகதையைச்சொன்னவர்களும் நயப்புடனேமனதிலேசிந்திப்பவர்களும் செவியினிடத்தேகேட்

பவர்களும் மனமகிழ்ச்சியையுடையப் பூலோகமுழுவதும் அரசாக்ஷிசெய்வார்கள் தேகம்நீங்கினல் அந்தச் சிவலோகத்திலே சிவசமுகத்தில் வாழ்ந்திருப்பார்களென்றவாறு. (எ)

பாயிரமுற்றிற்று.

---

## மந்திரிச்சருக்கம்.

முக்கணொருநான்குபுயமைந்துமுகமுன்னோன் ...... *
சொக்கனருணன்மைபெறுதொன்மைதிகழ்நன்னா *
டக்கடுவிடத்தையரனுக்கருள்வதென்றே ............... *
மைக்கடலில்வைகலொழிவையைவளநாடு ...... ....... *

(இ-ள்.) மூன்றுகண்களையும் நான்குபுயங்களையும் ஐந்துதிருமுகங்களையுமுடைய மூலகாரணராகிய சொக்கநாதர் அருளுகின்றநன்மையைப் பெற்றதாயும் பழையதாயும் விளங்குகின்ற நல்ல நாடாவது அந்தக்கடியவிஷத்தைப் பரமசிவனுக்குக் கொடுப்பதென்று கடலினிடத்தே பொருந்துதலொழிந்த வையையாறுசூழ்ந்தவளப்பத்தையுடைய பாண்டிநாடென்றவாறு. (க)

நீண்டகயிலைக்கிறைநிகழ்த்தவருளாலே ............... *
பூண்டமுனிமெய்த்தமிழ்புகன்றதிருநாடு ............ *
மூண்டபகைசெற்றுலகமுற்றுமரசாளும் ........... *
பாண்டியனலங்குலவுபாண்டிவளநாடு ................ *

(இ-ள்.) நெடிய கைலாசகிரிக்குத்தலைவனாகியபரமசிவன்கிருபையினாலே அருள்செய்ய அவ்வருளைத்தரிக்கப்பெற்ற அகஸ்தியமுனிவர் தங்கியிருந்து மெய்ம்மைபொருந்திய இயலிசை நாடகமென்னு முத்தமிழையுஞ்சொல்லிய சிறப்புப்பொருந்திய நாடாவது மூண்டுவந்த பகையைக்களைந்து உலகமுழுவதும் அரசாக்ஷிசெய்யும் பாண்டியனுடைய நன்மைமிகுந்த வளப்பத்தையுடைய பாண்டிநாடென்றவாறு (உ)

மேவுமூர்வளம்பலவுமிகுந்துளநாடதனினலம் ... ...*
யாவுமூர்பழமறைதேரந்தணர்கள்பயின்றுளவூர் ......*
தாவுமூர்விடையேறிதங்கியவூரங்குறையுந் ......... ... *
தேவரூரினுமேன்மைசிறந்ததிருவாதவூர் ..............*

(இ-ள்) பலவளங்களுமிகுந்துள்ள வூர்களையுடையஅந்தப்பாண்டி நாட்டிலே நன்மைமிகுந்தவூராயும் ஆதிநூலாகிய சதுர்வேதங்களுங்கிரமமாகத்தெரிந்த அந்தணர்கள் நிறைந்திருக்கின்றவூராயும்

தாவிநடக்கின்ற இடபவாகனமேறிய பரமசிவன் எழுந்தருளியிருக்குமூராயுமிருப்பது அவ்வானுலகத்திருக்கின்ற தேவர்களதுபொன்னகரத்திலும்அதிகமேன்மைசிறந்ததிருவாதவூராமென்றவாறு. (௩)

(வேறு.)

அந்நகரின்மறையோரிலருள்புனைமாத்தியர்குலத்திற் ... .... *
றன்னிகரில்சைவநெறித்தலைவனென்றனிதேவி .. ..... *
மின்னனையாடிருவயிற்றின்மென்கொடிபங்கினனருளாற்...*
றென்னவன்செங்கோன்முதல்வர்திருவவதாரஞ்செய்தார்...*

(இ-ள்.) அந்தவாதவூரில்வாழ்கின்ற பிராமணவருணத்திலே கிருபையையுடைய ஆமாத்தியர்குலத்திலே தனக்குநிகரிலாத சைவசமையத்தலைமையையுடையவர் ஒருபிராமணர் அவருடைய ஒப்பற்றதேவியானவள் மின்னலையொத்தவடிவினையுடையவள் அந்த அம்மாளுடைய திருவயிற்றிலே உமாதேவியையொருபாகத்திலேயுடைய பரமசிவனருளினாலே பாண்டியன் செங்கோன்முறைக்குமுதன்மந்திரியாராகிய மாணிக்கவாசகர் திருவவதாரஞ்செய்தாரென்றவாறு. (௪)

(வேறு.)

பொய்ம்மையாமுலகின்மாயப்பொங்கிருளகலவன்றோர் ... *
தம்மையாழ்நரகிற்றள்ளுஞ்சமயதாரகைமழுங்க... ..... *
வெம்மையனுடையானன்பரிதயதாமரைகளெல்லாஞ் .... *
செம்மையாய்மலரஞானதினகரருதயஞ்செய்தார் ...... *

(இ-ள்.) பொய்ம்மையாகின்ற உலகத்திலே மாயையென்னுமிக்கவிருள்நீங்கவும் அவ்விருளிலிருக்கின்றவரை ஆழ்ந்தநரகத்திலேதள்ளுகின்ற உலகாயதமுதலிய சமயங்களென்னும் நக்ஷத்திரங்கள் மழுங்கவும் எம்மையடிமையாகக்கொண்ட சிவனடியார்களுடைய இருதயகமலங்களெல்லாஞ் செம்மையாகிமலரவும் மாணிக்கவாசகராகிய ஞானசூரியரானவருதயஞ்செய்தாரென்றவாறு. (௫)

(வேறு நாமகரணம்.)

மருவாதநெறிபூண்டமத்தனெனும்புத்தனுடன்... ... ......*
பெருவாதுவென்றசிவன்பெருநாமமிகவளர......... *
வொருவாதபிறவியிற்சென்றொருநாமமுறுதவற்குத் ...... *
திருவாதவூரரெனுந்திருநாமந்தரித்தார்கள் ......... . *

(இ-ள்.) நல்லோர்களங்கீகரியாத மார்க்கத்தைக் கைக்கொண்ட உன்மத்தனாகிய புத்தனுடனே பெரியவாதுவென்றசிவனுடையமகிமைபொருந்திய திருப்பெயர் மிகவும் ஓங்குதற்காக நீங்காதபி

றவியிலேபுகுந்து ஒருபெயர்தரியாத மாணிக்கவாசகர்க்குத் திரு
வாதவூரரென்னுந் திருப்பெயர் தரித்தார்களென்றவாறு. (௬)

(வேறு.)

தவமெனும்பெரியவித்துட்டங்கியேயங்குதித்துப்... ......*
பவமெனும்பங்கநீங்கிப்பயிலருட்குருத்துண்டாகி ......*
யவமெனுங்களைகணீங்கியாக்குவோனருளாலுண்மைச் ...*
சிவமெனும்விளைவுண்டாகவளர்ந்தது தெய்வச்சாலி........*

(இ-ள்.) தவமென்னும்பெரிய வித்தினிடத்திலே தங்கியிருந்து முளைத்துச் சனனமென்னுஞ் சேற்றினின்று நீங்கிப்பொருந்துகின்ற அருளென்னுங் குருத்துவிட்டு அவமென்னுங் களைநீங்கி யாவையும் உண்டாக்கும் பரமசிவனுடைய அருளினாலே சிவமென்னும்விளைவுண்டாகவளர்ந்தது மாணிக்கவாசகரென்னுந் தெய்வீகமுள்ளசெந்நெலென்றவாறு. (௭)

(வேறு-அன்னப்பிராசனம்.)

தேனினொடுகரும்பினெழுஞ்செழும்பாகுமுக்கனியு.......*
மானினறும்பாலுமுடனளவியுள்ளங்களிகூர ......*
வீனமிகும்பலயோனிப்பிறவியெனும்பசிதீர............*
ஞானவமுதுண்பார்க்குநயந்தமுதூநுகர்வித்தார்.... ... ....*

(இ-ள்.) இழிவுமிகுந்த அனேகயோனிகளிற்சென்று பிறக்கும் பிறவியென்னும் பசிநீங்க ஞானமிர்தம் உண்ணும் மாணிக்கவாசகர்க்குத் தேனுடனே கரும்பினிடத்துண்டாகின்ற செழுமைபொருந்திய பாகும் பலாப்பழம், வாழைப்பழம், மாம்பழம், என்னுமுக்கனிகளும் பசுவினது நல்லபாலும் ஒன்றாகக்கலந்து மனமகிழ்ச்சியடைய நயப்புடனே உண்பித்தார்களென்றவாறு. (௮)

(சௌளம்.)

காயமுடனுயிர்முயலுங்கருமமெலாம்பரனருளாற்.......*
றூயமனத்துணர்ந்துவினைத்தொகையெழுதிநாடோறு.....*
மாயதுயர்சுகமளிக்குமயமன்கணக்கிலரும்பாவத் ... .......*
தீயசிகையில்லார்க்குச்சிறந்தசிகைவருவித்தார் ..... ..... ...*

(இ-ள்.) உடலுமுயிருஞ் சேர்ந்துநின்று முயன்றுசெய்யுந்தொழிலெல்லாம் பரமசிவனுடையஅருளினாலே பரிசுத்தமானமனதிலே அறிந்து நல்வினை தீவினைத்தொகைகளை யெழுதி அவைகட்கீடாகநாள்தோறும் அனுபவிப்பதற்கான சுகதுக்கங்களை வரை யறுத்து நியதிசெய்யும் கூற்றுவனுடையகணக்கில் அடங்கிய பாவத்தீமையாகிய குடுமியிலலாத மாணிக்க வாசகர்க்குச் சிறப்புப் பொருந்திய குடுமியைவைத்தார்களென்றவாறு. (௯)

(வித்தியாரம்பம்.)

குலவபமங்கையைநீங்கோலஞ்செய்தரும்பொன்னு ......... *
நவமணியுந்தொகைசெய்துநன்குடன்மங்கலநாளித்......... *
தவமணமுந்திருநீற்றின்றன்மணமுந்தவாறுத .... ..... *
சிவமணமும்பெறக்கல்விச்செல்விமணம்புணர்வித்தார்... *

(இ-ள்.) நாட்டுநகரங்களை மிகவுஞ்சிறப்பாக அலங்காரஞ் செய்து அரியபொன்னும் நவரத்நமுங்குவித்துவைத்து நன்மையுடனேயொரு சுபதினத்திலே தவமணமு நல்லதிருநீற்றுமணமுந் தவறில்லாத சிவமணமும்பெறும்படிக்கு ஒருபாத்தியாயர் முன்னிலையிலே கல்வியென்னுமங்கையைமாணிக்கவாசகருக்குமணஞ்செய்வித்தார்கள். எ-று. (௰)

(உபநயனம்.)

இதுநூன்மற்றல்லநூலிவையெனுமறுசமய......... *
விதநூலுநலநூலும்விரிந்தபுராதனநூலும்... *
பொருணூலுமிலக்கணத்தும்புகழ்மறைநூலுஞ்சைவ,
முதனூலுந்தெரிப்பார்க்குமுந்நூலுந்தரித்தார்கள் .. * ●

(இ-ள்.) மெய்ம்மையுள்ளநூலிதுவேயல்லாமல் இப்படிப்பட்ட நூல்வேறில்லையென்றுவாதிக்கும் சட்சமயிகள் நூல்களும் வேதபுராணநூல்களும் விரிந்து விளங்குகின்றபதினெண்புராண நூல்களும் உலகமெல்லாம் பொருணூலென்று புகழுகின்ற நாலுவேதநூல்களும் பழமையாகிய சிவாகமநூல்களுந் தரிப்பவராகிய மாணிக்கவாசகருக்கு முப்புரிநூலுந்தரித்தார்களென்றவாறு (௰௧)

மிக்கலையுஞ்செழுநீருமதிக்கலையுமிலக்குமவ... ........ *
ரக்கலையுந்தோளாபுலியதட்கலையார்நல்லருளா ... ....... *
லொக்கலையும்பிறக்கலையுமொழிந்துமோகமகலையு ...... *
மெக்கலையுமகற்றுணர்ந்தாரீரெட்டாண்டெல்லையினில் *

(இ-ள்.) மிகுந்து அலைகின்ற செழுமைபொருந்திய கங்காநதியும் மூன்றாம்பிறையுந் தரித்தவராயும்- எலும்பணியலைகின்ற தோளையுடையவராயும்புலித்தோலாகிய வுடையையணிந்தவராயு மிருக்கின்ற பரமசிவனுடையநல்லகிருபையினாலே மேற்கபந்துக்களையும்பிறவித்துன்பத்தையும் நீக்குகின்ற சிவாகமங்களும் மற்றெந்த நூல்களும்பதினாறுவயதளவிலேகற்றறிந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௰௨)

உழைக்கரனுக்கன்பாகியுண்மையறிந்துலகமெலாம் ...*
பிழைக்கவருட்கவிபாடும்பெரியவர்தஞ்செயலெல்லாம்*
தழைத்தகலத்தமிழ்மாறன்றக்கோர்களுரைப்பவறிந்...*
தழைத்துரிமைத்திறநல்கியகலாநண்பாயினன் ... .... *

(இ-ள்) மானேந்தியகையினையுடைய பரமசிவனுக்கு அன்பாகி மெய்ப்பொருளறிந்து உலகமெல்லாம் பிழைக்கும்படி திருவாசகம் பாடியமாணிக்கவாசகருடைய செய்கையெல்லாம் தழைத்திருக்கின்ற தமிழைவளர்க்கும் பாண்டியராஜனானவன் பெரியோர்கள் சொல்லக்கேள்விப்பட்டு அவரை யழைப்பித்துத் தனக்குரியராக்கி அவருக்குநீங்காதசிநேகனானனென்றவாறு. (௰௫)

சங்கோலமிடும்பழனத்தடம்புடைசூழ்வாதவூ ........*
ரெங்கோவின்செய்கையறிந்தியல்புடையோமானநாடிப்
பொங்கோதவேலைநிலம்புரந்துபெரும்பகைதுரந்து *
செங்கோன்மைமுறைநடத்துஞ்செழுந்தலைமைத்திறநல்கி

(இ-ள்) சங்குகள்சத்திக்கின்ற விசாலமாகிய வயல்கள் புடைசூழ்ந்த திருவாதவூரிலவதரித்தமாணிக்கவாசகருடைய கல்வி முதலியவைகளின் வல்லமைதெரிந்து தகுதியை யுடையனென்றறிந்து மிகுந்த சத்தத்தையுடையகடல்சூழ்ந்த பூவுலகத்தை ரட்சித்துச்சத்துருக்களைக்களைந்து மனுநீதிமுறைமைநடத்தும்முதன்மையாகிய மந்திரித்தனங்கொடுத்தான் பாண்டியராஜனென்றவாறு. (௰௬)

(வேறு.)

தென்னவன்பிரமராயனென்றருள்சிறந்தநாம ......*
மன்னவர்மதிக்கநல்கிவையகமுய்வதாக ... ... ... ......*
மின்னவமணிப்பூணுடைவெண்மதிக்கவிகைதண்டு... *
பொன்னவிர்கவரிவேழமளித்தனன்பொருனைநாடன் .*

(இ-ள்) பின்னுமரசர்களெல்லா மதிக்கும்படி தென்னவன் பிரமராயனென்றுசிறக்கப்பெற்ற ஒரு திருப்பெயர்கொடுத்து உலகம்பிழைக்கும்படி மின்னுகின்ற நவரத்ந ஆபரணமும் பீதாம்பரமும் வெள்ளியசந்திரவட்டக்குடையும்சிவிகையும்பொற்பிரகாசமுடைய வெண்சாமரங்களும்யானைகளுங்கொடுத்தான்பாண்டியராஜன். எ-று.

இந்திரச்செல்வம்போலவிசைந்துளவின்பமெய்தி ....*
மந்திரத்தலைமைபூண்டவண்புகழ்வாதவூரர் .. .........*
தந்திரத்தொகுதிசூழத்தாரகைக்கணங்களோடு .........*
மந்தரத்திழிந்துமண்மேலமர்ந்தவெண்மதியமொத்தார்

(இ-ள்.) இந்திரசம்பத்துப்போல இசைந்திருக்கின்றபாக்கியத்தினால் இன்பத்தைப்பொருந்தி முதன்மந்திரி யாகப்பெற்ற வளம் பொருந்திய புகழையுடைய வாதவூரரானவர் மற்றமந்திரிகள் பிரதானிகள் கூட்டங்கள்சூழ இருத்தலால் நக்ஷத்திரக்கூட்டங்கள்சூழ்ந்

திருக்கைலாசத்தினின்றிழிந்து பூலோகத்திலமர்ந்து வெள்ளியசந் திரனைப் பொய்ச்சாதென்றவாறு. (௰௬)

பொங்கடலுகநீதிபெருக்கியேயதருக்குநல்கி ……… *
பெருங்கடகதத்தாண்மேலமைத்திண்டருள்பூண்டகோவுங்
கருங்கடநாகமெட்டுங்காளமாநாகமெட்டும் ……*
பருங்கடவுலகபாரப்பரித்தனர்திருத்தமிக்கார்… *

(இ-ள்.) பெரிய கடமையாக நீதியை விர்த்திபண்ணி யாவர்க்கு நீங்களிப்பையுண்டாக்கிப் பெரியகங்கணமணிந்த தம்முடைய தோளின்மீது வைத்துக் காக்கும் கிருபையையுடைய பாண்டியராஜனும் கரியமதம்பொழிகின்ற அஷ்டகஜங்களும் விஷத்தையுடைய அஷ்டமநாகங்களும் சுமக்கின்றபூமிபாரம்நீங்கத் தாம்சுமந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௰௭)

காதலித்தறஞ்செய்வோர்க்குக்கவசமுங்கண்ணுமாகி ….*
யேதிலர்க்கிடும்பையாகியிறைஞ்சுவோர்க்கின்பமாகி … *
யாதுலர்க்கன்னையாகிப்பரனடிக்கன்புமிக்கார் …. … *
பூதலத்திறைவனாணைபொதுவறநடத்துநாளில்… …*

(இ-ள்.) விருப்பங்கொண்டு தருமஞ்செய்பவர்க்குத் துன்பம்வாராமற்காக்கின்றஒருகவசமாகியுஞ்சிறந்தகண்களாகியும் மற்றவர்களுக்குத்துன்பத்தைத்தருகின்றாரையும்வணங்கினவர்களுக்கு இன்பத்தைத்தருகின்றவராயும் ஏழைகளுக்குத்தாயாகியுஞ்சிவனுடைய திருவடியின்மேல் அன்புமிகுந்தவருமாகியமாணிக்கவாசகர்பூவுலகத்திற்கு அரசராகிய பாண்டியராஜனுடையாணையைப் பொதுமைநீங்க நடத்துகின்ற நாளிலென்றவாறு. (௰௮)

பற்பலபொருளாயுள்ளபாசமுமதனைமேவி………*
புற்பவபேதமானவுடம்புயிரொடுங்குமாறு ……. *
மற்புதபுத்திமுத்தியளித்தருள்மேலாமமலன் … ….*
தற்பரநடத்துமாறுமுணர்ந்தனர்சைவநூலின்……*

(இ-ள்.) பலபலசத்திகளாயிருக்கின்ற மலங்களும் அம்மலங்களைப்பொருந்தி எழுவகைப்பிறவிதோறும் பேதப்படுகின்ற உடம்பும் உயிரும் ஒடுங்குகிறவிதமும் ஆச்சரியமாகப் பந்தமோக்ஷங்களைக் கொடுத்து கிருபையினாலே மேலாகியபரமசிவன் நடத்தும்விதமும் சிவாகமங்களாலறிந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௰௯)

அவ்வியமனத்தினாலேயனைத்துருவங்கள்கூடி …. ……*
யிவ்வுயிர்பிறந்துமீளவிறந்துமம்மயக்கிறங்கி ……*
வெவ்வெயிலவருத்தமுற்றோர்மென்னிழல்விரும்புமாபோ
லெவ்வியுமழுவுமேந்துநம்பனுக்கன்புமிக்கார்…… …*

(இ-ள்.) அழுக்காற்றையுடையமனதினாலே எல்லாவுருவங்களோடு ங்கூடி இந்தவுயிர்பிறந்து மறுபடி இறந்திடுமென்று இரக்கமுற்று க்கொடியவெய்யிலிலே வருத்தப்பட்டவர்கள் மெல்லியநிழலை யிச் சிக்குமாறுபோல மானுமழுவுமேந்திய பரமசிவனிடத்திலே அன் புமிகுந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௨௰)

தீத்திறவினையினாலேசிறைப்படுமுயிரையெல்லாம்... *
பார்த்தனருலகவாழ்விற்பயநிலையென்றுதேர்ந்து... *
கூத்தினர்தன்மைவேறுகோலம்வேறாகுமாபோ *
லீத்தினர்மனத்தின்முன்போனிகழ்த்தினர்முதுநீதி. *

(இ-ள்.) பொல்லாததீவினையினாலே கட்டுப்பட்டுப் பிறப்பிறப்பி ல் வருந்துகின்ற சீவகோடிகளைப்பார்த்து உலகவாழ்வில் ஒருபிர யோசனமுமில்லையென்று தெளிந்து கூத்தாடிகளுடைய கருத்து வேறும் வேஷம் வேறுமாவதுபோல உலகவாழ்க்கைகளையும் பொய் யென்று மனதிலேநினைத்தவராய் முன்போலப் பாண்டியராஜனு டையநீதிமுறை நடத்திக்கொண்டுவந்தார் திருவாதவூரரென்றவாறு.

வரமுடன்புவியிற்றோன்றுமறையவர்க்கிறைவருண்மை *
தருமுணர்வென்னுநாலாஞ்சத்திநிபாதமெய்தி... ...*
பரமவஞ்செழுத்துமொன்றும்பராபரமுணர்ந்தஞான
குருபரன்றிருத்தாள்சென்றுகூடுதல்வேண்டுமென்று. *

(இ-ள்) அனுக்கிரகத்தினாலே பூலோகத்திலேதிருவவதாரஞ்செய் தமாணிக்கவாசகர் உண்மையறிவைத்தருவதென்னப்பட்ட அதிதீவிர பக்குவத்தைப்பெற்றுஉயர்ந்தஅஞ்செழுத்தின்பொருளாயுள்ள சிவ த்தையறிவிக்குஞ்ஞானாசாரியன்திருவடியைக்கூடவேண்டுமென்று நினைத்தாரென்றவாறு. (௨௨)

மற்கடவிலங்குதன்னால்வளங்கெழுவிளவின்மேவு .....*
நற்கனிகொள்ளவேண்டிநயந்துகல்லெறிவார்போலச்..*
சற்குருவுளரோவென்றுநாடுவார்தர்க்கமெல்லாஞ்..... *
சொற்கலைஞானசைவர்தம்முடன்சொல்லலுற்றார்.....*

(இ-ள்.) குரங்காகிய மிருகத்தினாலே வளம்பொருந்தியவிளவினு டைய நல்லபழம் பெறவிரும்பி நயப்புடனே கல்லைவிட்டெறிவார் கள்போல் நலலகுருவுண்டோவென்று தேடுவாராகியமாணிக்கவாச கர் வாதங்களெல்லாஞ்சொல்லுகின்ற கலைவியிலேவல்ல சைவாசாரிய ர்களுடனேபேசிப் பிரசங்கம் பண்ணினாரென்றவாறு. (௨௩)

வளங்கெழுபுவியினுள்ளவாவியங்காவுமோடி........*
விளங்கிலைவண்டுதண்டேன்மிகுமலர்தேடுமாபோ ...*

துளங்கொளிமலநன் னூலோதினருண்மையெல்லா... *
மளந்தறிவுணர்ந்ததீரர்யாவரொன் றாயுநாளில் .... ..... *

(இ-ள்.) வளம்பொருந்திய பூலோகத்திலேயுள்ள தடாகங்களிலுஞ் சோலைகளிலுஞ்சென்று விளங்குகின்ற இசையையுடைய வண்டுகள்குளிர்ந்த தேனிறைந்த மலர்களைத்தேடுவதுபோல மனங்கொள்ளச் சிவாகமங்களைக்கற்றறிந்த மாணிக்கவாசகர் மெய்ப்பொருளெல்லாம் அளவைசெய்து அறிவிலேயறிந்த தன்மையையுடைய ஞாஞசாரியர் யாவரொன் றாயுநாளிலென்றவாறு. (௨௪)

வேறு.

மேதகுவனிதையரொங்கணும்வீசியகவரியசைந்தெழ...*
மாதவமுனிவர்களந்தணர்மாசறுகவிஞர்செறிந்திட *
பேதமிலமதிகுலபுங்கவனேர்செழுமணிமுடியின்றிர.*
ளாதவன்மிசையெழவந்தரியாசனமதனிலிருந்தனன். *

(இ-ள்)மேன்மையையுடையமங்கையர்கள்வீசுகின்றசாமரைகளெங்குமசையவும் மகத்தாகியதவஞ்செய்கின்ற முனிவர்களும் பிராமணர்களுங் குற்றமற்றவித்துவசனங்களும் நெருங்கவும்பழுதில்லாத சந்திரகுலத்துமேலவந்த அரிமர்த்தனபாண்டியராஜாவானவன் அழகு பொருந்திய இரட்சியையுடைய மணிகள்பதித்த கிரீடமாகியசூரியன்சிரசின்மேல உதயமாகும்படிவந்துசிங்காதனத்திமேல எழுந்தருளியிருந்தானென்றவாறு. (௨௫)

தாதகிமார்பனெடும்புவிசார்தருமாழ்கடலிற்கரை .. *
தீதிலமாதுரகங்கொடுசேர்கெழுமாரியர்வந்தன... ...*
மோதமிலாயதுகண்டனமியாமெனவேதொழுதன்பொடு.
மேதினிகாவலன்முன்சிலமேதகுதூதர்விளம்பினர் .. *

(இ-ள்.) அப்பொழுது ஆத்திமாலையணிந்த மார்பையுடையசோழராசனுடைய நெடியதேசத்திலேசேர்ந்த கடற்கரையிடத்தே குற்றமற்ற மேன்மைபொருந்திய குதிரைகள்கொண்டு சிறப்புப் பொருந்திய ஆரியதேசத்தார வந்திருக்கின்றார்கள் பழுதற்றபாண்டியராஜனே யாங்களதுபார்த்தோமென்றுவணங்கி அன்பினுடனே புவிகாவலனாகிய அரசன்முன்னே மேன்மைபொருந்திய சிலதூதர்கள்சொன்னார்களென்றவாறு. (௨௬)

ஏவல்செய்வார்களிலிங்கிவரோபரிவாணவரொன்றிகல் ... *
மேவியதூதரைவன்றிறன்மீனவர்கோனுமகிழ்ந்துபின் *
வாவுநன்மாதுரகங்கொடுவாருமெனவுபுவிலுந்தன.... . *
தாவியுமாயரனன்புடையார்முகதாடிமொழிந்தனன் *

(இ-ள்.) நம்முடைய ஏவல்செய்பவர்க்குள்ளே இவர்களே அன்

புடையவர்களென்று அந்த வலிமைபொருந்திய தூதர்களைச்சௌரியத்தையுடைய பாண்டியராஜன் மகிழ்ந்து பின்பு தாவுகின்றநல்ல குதிரையைக் கொண்டுவாருமென்று தனதுடனே யிருக்கும்போன்றவராயுஞ் சிவனிடத்திலே அன்புள்ளவராயுமிருக்கின்ற வாதவூரர்முகத்தைப்பார்த்துச் சொன்னானென்றவாறு. (உ௭)

மீனவர்கோன்மொழியின்படிமேனியனேசரிசைந்தபின் *
ஞானவசாத்தியுடன்புவியாள்பவன்வசிகொளும்படி *
வானவிமானமெனுந்திருவாழ்வுளகோயில்புகுந்ததன் *
னீனமிலாவெனவந்தபொன்னேழுகோடிவழங்கினன்.

(இ-ள்.) அப்படிசொன்ன பாண்டியராஜனுத்தரவின்படிசிவனுக்குநேசராகிய வாதவூரர் உடன்பட்டபின்பு மலர்ந்த முகத்தையுடையவருமாய்ப் பூவுலகையாளுகின்ற பாண்டியராஜன் குதிரைகொள்ளும்படிக்குத் தெய்வவிமானமென்றுசொல்லத்தக்க செல்வம்பொருந்திய அரமனைக்குள்ளேபோய் நல்வழியிற்சம்பாதித்த தன்னுடைய திரவியத்திலே நாற்பத்தொன்பதுகோடி பொன் கொடுத்தானென்றவாறு. (உ௮)

விற்படைவெற்றிமடந்தையுமிக்கமலர்த்திருவும்பயில் *
மற்புயவெற்பினனங்கயல்வைத்தவலத்தன்வழங்கிய *
பொற்புமிகுத்ததனங்கொடுபொற்கவனப்பரிகொண்டிட
நற்பயணத்தைநயன்றனர்தககனைநெக்குணர்கின்றவர்.

(இ-ள்) விற்படையுடனே விஜயமங்கையும் மேலாகிய தாமரைமலரிலிருக்கின்ற ஸ்ரீதேவியுந்தங்குகின்ற புஜத்தையுடையவனுமாகியும் மீனக்கொடியைவலதுபக்கத்திலுயர்த்தவனுமாயுமிருக்கின்ற பாண்டியராஜன்கொடுத்த அழகுமிகுந்ததிரவியத்தைக்கொண்டு வேகத்தையுடையசிறந்த குதிரைபக்கொள்ளுதற்கு நல்ல வேளையிலே பிரயாணங்கொள்ள முயர்ச்சிசெய்தார், பரமசிவனையே உருகிநினைக்கின்ற மாணிக்கவாசகரென்றவாறு. .... ... ... ... ... ... ... (உ௯)

மெய்த்தவருற்றபெருந்துறைவித்தகனைக்குறுகும்படி *
யித்தகுநற்பொருள்கொண்டிநீயிப்படியிற்செலுமென்றவி
னைத்தகுபுத்தியொழிந்துயிரற்புதமுத்திபெறும்படி *
யுய்த்துளசத்தியுடன்பொருவொத்தனனுத்தமபஞ்சவன்

(இ-ள்) உண்மையாகிய தவத்தினையுடையோர்களிருக்கின்ற திருப்பெருந்துறையிலே ஞானதேசிகனையடையும்படி இந்தத்தகுதியுள்ள நல்லபொருளையெடுத்துக்கொண்டு இந்தப்பூமியிலே போமென்று சொன்னபடியால்பழையவினையெல்லாமொழிந்து உயிரானதுமேலாகியமோக்ஷத்தைப்பெறும்படிச் செலுத்துகின்ற அருட்சத்திக்குச்சமானமானான்உத்தமனாகியபாண்டியராஜனென்றவாறு...... (௩௰)

பற்றிலர்பெற்றசிவன்கழல்பற்றினைாக்கலைவண்டமி .*
ழுற்றமலைக்கிறைவன்றனையொக்கமதித்தருள்கொண்டலை
விற்றுவசத்தனைப்படைமிக்கபுலிக்கொடியன்படை.*
மற்றுளகொற்றவர்தம்படைவர்க்கமுமுற்கொடெழுந்தன

(இ-ள்) ஒருபொருளிலும் பற்றில்லாதவராயும் பரமசிவனுடைய திருவடியிற்பற்றுள்ளவராயும்இருக்கின்றவரைாவண்மைபொருந்திய தமிழ்விளங்கியிருந்த அந்தப் பொதியமலைக்குஅரசனாகிய பாண்டியனுக்குச்சமானமாகமதிக்கத்தக்ககிருபாமேகமாகிய மாணிக்கவாசகனைாவிற்கொடிபடைத்தசேரமானுடைய நெடியசேனைகளும் பிருந்தபுலிக்கொடிபடைத்தசோழனுடைய சேனைகளும் மற்றுமுள்ள அரசர்களுடையசேனைகளுஞ்சூழ்ந்துபுறப்பட்டனவென்றவாறு. ௧௧

உக்கிர நச்சுரகங்களினுச்சிபணிப்பவசைந்தடி ... *
வைகுமுரத்தனவெங்கயடைக்கரியொக்கமலிந்தன.. *
பக்கமுமுற்பிறகுந்துடிபற்பலகொட்டவியங்குவ... *
தக்கமனத்தினவிரைந்துளதத்துபரித்திரள்வந்தன . *

(இ-ள்) உக்கிரமானவிஷமுள்ள ஆதிசேஷனுடையதலைகளும் அஷ்டமாநாகங்களினுடைய தலைகளும் நடுங்க அசைந்து அடிபெயர்க்கின்ற வலிமையையுடையனவாகிய வெவ்வியயானைகள் நீலகிரிகளுக்குச்சமானமாய் நெருங்கின இரண்டுபக்கமும் முன்னும்பின்னும் அனேகந்துடிகளடிக்க மனோவேகத்தினுஞ் சீக்கிரமாகச் செல்லுகின்றனவாகிய தகுதியுள்ள குதிரைக்கூட்டங்கள் வந்து சூழ்ந்தன வென்றவாறு. (௧௨)

(வேறு.)

கொணர்கலிங்கரொடுகொங்கர்துளுநாடர்......... ... *
சிங்களர்களொட்டியர்தெலுங்கரொடுசீனர்... ... ......*
தங்குதிறன்மாளவர்மலாடர்தமிலொன்று ......... ..... *
மெங்கணுமிடைந்தவர்களெண்ணமுடிவில்லார் ...... *

(இ-ள்) கொங்கணதேசத்தார்-கலிங்கதேசத்தார் -கொங்குதேசத்தார்-துளுவதேசத்தார்-சிங்களதேசத்தார் ஒட்டியதேசத்தார்-தெலுங்கதேசத்தார்-சீனதேசத்தார்-மாளவதேசத்தார்-மலையாளதேசத்தார் இவர்களெல்லாம்தங்களுக்குள்ளேஒன்றாகக்கூடி என்னுதற்குஅளவுபடாதவர்களாய் எவ்விடத்தும் நிறைந்தார்களென்றவாறு (௧௩)

இத்திறமெழுத்தபடையெங்கணுநெருங்கத் .........*
தத்துபரிமீதுளதமிழ்க்கவிஞர்சூழச் ..... ....... ...... *
சித்திரமடந்தயர்திரண்டிருமருங்கு ........ .. .... .. *
மொய்த்துவரவீணைகுழன்முன்னரிசைகொள்ள ......*

(இ-ள்) இந்தப்பிரகாரமெழுந்தசேனைகள்எவ்விடத்தும் நெருங்கத்திநடக்கின்ற குதிரையின்மேலே தமிழ்க்கல்வியின் மிக்கபுலவர்கள்சூழ்ந்துவர அழகியமங்கையர்கள் கூட்டங்கொண்டு இரண்டுபக்கத்திலும்நெருங்கிவரவீணையும்புள்ளாங்குழலும் முன்பாக இசைகள்செய்துக்கொண்டுவரவென்றவாறு. (௫௪)

கட்டுமளகத்தினர்கனத்துளதனத்தால்.............. *
பட்டிடைமருங்கினர்பணிக்கவரிவீச................ *
வட்டமதிவெண்குடைவயங்குமுரசெங்குங் .... .. ......*
கொட்டவுயர்காளமொடுகோடுகள்கறங்க............ *

(இ-ள்) கட்டுகின்ற கூந்தலையுடையவரும் கனத்த ஸ்தனபாரமுள்ளவரும் பட்டுவஸ்திரமணிந்தஇடையையுடையவருமாகிய மங்கையர்கள் நலிந்து நகைத்திறைத்தருகின்ற வெண்சாமரைகள்வீசவும்வெள்ளிய சந்திரவட்டக்குடைகள்பிடிக்கவும் பேரிகைகள் எங்கும் அடிக்கவும் உயர்ந்தஇன்னிசைகளோடுசங்கங்கள்தொனிக்கவுமென்றவாறு... (௫௫)

மின்டிபுரபாடகர்வியந்துகரவாரங் ... .............. *
கொண்டுபுடைசூழவெழிலஞ்சேர்குழலர்பாடத் ... ..... *
தண்டரளமல்கியநனிச்சிவிகைமேல்கொண்... ........*
டெண்டிசைமிகப்புகழ்கயற்கொடியிலங்க... ........ *

(இ-ள்.) நெருங்கியுள்ள பாடகர்களதிசயித்து வாழ்த்திக்கொண்டு பக்கத்திமேல சூழ்ந்துவரவும் அழகுசேர்ந்த கூந்தலையுடைய மங்கையர்கள்பாடவுங்குளிர்ச்சிபொருந்திய முத்தினாற் செய்த நெருங்கியலைப்பற்ற சிவிகையின்மேலேறிக்கொண்டு எட்டுத்திக்கும் மிகவும் புகழ்கின்ற மீனக்கொடிபிரகாசிக்கவுமென்றவாறு. (௫௬)

மங்கலதினத்திநெடுமாளிகையகன்றே...........*
துங்கமணிபக்கையணிசொக்கனைவணங்கி .. .... ....... *
பங்குவிடைபெற்றுமறையந்தணரின்மிக்கார் .. ......*
திங்கண்மரபிற்குரிசில்கோயிலுழைசென்றார் .... .. *

(இ ள்.) இந்தப்பிரகாரம் இவைகளெல்லாந்தம்மைச் சூழும்படி சுபமானதினத்திலே நெடியதிருமாளிகைவிட்டுநீங்கி உயர்சசிபொருந்திய சங்குமணியணிந்த சொக்கநாதனைத்தொழுது அனுப்புவித்துக்கொண்டு வேதப்பிராமணரின் மிகுந்தமாணிவாசகர் சந்திரவம்சத்திற்றோன்றியபாண்டியராஜனிருக்கும் அரமனைக்குப்போனார். என்றவாறு. (௫௭)

சென்றுதமிழ்மாறனருள்பெற்றெழில்சிறக்கும்.... ... *
வென்றிவளவன்புவியின்மேன்மையொடுசெல்வார் .... *

குன்றனையமாடமொடுகோபுரநெருங்கு ... ............*
நன்றிமதுரைப்பதியைநன்கொடுகடந்தார் ....... ......*

(இ-ள்.) பாண்டியராஜாவினுடைய அரமனைக்குப்போய் அவனுடைய கிருபையும் பெற்றுக்கொண்டு அழகுசிறந்த வெற்றியையுடைய சோழராஜாவிருக்குஞ் சோழதேசத்திற்கு மேன்மையுடனே செல்லுகின்ற மாணிக்கவாசகர் மலைக்குச்சமானமாகிய உப்பரிகைகளும் கோபுரங்களும் நெருங்குகின்ற நன்றியையுடைய மதுராபுரியை நன்மையோடு நீங்கினா ரென்றவாறு. (௩௮)

நெடுங்குடதிசைக்கடனிறைந்தொலிசிறந்தே ...... *
புடைந்துதயநற்றிசையினுற்றவருமாபோன் .... .. ...*
மிடைந்தபதியுங்கடமும்வெற்புமிவையெல்லாங் ......*
கடந்துபதிசென்றுபலகாவதமகன்றார் .. ......... *

(இ-ள்) நெடியமேற்றிசைக்கடலானது நிறைவுடனே சத்தமிகுந்து உடைந்துபோய்க் கீழ்த்திசையிற்புரண்டு வருகிறதுபோலநெருங்கிய நகர்களும் காடுகளும் மலைகளுங்கடந்து வழிக்கொண்டு அனேகங்காதவழி நீங்கினார் மாணிக்கவாசகரென்றவாறு. (௩௯)

என்றுமுளபொன்றுமுடவென்னுநகர்தோறுஞ்.....*
சென்றவழிமாறியொருதெய்வவழிசெல்வார்..........*
நன்றியுளமுத்திபெறநம்பர்தமதன்பா...... ... ......*
லன்றுயர்பெருந்துறையடைந்தபடிசொல்வாம்......*

(இ-ள்.) என்றுந் தோன்றித்தோன்றிக் காணப்பட்டுக்கொண்டுவருகிறதேசமென்னும் ஊர்கள்தோறுஞ்சென்று வழிதப்பி ஒருதெய்வதன்மையாகிய வழியிலே செல்வாராகிய வாதவூரர் நன்மைபொருந்திய மோட்சத்தையுடைய பரமசிவனுடைய அன்பினாலே அன்று உயர்ந்த திருப்பெருந்துறையில் சேர்ந்த தன்மையைச் சொல்லுவா மென்றவாறு. (௪௰)

மந்திரிச்சருக்க முற்றுப்பெற்றது - ஆகவிருத்தம்-௪௰.



## திருப்பெருந்துறைச் சருக்கம்.



(வேறு.)

பழமறைமுழுதுணரந்தணர்பலர்தொழநடமியல்கின்றவர்*
மழுவுழைகரமிசைகொண்டிடமருவியகவுரிமகிழ்ந்திட.....*

# ௧௬ திருப்பெருந்துறைச்சருக்கம்.

விழைதருமிரசிதபொங்கொளிவிடுமுயர்கயிலைவிலங்கலி. .. ✻
லழகுதருதமணிபமண்டபமதனிலடையருள்கொடிருந்தனர்...✻

(இ-ள்) பழமையாயுள்ள நான்குவேதங்களையும் ஓதியுணர் தில்லைமூவாயிரவர் வணங்கப் பொன்னம்பலத்தில் நிருத்தஞ்செய்கின்ற கடவுளானவர் மழுவுமானுந் திருக்கரங்களிற்கொண்டு வாமபாகத்திலிருக்கும் உமாதேவிமகிழ்ச்சியடையயாசருப்விரும்பியட்டி உயர்ந்த வெள்ளிமயமாகிய கைலாசகிரியில் அழகியஒரு பொன் மண்டபத்திற்கிருபையுடனெழுந்தருளியிருந்தாரென்றவாறு. (௧)

மதுமலர்கரமிசைகொண்டுநின்வழிவழியடியவரொன்றுதம் ✻
முதுமறைதெரியமொழிந்தெதிர்முறைமுறைமுனிவர்வணங்
கின, ரிதுபரனருளைவழங்குவதெனவரிபிரமரொழுந்துதம்...✻
பதநிலைபெறவருளென்றிருபரிபுரகமலங்கள்பணிந்தனர்.... ✻

(இ-ள்) தேனையுடைய மலர்களைக்கைகளிலேகொண்டுஉமக்குவழிவழியாகிய அடிமையுடையோமென்று பழையவேதங்களையோதித்திருமுன்னே நின்று வரிசைவரிசையாக முனிவர்கள் வணங்கினார்கள் இது கடவுளனுக்கிரகம்பண்ணுகிற காலமென்று பிரமவிஷ்ணுக்களெழுந்திருந்து தங்கள் பதங்களை நிலைபெற அனுக்கிரகம்பண்ணுமென்று சிலம்பணிந்த இரண்டு திருவடித்தாமரைகளையும்பணிந்தார்களென்றவாறு. (௨)

பரவருமணிகள்விளங்கியபணவரவணியரனங்கமு......✻
மருவியதாளவடந்திகழ்மதிநுதன்மலைமகளங்கமு ... ✻
மிரவியுமதியுமிருந்தெனவெதிரெதிரிலகுதல்கண்டன✻
ரரகரசிவசிவவென்றுளமயர்வுறவழுதனரன்பினர் .. ✻

(இ-ள்) சொல்லுதற்கரிய ரத்நங்கள்விளங்கிய படத்தையுடைய சர்ப்பங்களைத்தரித்த பரமசிவனுடைய வடிவமும் குளிர்ச்சிபொருந்திய முத்துமாலைகள் பிரகாசிக்கின்ற மூன்றாம்பிறைபோலு நெற்றியையுடைய உமாதேவியினது வடிவமும் சூரியனும் சந்திரனும் இசைந்துஇருத்தல்போல ஒன்றுக்கொன்று இசைந்துபிரகாசிப்பதைப்பார்த்தவர்களாய்அரகரசிவசிவவென்றுமனங்கரைந்துஅன்பினால ஆனந்தக்கண்ணீர்விட்டுருகினார்களென்பார்களென்றவாறு.

அடியெரிமரமெனநொந்துமின்னவணியில் விழுவதொழிந்
துநி,ன்னுடனுலறபெருமையழங்குவதுளதுகொலெனநினை
நெஞ்சொடு, மடலவிழ்கடிகமழ்தரு மலர்பலமுறைமுறை
ஞ்சுசிந்துமுன், னிடமிசைதெனமகிழ்த்திர னிமையவரெவருமி
றைஞ்சினர்.......................................✻

(இ-ள்.) சம்பாதித்த புண்ணியங்களெல்லாந் தெய்வலோகத்திலனுபவித்து அதுமுடிந்தபின்பு அடியற்றமரம்போல நொந்து பூலோகத்திலேவந்து பிறக்கிறதொழிந்து உன்னுடைய சமீபத்திலிருக்கும் பெருமையைவழங்குவது முண்டோவென்று நினைக்கின்ற நெஞ்சுடனே மிதழ்விரிந்த வாசனையுள்ள பஞ்சதருவினுடைய மலரை அனேகந்தரந்தூவி நினைக்கத்தக்க விடம் இதுவென்றுமகிழ்கின்ற தேவேந்திரனும் தேவர்களும்வணங்கினார்களென்றவாறு.(௪).

(மேவறு.)

திண்டிறன்மிகுஞ்சுரிகையுந்திகழ்பிரம்பும்......... ... *
கொண்டருகுநின்றுகுருநந்தியருள்கூரப் ........,..... *
புண்டரிகமாதுபுவிமங்கையெழிற சிங்கா...... ......... *
வண்டர்மடவார்க்குலகன்னைபுறமன்ன... .. ... ......*

(இ ள்) மிகுந்த வலிமையுடைய உடைவாளும் பிரகாசிக்கும்பிரம்பங்கொண்டு அருகேநின்று குருவாகிய நந்திகேஸ்வரர்கிருபையிருந்திருக்கச் ஸ்ரீதேவியும் பூதேவியும் குறைவில்லாத அழகையுடையதெய்வமங்கையரும் உலகத்திற்குத்தாயாகிய உமாதேவியின்பக்கத்திலிருக்கவென்றவாறு. (௫)

துன்னுபலபூதகணநாதர்புடைசூழக் ........... ......*
கின்னரர்கள்கந்தருவர்கீதவிசைபாட.......... .... *
மின்னுமுடிமன்னுநதிவீசுதிரைநல்லி... ... ... *
பொன்னமலெவாளிர்சாமரையெழுந்தழகுசெய்ய ..... *

(இ-ள்) அநேக பூதகணநாதர்கள்நெருங்கிப் பக்கங்களிலேசூழ்ந்து ... கின்னரர்களுங் காந்தர்வர்களுங் கீதவிசைகள்பாடப் பரமனுடைய மின்னுகின்றமுடியிலிருக்குங் கங்கையினுடையவீசுகிற அலையைப்போல ஓங்கி வெண்சாமரைகள் அழகுசெய்யவென்றவாறு. (௬)

இந்தவளமல்குசபையின்னல்கெடமன்னுந்... .... .... *
தந்தைமணிமன்றினுறைதாண்டவபதத்தோன்....,.....*
செந்தமிழின்வந்தசிவஞானவமுதுண்டா.......... ..... *
மந்தமிலருட்கடலையாண்டருளவேண்டி ......... ...*

(இ-ள்) இப்படிப்பட்ட வளங்கள்மிகுந்த சபையினிடத்திலே துன்பங்களெலாம் நீங்க நிலைபெற்றிருக்கின்ற எல்லாவுலகங்களுக்குந் தந்தையாயிருப்பவரும் அழகியகனகசபையில் எழுந்தருளியிருந்து நிருத்தஞ் செய்கின்றவருமாகிய கடவுளானவர் செவ்வியதமிழிலே வந்த சிவஞான வமிர்தந்தோன்றுகின்ற அளவில்லாதகிருபைக்கடலாகிய மாணிக்கவாசகரை அடிமையாக்கிக்கொள்ள விரும்பியென்றவாறு. (௭)

# ௰௮ திருப்பெருந்துறைச்சருக்கம்.

மைத்தகடன்மண்ணவர்கடம்முருவில்வம்மென்... ...*
றத்தகையபத்தர்கணநாதரையழைத்தே.................*
சித்திதருந்தேசிகசிறந்தவடிவங்கொண் ................*
டுத்தமநெடுங்கயிலையோங்கலதுநீங்கி...... ..........*

(இ-ள்) கருங்கடல்சூழ்ந்த பூமியிலேயிருக்கின்றமனிதனைப்போலவடிவங்கொண்டு நம்முடனே வாருங்களென்று அப்படிப்பட்ட அடியார்களையும் கணநாதர்களையும் அழைத்துக்கொண்டு மோக்ஷத்தைத்தருகின்ற சிறப்புப்பெற்ற ஆசாரியமூர்த்தங்கொண்டு உத்தமமாகிய நெடியகைலாசமலையை நீங்கினாரென்றவாறு. (௮)

கொன்னேறுழிதன்னுருவுகொண்டொருவர்தேடும்...*
பொன்னடியெனுஞ்சலசமண்மிசைபொருந்தப் ....*
பன்னுமறைவல்லவர்பரிந்தழல்வளர்ப்பார்...........*
மன்னுமொருதெய்விகவளம்பதியில்வந்தார் .. ....*

(இ-ள்.) பெருமைபொருந்திய ஒருபன்றிவடிவங்கொண்டு மகாவிஷ்ணுந்தேடியபொன்மயமாகியதிருவடித்தாமரைகளைப்பூமியிலே பொருந்தவைத்துப் பன்னுகின்றவேதத்திலே வல்லவராயும் அன்புகொண்டுயாகஞ்செய்பவராயுமிருக்கின்ற பிராமணர்கள் நிலைபெற்றிருக்கும் ஒப்பற்ற தெய்வத்தன்மையையுள்ள வளப்பத்தையுடையதிருப்பெருந்துறையில்வந்து சேர்ந்தாரென்றவாறு. (௯)

வெப்பறவிவேலைதனில்வீழ்பவர்களெல்லாம் .........*
நப்புசிவநாமமெனுநற்புணைபிடித்தா..................*
லெம்பரனருட்கரையிலேறுதுறையாமா... .........*
லம்புவிமொழிந்துளபெருந்துறையதன்பேர்........ *

(இ-ள்) வெப்பத்தையுடைய பிறவிசாகரத்தில்விழுந்துகிடப்பவர்களெல்லாம் பெரியோர்கள் நம்புகின்ற சிவநாமமென்னும் நல்லதெப்பத்தைப்பிடித்தால்எமதுகடவுளுடையகிருபையாகியமோக்ஷக்கரையில் ஏறுவதற்குத் துறையாதலாலே உலகமெல்லாந்திருப்பெருந்துறையென்று அந்தப் பதிக்குத் திருப்பெயர் சொல்லுமென்றவாறு. (௰)

ஈனமில்பெருந்துறையெனும்பதியின்ஞாங்கர் .... ...*
கானமிகுபுன்னைவளர்கந்தமுளசந்தம்...................*
வானமுயர்சண்பகமரந்திகழ்நரந்தந் .... ....... ... *
தேனினமுரன்றெழுசெருந்திகள்பொருந்தி ... ...... *

(இ-ள்) குற்றமற்ற திருப்பெருந்துறையென்னுந் தலத்திற்குஅருகெல்லாம் வாசமிகுந்த புன்னைமரங்களும் வளர்கின்ற மணமுள்ள சந்தனமரங்களும் ஆகாயத்தை அளாவியுயர்ந்தசண்பகமரங்களும்

பிரகாசிக்கின்ற நார்த்தைகளும் வண்டினங்கள்சத்தித்தெழும்புகின்றசெருந்திமரங்களும் பொருந்தியென்றவாறு. (யக)

கோடுகவினும்பெரியகோங்குமிகவோங்கும் ... ........*
பாடலநெடும்பலவுபைங்கமுகுதெங்கு.............. *
நீடளியிறைத்தெழுநிரைக்குரவுகூத... ................ *
மேடவிழ்செழுங்கவிரிலஞ்சிகண்மலிந்து .. ....... . *

(இ-ள்) அழகிய கொம்புகளையுடைய பெரியகோங்குமரங்களும், மிகவுமுயர்ந்தபாதிரிமரங்களும், நெடியபலாமரங்களும், பசியகமுகமரங்களும், தென்னமரங்களும், நீடுகின்ற வண்டுக ளிரைத்தெழப்பெற்ற வரிசையாயிருக்கின்றகுராமரங்களும், மாமரங்களும், இதழவிழ்ந்தமுருக்கமரங்களும், மகிழமரங்களும்நெருங்கி.எ-று. (யஉ)

மாக்கவின்மிகுங்கலவமஞ்ஞைசிறையன்னங்........ *
கூக்குரல்செயுங்கரியகோகிலநெருங்க ... ........... *
மீக்குலவுமந்தியினமுந்துதொறுமேன்மே...... ...... *
லார்க்குஞிமிறெங்கணுமடர்ந்திசைதொடங்க .........*

(இ ள்) மகத்தாகிய அழகுமிகுந்த தோகையுடைய மயிலும் இறகையுடைய அன்னங்களும் கூவுதல்செய்கின்றகரிய குயிலகளும்நெருங்க மரக்குலைகளின்மேலே யிருக்கின்ற குரங்குகூட்டங்கள எழும்பிக்குதிக்குந்தோறும்மேலுமேலுஞ் சத்திக்கின்ற வண்டுக ளெவ்விடத்தும் நெருங்கி இசைகள்பாட வென்றவாறு. (யங)

வீழ்ந்தநறவத்துளிவிழிப்புனலதாகச்.................*
சூழ்ந்துமுரல்வண்டினிசைதோத்திரமதாகத் .. ......*
தாழ்ந்துமலரேந்தியிறைதன்றிருமுனின்றே.......... *
வாழ்ந்துருகுமன்பரெனமன்னுமொருபூங்கா..... ...*

(இ-ள்) தம்மிடத்திருந்து வீழப்பெற்றதேன்றுளிகள்கண்ணீராகவண்டுகள் சூழ்ந்துபாடுகின்ற ஓசை தோத்திரமாக வணக்கத்துடனே மலரையேந்திக்கொண்டு பரமசிவனுக்கெதிரேயிருந்துமனமுருகுகின்றஅன்பர்கள்போல நிலைபெற்றிருக்கும் ஒப்பற்றபூஞ்சோலைகளென்றவாறு. (யச)

வாய்த்தவளமிவ்வகையங்குமதனுப்ப................ *
ணேத்தருதவச்சினைகளெங்கணுநெருங்க...............*
மீத்திகழறக்குழைதழைத்துமிளிர்மெய்ம்மை.........*
பூத்தறிஞர்போன்றெழில்பொருந்துமொர்குருந்தம்..*

(இ-ள்.) இப்படிப்பட்ட வளம்பொருந்திய அந்தச்சோலையினடுவேயாவராலுந்துதித்தற்கரிய தவங்களென்னுங் கிளைகளானவையெ

# ௨௰ திருப்பெருந்துறைச்சருக்கம்.

வ்விடத்து நெருங்க மேலாகிப்பிரகாசிக்கின்ற தருமமென்னுந்தளிர் களைத்தழைத்துவிளங்கிய உண்மையென்னு மலர்களைப் பூத்து அறிவு டையவர்களைப்போல் அழகுபொருந்தி நிற்கு மொரு குருந்த வி ருக்ஷ மென்றவாறு. (௰௫)

ஆர்வமுடன்வந்தினமகப்படவளைக்கும் ............... *
பார்வையெனமாந்தர்பருவங்கொடுநடந்தா ......... *
ரோர்வருகுருந்தமொடிலங்குமுயர்காவிற் ............ *
சேர்குவமெனத்திருவுளத்தருள்சிறந்து ............... *

(இ-ள்.) ஆசையுடனேவந்து தன்னினங்களை யகப்படும்படியாய் வளைக்கின்ற ஒருபார்வைமிருகம்போல மானிடவடிவங் கொண்டுவ ந்த கடவுளானவர் அழகிய குருந்தவிருக்ஷத்தோடும் பிரகாசிக்கின்ற உயர்ந்தசோலையினிடத்துச் சேர்வோமென்று திருவுளத்திற்கொண் டருளினரென்றவாறு. (௰௬)

வந்துதிகழ்தொண்டர்புடைசூழமகிழ்வெய்திக் ...... *
கொந்தலர்மலர்ப்பொலிகுருந்தடிபொருந்தி......... *
யந்தமுதலில்லவரருட்டமிழுரைப்பார் ............... *
பந்தமறுமெல்லையதுபார்த்தினிதிருந்தார்............ *

(இ-ள்.) அப்படியாகவந்து பிரகாசிக்கின்ற அடியார்கள் புடை சூழமகிழ்ச்சியடைந்துகொத்துக்கொத்தாய் மலர்கள்நிறைந்த குரு ந்தவிருக்ஷத்தின்கீழெழுந்தருளியிருந்து அந்தமுமாதியுமில்லாத பராபரனானவர் தமிழ்வேத முரைப்பாராகிய திருவாதவூரருடைய பந்தந்தீருகின்றகாலம்பார்த்து இனிதாகவிருந்தார். எ-று. (௰௭)

பொங்குபுனல்யாறுபலபோய்விழுகடற்போ .........*
லெங்குமுளநல்லுயிர்களெய்துமொளியாகுந் ...... *
திங்களணிவேணியரிருப்பவடிசேருந்.................. *
துங்கமறையாளர்பலர்துன்றுநெறிசென்றார் ......... *

(இ-ள்.) மிகுந்த சலத்தையுடைய அனேக நதிகள்போய் வீழ்கி ன்றஒருகடல்போல் உலகமெங்குமுள்ள சுத்தாத்மாக்க ளடைகின்ற சோதியாகிய மூன்றாம்பிறையைத்தரித்த சடாபாரத்தையுடையபர மசிவன் அவ்வாறிருக்க அவருடையபாதத்தை யடைகின்ற உயர்ந்த வேதியராகிய திருவாதவூரர் பலரும் நெருங்கிச் செல்லுகின்ற அந்தமார்க்கமாகவே வந்தாரென்றவாறு. (௰௮)

(வேறு)

செம்மனத்துவாதவூர்ச்செல்வர்தமைப்புல்லாத *
பொய்ம்மயக்கந்தரும்பாசப்போலமலர்ந்தனபூவை *

யெம்மயக்குமொழிப்பாருக் கினிப்பிறவியில்லையெனாக்
கைமறிக்குமவர்போலமலர்ந்தனவங்குளகாந்தள்..... *

(இ-ள்.) அந்தமார்க்கத்திலே நல்லமனையுடைய திருவாதவூரிற் பிறந்த மாணிக்கவாசகரை அடையாத பொய்யாகிய மயக்கத்தை விளைக்கின்ற பாசம்போல் காயாமரங்களிற் கரியமலர்கள் மலர்ந்தன அந்தமயக்கமும் நீங்குமிவருக்கு இனிமேற்பிறப்பில்லையென்று கையைமறித்துக் காட்டுமவர்போல அங்கிருக்குங் காந்தளெல்லாம் மலர்ந்தன என்றவாறு. (௰௯)

விற்காட்டுங்கரத்துமதனம்பாகிவெம்பிறவி........... *
யிற்காட்டியாவரையுமாகுலஞ்செய்யெம்பாவ........ *
நிற்காட்டியொழிப்பவரார்நீயருள்கவெமக்கென்று...*
பற்காட்டிநிற்பவர்போன்மலர்ந்தனமென்பணிமுல்லை *

(இ-ள்.) கருப்புவில்லைக்காட்டிய கையையுடைய மன்மதனுக்கு ஓரம்பாகி யாவரையும் வெய்யபிறப்பிலே விட்டு வருத்தஞ்செய்கின்ற எங்கள் பாவத்தை உன்னைக்காட்டி நீக்குபவர்கள் யாவர் நீயெங்களுக் கனுக்கிரகஞ்செய்யென்று பல்லைத் திறந்துகொண்டு நிற்பவர்போலத் திருவாதவூரரெதிராக மலர்ந்து நின்றன மிருதுவாகிய குளிர்ந்த முல்லைகளென்றவாறு. (௨௰)

பொற்புடையதமிழ்பாடும்புண்ணியனெப்பொருளினுமாஞ்
சிற்பரனுண்மையில்விழிக்குந்திருநயனஞ்சேர்தலினு *
னிற்பதாய்ப்பிறவியிதுவென்றிரங்கிநீண்மரங்கள் .. *
கற்பனையையுணர்ந்துமலர்கண்ணீர்கள்பொழிந்தனவால்

(இ-ள்.) அழகிய தமிழ்வேதம்பாடுகின்ற புண்ணியராகிய திருவாதவூரர் எந்தப்பொருள்களிலும் கலந்துநிற்கும் அறிவுருவமாகிய பரசிவம் உண்மையாகநோக்கிச் செய்யும் சட்சுதீக்ஷையைப் பெறுகிறபடியால் இந்தப்பிறப்பு உலகங்கொண்டாடத்தக்கதாய்நிற்பதென்று இரக்கமுற்று நெடியமரங்கள் அந்தமகிமையையறிந்து மலர்ந்து தேனாகிய கண்ணீர்கள் பொழிந்தனவென்றவாறு. (௨௧)

முன்னைவினைப்பெருங்காடுமூடுறவைம்புலவேடர் ... *
துன்னியலைத்திடர்செய்யுந்துன்பவழிசெல்லாம ...*
லுன்னருநற்சிவஞானவுபதேசந்தமிழ்செப்பவா ...... *
மின்னவகைத்துளகானமெய்த்தியவந்நெறிநீங்க . ......*

(இ-ள்.) பழவினையாகிய பெரியகாடு மூடத்தக்கதாக ஐம்புலன்களாகிய வேடர்கள் நெருங்கி அலைத்து வருத்தஞ்செய்கின்ற துன்பவழியிலே போகாமல யாவராலு நினைத்தற்கரிய சிவஞானவுபதேச

த்தைத் தமிழ்ப்பாடல்செய்யுந் திருவாதவூரர் இப்படிப்பட்டதா யுள்ள காட்டுவழியைக் கடந்தென்றவாறு. (உஉ)

(வேறு.)

விரிந்தகடலுக்கிடைவிழுந்திடருழந்தே..............*
திரிந்தவர்நயந்துகரைசென்றணுகுமாபோல் ..........*
வருந்தவுழல்வித்தவினையொத்தருள்வசத்தா... ..... ...*
லருந்தவர்பெருந்துறைமருங்கினிலணைந்தார் ....... ....*

(இ-ள்) விசாலமாயுள்ள சமுத்திரத்துக்கு நடுவேவிழுந்து துன்பப்பட்டலைகின்றவர்கள் சந்தோஷத்துடனே கரையை யடைவது போல் தம்மைவருந்தும்படி இதுவரைக்கும் வருந்திய இருவினைகளும் ஒத்துத் திருவருளினாலே மாணிக்கவாசகர் திருப்பெருந்துறைக்குச்சமீபத்திற்சேர்ந்தாரென்றவாறு. (உ௩)

இந்தவுலகஞ்சிவனிருக்குமுலகாகச்........ ..... ......*
சிந்தையருள்கொண்டுதிருவாசகமுரைப்பார் ........ ... *
பந்தமறவந்தமில்பரங்குறுகவென்றே... .. .........*
வந்துளபெருந்துறையின்வண்மையுரைசெய்வாம் ....*

(இ-ள்) இந்தவுலகஞ் சிவலோகமாக மனதிலே கிருபைகொண்டுதமிழ்வேதமாகிய திருவாசகமுரைக்குந் திருவாதவூரரானவர் பாசநீங்கமுடிவில்லாத பரத்தையடையும்படிவந்துசேர்ந்த திருப்பெருந்துறையின் வளத்தைச்சொல்லுவாமென்றவாறு. (உ௪)

மாத்தியர்குலத்தலைவர்வன்பிறவியெவ்வந்.......... ... *
தீர்த்துலகவையரருள்செய்யுமிடமென்றே... ... ..... *
தோத்திரமுரைத்துமிசைவந்தசுரர்சிந்தும் ........ ...*
பூத்திரளுயர்ந்தவகைபோன்றதலர்பொங்கர்... .......*

(இ-ள்) ஆமாத்தியர் குலத்தலைவராகிய மாணிக்கவாசகருடைய வலிமைபொருந்திய பிறவித்துன்பத்தைத்தீர்த்து லோகநாயகராகிய பரமசிவன் அனுக்கிரகஞ்செய்யவந்தவிடமென்று தோத்திரஞ்செய்து மேலேயிருந்து தேவதைகள் தூவுகின்ற புஷ்பத்திரள்களுதிர்ந்ததுபோலிருந்தது மலர்ந்திருக்கின்ற பூஞ்சோலை. எ-று. (உ௫)

(வேறு.)

பேறறிந்துதவமுயல்வோமென்றுபெருந்துறைநாடி.*
யாறியங்கியிளைக்குமவர்க்களிக்கவெதிர்நிற்பவர்போற்.*
கூறுமின்பநிழல்செய்துகுறையாதபத்தியுட... ..*
னீறணிந்துசோறேந்திநின்றனதுன்றியகைதை ......*

(இ-ள்) பெறவேண்டியதின்னதென்றுதெரிந்து அதைப்பெறத் தவஞ்செய்வோமென்று திருப்பெருந்துறையைக்குறித்து வழிநட

ந்திலைக்கும் மாணிக்கவாசகர்க்குக் கொண்டாடப்படுகின்ற இன்ப மாகிய நிழலைச்செய்து குறைவில்லாத அன்புடனே திருநீறணிந்து திருவழுதேந்திக்கொண்டு நிற்கின்றசிவனடியார்கள்போல் மகரந் தப்பொடிகளைப்பூசிக்கொண்டு வெள்ளியமலர்க்குலைகளை யேந்திநி ன்றன நெருங்கிய தாழைகளென்றவாறு. (உசு)

நிலந்தனில்வந்தொருகுருந்தநீழலிலேயெவ்வுலகுங் *
கலந்தபொருளிருந்தபடிகண்டுமனங்களிப்பெய்தித்..*
துலங்கியதங்கண்ணீருஞ்சொரிந்துகரங்குவித்துமுக.. *
மலர்ந்தபெருந்தவர்போலமலர்ந்தனபுண்டரிகங்கள் *

(இ-ள்) பூலோகத்திலேவந்து ஒருகுருந்தநிழலிலேஎந்தஉலகத்தி லுங்கலந்தவஸ்துவாகிய பரமசிவனெழுந்தருளியிருந்தபடி கண்டு மனமகிழ்ச்சியடைந்து விளங்கப்பெற்றதங்களுடைய கண்ணீரைச் சொரிந்து கைகுவித்து முகமலர்ச்சியடைந்த பெரியதபோதனர்க ளைப்போல உள்ளேநெகிழ்ந்து தேனாகிய நீரைச்சொரிந்து அரும் பாகியகைகளைக்குவித்துமலர்ந்தன தாமரைகளென்றவாறு. (உஎ)

ஆன்றபயன்பிறர்நுகரவகத்தினிமையுளதாகத்...... *
தோன்றியநல்லறிவினர்போற்றுவன்றியெழுந்தனகன்ன
லேன்றகுலமாதர்தமதிறைவர்முகநாடிலவர் ........*
வான்றகையநிலைபோலவளைந்துவிளைந்தனசெந்நெல்.*

(இ-ள்.) தமக்குள்ளே நிறைந்தபிரயோசனத்தை அன்னியர்புசிக் க உள்ளே இனிப்புள்ளதாகத்தோன்றிய நல்ல அறிவாளர்கள்போல் இனிப்புள்ள ரசம்நிறைந்து நெருங்கியெழுந்தன கரும்புகள் நல்ல குலத்திலேபிறந்த கற்புடையஸ்திரீகள் தங்கள்புருஷரைக் கண்டால் மேலாகிய அவர்கள்தன்மைபோல் செந்நெல்களெல்லாந் தலைவணங்கி விளைந்திருந்தன வென்றவாறு. (உஅ)

முலைக்கிரியுங்கருங்கூந்தன்மொய்வனமுமரணாகக் ... *
கொலைப்புருவவெஞ்சாபங்குனித்துவிழிக்கணையேவி.*
நிலைப்படுநற்பொருட்டேடிநினைந்துதவநெறியிற்..*
றலைப்படுவார்தமைவருத்துந்தன்மையினர்வயன்மாதர்*

(இ-ள்.) பள்ளஸ்திரீகள்தங்களுடைய ஸ்தனமாகியமலைகளையுங்கரி யகூந்தலாகிய நெருங்கியகாடுகளையும் கோட்டைகளாகக் கொண்டு கொல்லுகின்ற புருவங்களாகிய வெவ்வியவில்லுகளை வளைத்துக் கண் களாகியபாணங்களைத்தொடுத்து அழிவற்ற நல்லபொருளைத்தேடிநி னைந்துநெடியதபோமார்க்கத்திலேசெலவாராகியமாணிக்கவாசகரை வருத்துகின்றகுணத்தையுடையவரானாரென்றவாறு. (உகூ)

(வேறு.)

இன்னவகைமன்னிவளர்காவுமெழின்மேவுங் ...... ...*
கன்னல்வயலுந்திகழ்தல்கண்டுவகைகொண்டே ...... *
யின்னலுடலம்பெறவினிப்புவியில்வாரா............ *
மன்னவர்பெருந்துறைவளம்பதியில்வந்தார் ........*

(இ-ள்) இந்தப்பிரகாரம் நிலைபெற்றுவளர்கின்ற சோலையும் அழகுபொருந்தியகருப்பங்கழனியும் பிரகாசித்திருத்தலைப்பார்த்துமகிழ்ச்சியடைந்து துன்பத்துக்கிடமாகிய தேகத்தைப்பெறுதற்குஇனிப்பூமியிலேவாராத மாணிக்கவாசகர்வளங்களையுடைய திருப்பெருந்துறையில்வந்து சேர்ந்தாரென்றவாறு (௩௰)

மாதவர்மிகும்பதிபுகுந்துழிமருங்கே ............ *
நாதனுளைதண்டலையினன்குபணைதொண்ட........ ...*
ரோதுறுசிவாகமமொலிப்பொலிவுகேளா ............*
யாதிதென்றிந்துணாமினேவலர்களென்றார் ...,... ...*

(இ-ள்.) மகத்தாகிய தபோதனர் நிறைந்துள்ள திருப்பெருந்துறையிலே புகுங்கவிடத்திலே அருகே குருமூர்த்தமாய்ப் பரமசிவனெழுந்தருளியிருக்குஞ்சோலையினிடத்திலே நன்மைமிகுந்தஅடியார்கள்படிக்கின்ற சிவாகமங்களினுடைய சத்தத்தைக்கேட்டு இது என்னசத்தம் தெரிந்துவந்துசொல்லுங்கள் தூதர்களேயென்றார்மாணிக்கவாசக ரென்றவாறு. (௩௧)

சென்றவர்கள்வந்துசிவபத்தர்பலர்சூழக் ..........*
கொன்றைமுடிவைத்தகுணமெய்ந்நெறிகொரப்பார்...*
நின்றதொர்குருந்தமரநீழலிலிருந்தா ...... .... ....... *
ரொன்றலுமகிழ்ந்தனரினிப்பிறவியிலலார் ... ... ....... *

(இ-ள்) அப்படி சொல்லக்கேட்டுப்போய்ப்பார்த்ததூதர்கள்வந்து அனேகம் அடியார்கள் நம்மைச்சூழ்ந்திருக்கச் சடாமுடியிலே கொன்றைமலரைதரித்த குணமாலையாகிய பரமசிவனுக்கொப்பான ஒருபெரியவர் அங்கேயிருக்கின்ற ஒரு குருந்தமரநிழலிடத்தே இருக்கின்றாரென்றலும் மகிழ்ச்சியடைந்தார் இனிப் பிறவியில்லாராகியமாணிக்கவாசக ரென்றவாறு. (௩௨)

ஏவலருரைத்தமொழிகேட்டரனையெய்து ... ............ *
மாவமலொடுகோவினையணைந்தகமலர்ந்து ...... .... .. *
மேவியமணிச்சிவிகைவிட்டினிதிழிந்தே ........ .... ..;*
தேவர்பரவும்பரமர்தெய்வசபைகண்டார் ........*

(இ-ள்.) தூதர்கள்சொன்னசொல்லைக்கேட்டுக்குருமூர்த்தமாயெழுந்தருளியிருக்கின்றபரமசிவனைச்சேரவேண்டுமென்கிற ஆவலுடன்

னே அந்தச்சோலையிற்சேர்ந்து மனமலர்ச்சியுடனேதாமேறிவந்தரத்நச்சிவிகையினின்றும்இனிமையுடனேயிருந்துதேவர்களால்வணங்கப்பட்டமேலாகியதெய்வசபையைக்கண்டார் திருவாதவூரர். எ-று.

(வேறு.)

அண்டமெலாங்கடந்தபொருள்பகருநூலினளவுணாப்பார்தெ
ளிந்தயர்வாராய்வாராகித், தொண்டுபடுமடியார்க ளோற்றொ
ன்பான்மேற்றொண்ணூற்றொன்பானென்னுந் தொகுதிசூழ,
வொண்டொடிபங்கினனிருப்ப விருப்பாலெய்தி யுடனுணாத்
துச்சிவஞானமுணர்வாரன்பு, மண்டியநெஞ்சினில்வணங்கி வ
ணங்கார்போலமந்திரியார்மேன்மையுடன்வந்துநின்றார் *

(இ-ள்) அண்டங்களெல்லாங்கடந்த பொருளாகியகடவுளாற்சொல்லப்பட்ட வேதாகமங்களுடைய அளவைகளைச் சொல்லுவாரும் அவைகளைத்தெளிந்து ஆராமைப்படுவாரும்ஆராய்வாருமாகிஅடிமைப்படுமடியார்கள்தொளாயிரத்துத்தொண்ணூற்றொன்பதும்பர்கள் சூழும்படி உமாதேவியை யொருபாகத்திலேயுடைய பரமசிவனை மூந்தருளியிருக்க விருப்பத்துடனே அவ்விடத்திலடைந்து அன்பு பெருகியமனத்தால் வணங்கிக் காயத்தால் வணங்காதவர்போல மேன்மையுடனே வந்துநின்றார் உடனே சிவஞானத்தைப் பெறுவாராகியமாணிக்கவாசக ரொன்றவாறு. (ருச)

உருத்திர நற்றிருமணியை யிலங்குகாதி லொண்சிரத்திற் கந்தரத்திலொளிகொண்மார்பிற், கரத்திலணிந்திலகு திருமூண்டமங்கிகண்கரந்தநன் னுதன்மேற் கவினசாத்தித், திருததிகழும்வேதியனு ரம்பொன்மேனித் திகழ்வதுகண் டகமகிழ்வார் செங்கைமீது, பொருத்தமுறும்புத்தகமே தையாவென்னப் பொய்ம்மையிலாச் சிவஞான போதமென்றார். ... ......*

(இ-ள்) அழகியருத்திராக்ஷத்தை விளங்குகின்றசெவியிலும்,ஒளியையுடையசிரசிலும்,கண்டத்திலும், விளங்குகின்றமார்பிலும், கையிலுமணிந்து ஒளியையுடைய விபூதியைதிரிபுண்டரமாகஅக்கினிக்கண்ணையொளித்தநல்லநெற்றியிலே அழகுபெறத்தரித்துச்சிறப்புப்பொருந்திய வேதியருடைய அழகிய பொன்னையொத்த திருமேனி பிரகாசிப்பதைக்கண்டு மனமகிழ்ச்சியுறுவாராகிய மாணிக்கவாசகரானவர் அவரைநோக்கி ஐயா சிவந்த திருக்கரத்திலே பொருந்தியிருக்கின்ற புத்தகம் என்னவென்றுகேட்க அப்பெரியவர் மெய்ம்மையான சிவஞானபோதமென் றருளிச்செய்தாரென்றவாறு. (ருரு)

என்றலுமேசிவமேதுஞானமேதிங்கிலங்கியிடும்போதமேதிய
ம்புவீரோ, லன்றுவடநீழலில்வந்திருந்தார்நீரோ யடியேனுமு

# உசு திருப்பெருந்துறைச்சருக்கம்.

மக்கடிமையாவேனென்ன, நின்றசிவமொன்றதனைத் தேர்தன்
ஞான நிகழ்போதந்தேர்ந்ததனைத்தெளிதலாமென், றொன்றி
யறற்பொருள்விறவிநிற்பார்சித்தையுருகும்வகையுரைசெய்தா
ருவமையிலலார்... ................. ....... ..........*

(இ-ள்.) சிவஞானபோதமென்று அவர் அருளிச்செய்தவுடனே சிவமாவதென்ன ஞானமாவதென்ன விளங்குகின்ற போதமாவதென்ன இவைசொல்லீரோயானால அந்நாளில் கல்லால விருக்ஷத்தின்கீழே யெழுந்தருளியிருந்தவர்நீரோ அடியேனும் உமக்கடிமையாவேனென்று சொல்லச்சிவமென்றது ஒப்பற்ற மெய்ப்பொருள் ஞானமென்றது அதனைத்தெரிதல் போதமென்றது தெரிந்ததைத்தெளிதலாமென்று பொருந்திய இந்தமேலானபொருளை விறுவிநின்ற திருவாதவூரருடைய மனமுருகும்படி அருளிச்செய்தார் தமக்குநிகரிலாத குருமூகூர்த்தமாய்வந்த பரமசிவனென்றவாறு. (சுசு)

(வேறு.)

உத்தமரின்னவாறிங்குரைத்தலுமுவந்துநாலாஞ் ... ...*
சத்தினிபாதமெய்துந்தன்மையராதலாமேல்......... ...*
யத்திருமன்றுளாடுமையரிங்கென்னையாள... ......*
வித்திருமேனிகொண்டாரொன்பதுமனத்திலெண்ணி *

(இ-ள்) உத்தமராகிய பரமசிவனுனவர் இந்தப்பிரகாரஞ் சொன்னமாத்திரத்திலே மகிழ்ச்சியடைந்து இருவினையொப்பு மலபரிபாகமடைந்து அதிதீவரபக்குவமடையுந் தன்மைபொருந்தியவராகையினாலே அந்தப்பொன்னம்பலத்திலே திருக்கூத்தாடுகின்ற ஐயரோ இங்கே யென்னையாளும்பொருட்டுக் குருவடிவமாகிய இந்தத்திருமேனித்தாங்கிக்கொண்டு வந்தாரொன்று மனத்திலே நினைத்தார் மாணிக்கவாசகரொன்றவாறு. (சுஎ)

மின்னினுநிலைமையில்லாவிழுப்பொருளியாவும்வேண்டே *
னுன்னடியணைந்துநாயேனுறுபவமொழித்தல்வேண்டு... *
மென்னையின்றடிமைகொள்வாயெம்முயிர்க்கிறைவாவென்று*
முன்னுறவணங்கிநின்றார்முகமெலாங்கண்ணீர்வார......*

(இ-ள்) மின்னலைப்போல நிலையில்லாத துக்கத்தைத்தருகின்ற பொருள்களியாவையும் விரும்பமாட்டேன் உன்னுடையதிருவடியைச்சேர்ந்து அடியேன்பொருந்திய ஜனனதுக்கத்தை நீக்கலவேண்டும் என்னை யின்றைக்கு அடிமையாகக்கொள்வாய் எங்களுடைய உயிருக்கு இறைவனேயென்று முன்னேபொருந்த வணங்கிநின்றார் முகமெல்லாங் கண்ணீரொழுக வென்றவாறு. (சுஅ)

இவ்வகையகன்றுமுன்னேன்முன்னுற்விரங்கிநிற்பத் .*
திவ்வியாதரமேயானமொய்கியமொன்றுநாடி ... .......*

யவ்வடியவரின்மிக்காரொருவரிவ்வடிமைதன்னை.... ... ❋
வெவ்வினையகற்றியாளவேண்டுமென் றிறைஞ்சிநின்றார்.

(இ-ள்) மாணிக்கவாசகரானவர் இந்தப்பிரகாரஞ்சொல்லி குருவடிவங்கொண்டு வந்த முன்னோனாகிய பரமசிவனுடைய திருமுன்னே இரங்கிநிற்ப இவர் மோக்ஷவிருப்பங்கொண்டு அதிதீவரபக்குவத்தையுடையவரென்று அறிந்து அந்த அடியார்களின்மிக்க ஒருவரொருந்து இவ்வடியாருடைய பொல்லாதவினைகளை நீக்கிரக்ஷிக்க வேண்டுமென்று வணங்கிநின்றாரென்றவாறு. (௩௯)

கருப்புகா நினையார்தம்மேற் கண்ணருள்செய்தநெஞ்சிற் ...❋
ப்ரப்பற மிதித்தலவேண்டிபெருக்கதபொற்பாதங்கொண்டு...❋
திருப்புனைமறையோர்போற்றச் சிற்றம்பலத்தேநின்ற....❋
வருட்பராநந்தவாரியாதலினதற்கிசைந்தார்...... ... ...... ❋

(இ-ள்) இனியொருகருப்பத்திலே சென்று பிறத்தலை நினையாதவராகிய திருவாதவூரரிடத்திலே கிருபைவைத்து அவர் மனத்தின்விரிவுநீங்க மிதித்தலவேண்டி தூக்கியபொன்மயமான திருவடியைக்கொண்டு செல்வமிருந்த தில்லைமூவாயிரவர் போற்றச் சிதம்பரத்திலே கனகசபையிலே நடனஞ்செய்கின்ற ஆநந்தமாகிய கிருபைக்கடலாகையினாலே அவர்வேண்டுகோளுக்கிசைந்தாரென்றவாறு. (௪௰)

அத்தருபகலோன்முன்னரலர்செயுமம்புசாத.........❋
மொத்தவர்தம்மைநாடியுன்னையின் றடிமைகொள்ள ❋
வித்தலத்தணைந்தோ நீமுன்னியற்றியதவத்தினாலே ... ❋
சித்தமதிரங்கலவேண்டாமெனத்திருவாய்மலர்ந்தார்.....❋

(இ ள்) ஆயிரங்கிரணங்களைப்பரப்பிக்கொண்டுவருகின்றசூரியன் முன்னே விகசிக்கின்ற தாமரைமலர்போன்ற திருவாதவூரரைநாடிப்பார்த்து உன்னை அடிமைகொள்ளும்பொருட்டு நீ முன் ஜனனத்திலேசெய்ததபோபலத்தினாலே இந்தத்திருப்பெருந்துறைக்குவந்தோம் மனஞ்சஞ்சலப்பட்டு இரங்குதல்வேண்டாமென்று திருவாய்மலர்ந்தருளினார் குருசுவாமியென்றவாறு. (௪௧)

வந்துநான்வறுமையுற்றேன்மாற்றெனவிலம்பாடென்று
சிந்தையாகுலமுற்றான்கைச்செழும்பொருளீதல்செய்வார்க்
கிந்தநாளளிக்கவேண்டுமெனவிதியின்மையாலே......❋
யந்தநாளிந்நாளாகவடிமைகொண்டருளவெண்ணி ... ❋

(இ-ள்.) நான்மிகவும் வறுமையடைந்தேன் அதனைத் தீர்க்கவேண்டுமென்று மனோதுக்கமடைந்துவந்த வொருவன்கையிலே நல்ல திரவியங்கொடுப்பவர்க்கு இந்தநாள் கொடுத்தற்குரிய நாளென்று

# ௨௮. திருப்பெருந்துறைச்சருக்கம்.

பார்க்கும் விதியில்லாமையாலே அந்தநன்னாளே இந்தநாளாக அடிமைகொண்டருளவெண்ணியென்றவாறு. (௪௨)

அத்தகுதொண்டர்க்கெல்லாமதிபராமவரைநோக்கி ... *
யித்தவமுடையோனெய்துமிடரொழித்தாள்வதிந்நாள் *
வித்தகவிதற்குவேண்டுங்கருமநீவினைவிற்செய்கென் *
றுத்தமவடிவங்காட்டுமுண்மையாருரைத்தல்செய்தார் *

(இ-ள்.) அப்படிப்பட்ட அடியவர்க்கெல்லாம் பெரியவராகிய ஒருவரைப்பார்த்து இந்தத்தவமுடையவனடைந்த துன்பத்தை நீக்கி இவனை அடிமைகொள்ளும் நாள் இந்நாளாகும் ஆகையினாலே சதுரப்பாட்டையுடையவனேஇதற்குவேண்டியகாரியங்களைநீ சீக்கிரத்திற்செய்வாயாகவென்றுஉத்தமவடிவங்கொண்டஉண்மையானகுருவானவரருளிச்செய்தாரென்றவாறு (௪௩)

முன்னவன்புகன்றவாறுமுயல்குவமென்றேபந்த......*
மன்னுறுதவத்தின்மிக்கார்வகைமலர்த்தெரியலாலும் *
பொன்னிடையழுத்திமுத்தம்புனைந்தபல்பட்டினாலு *
மந்நெடுங்காவினூடங்கானபூங்கோயில்செய்தே..... *

(இ-ள்.) பரமசிவன்அருளிச்செய்தபிரகாரமுயன்று முடிப்போமென்றுநிலைபெற்றதவத்திமேல்மிகுந்த அந்தக்கணநாதர் விதம்விதமாகியபூமாலைகளாலும் பொன்னையிடையிலேயழுத்தி முத்துமணிகளால்விளிம்புசெய்தபலவகைப்பட்டினாலும் அந்தநெடியசோலையினிடத்துஅழகியகோயிலைசெய்தென்றவாறு (௪௪)

செய்தநற்கோயிலூடுசிறந்தவாசனமுஞ்சேர்த்து ... *
மெய்தருதொண்டர்க்கெல்லாமிக்கவரிறைவர்சார்ந்து *
கைதவமுடையார்நெஞ்சிற்கனவிலுங்காணநிலா ... *
மைதளகருத்தாய்கோட்டஞ்சமைந்ததுவாய்ப்பவென்றூர்

(இ-ள்) அப்படிசெய்த நல்ல கோயிலினிடத்திலே சிறந்த ஒரு ஆசனமிட்டுஉண்மையாகிய அடியார்களுக்கெல்லாம் மிகுந்த அந்தக்கணநாதர்குருசுவாமியினிடத்திற் சென்றுவஞ்சனை யுடையவர்கள் நெஞ்சிலேகனவிலுங்காணப்பெறாத நீலகண்டனேகோயில் வாய்ப்பாகசமைந்ததென்றூரொன்றவாறு. (௪௫)

ஆயிடைக்குடபால்வெற்பிலாதவன்கரந்துஞாலம் ... *
பாயிருள்பரந்தபின்புகடிகையோர்பதினைந்தாகி .....*
மேயநல்லுயிர்களெல்லாம்விழிதுயில்பயிலுங்காலைத் *
தூயதொண்டர்க்குமாயைதொலையுநல்லமையுந்தோன்ற

(இ-ந்.) அப்பொழுதுமேற்குத்திசையிலுள்ள அஸ்தகிரியிலே சூரி

யன்மறைந்து உலகத்திலேயிருள்பரவியபின்பு பதினைந்து நாழிகை வேளையிலேஉயிர்களெல்லாம்நித்திரைசெய்யும்போது பரிசுத்தராகிய திருவாதவூரர்க்குமாயாமலநீங்கும்சமயம்வந்துதோன்ற.எ-று.

இங்கிவர்தம்மையாளுங்காலமீதென்றுதெய்வ ...... *
சங்கடநகன்றுமுமக்ஞன்மஞ்சனச்சாலைசார்ந்து......*
குங்குமம்புழுகுசாந்தங் குலவுத்துமெய்ம்முழுதும்பூசிக்
கங்கையினன்னீர்வாசங்கலந்தமென்பனிநீராடி.........*

(இ-ள்) இவ்விடத்திலே இவனைஅடிமைகொள்கின்றகாலமிதுதானென்றுதெய்வசபையை நீங்கிக் குருசுவாமியானவர் திருமஞ்சனச் சாலைகளெழுந்தருளிக்குங்குமமும்புழுகுஞ் சந்தனமுங்குழைத்துத் திருமேனிமுழுவதும் பூசிக் கங்காதீர்த்தத்தாலும் வாசனை கலந்தகுளிர்ந்தநல்லபனிநீராலும் ஸ்நானஞ்செய்தாரென்றவாறு. (௬௭)

மெய்ப்புனைதுகிலான்மாற்றிவிலைமதிப்பில்லாநல்ல *
வொப்பருஞ்செம்பட்டாடையுடுத்துயர்கோட்டமெய்திச்
செப்பிளமுலையாள்பாகன்றென்றிசையதனைநோக்கி *
யப்பெருந்தவிசின்மேலங்கமுகுறவிருந்தபின்னர்......*

(இ-ள்.) திருமேனியிலேபொருந்தியநீரைத் திருவொற்றாடையாலொற்றிஒருவராலும்விலைமதிக்கப்படாத நல்ல ஒப்பற்ற சிவந்த பட்டுப்பரிவட்டத்தையுடுத்து உயர்ந்தகோயிலிற் சென்று செப்பையொத்தஇளமைபொருந்திய முலையையுடைய உமாதேவிபாகனாகிய கடவுள்தெக்ஷணஅபிமுகமாகஅந்தப்பெரிய ஆசனத்தின் மேல் அழகுபொருந்தவிருந்தபின்னென்றவாறு (௬௮)

அண்டருமலர்தூயேத்துமன்பருந்தூய்நீராடி.........*
வெண்டுகில்புனைந்துநீறுவிளங்கியமெய்யராகி ... *
முண்டகமலர்த்தாள்வைத்துமுத்திதந்தருளமேனி *
கொண்டவர்திருமுன்சென்றுகுறுகியங்குவகைகூர்ந்து *

(இ-ள்.) தேவர்களும் மலர்களைத்தூவி யேத்துகின்ற திருவாதவூரரும் பரிசுத்தமாகிய நீரிலேஸ்நானம்பண்ணி வெள்ளைவஸ்திரமுடுத்திக்கொண்டு விபூதிதரித்த தேகத்தையுடையவராய்த் தமது சிரசிலே தாமரைமலர்போன்ற திருவடிகளைவைத்து மோக்ஷங்கொடுக்கத் திருமேனிகொண்டுவந்த ஆசாரியருடைய திருமுன்னேமிகுந்த மகிழ்ச்சியடைந்துசேர்ந்தென்றவாறு. (௬௯)

விண்ணவரதிபன்பொற்றாள்விளக்கியர்ச்சனைமுன்செய்து *
தண்ணமர்பனிநீர்தோய்ந்தசாந்தமெய்ம்முழுதுஞ்சாத்தி *

# ௫௰ திருப்பெருந்துறைச்சருக்கம்.

வண்ணமென்கழுநீர்மாலைவளம்பெறவணிந்தபின்னர்க்......*
கண்ணுறுபரிவுதீரக்கண்டுளமகிழ்ச்சிகொண்டு .. .... ..... ... *

(இ-ள்.) தேவர்களுக்கிறைவனாகிய பரமசிவனுடையஅழகியதிருவடிக்குமுன்னே அபிஷேகஞ்செய்து அர்ச்சித்துக் குளிர்ச்சிபொருந்திய பனிநீரளாவியசந்தனத்தை அழகியதிருமேனி முழுவதும் பூசிச் செங்கழுநீர்மாலையைவளம்பொருந்தத்தரித்தபின்பு கண்களைப்பெற்ற ஆசைதீரக்கண்டுமனமகிழ்ச்சியடைந்தென்றவாறு. (௫௰)

பருப்புடனளிகேரப்பழச்செழுந்துருவல்சேர்த்துச்......*
சருக்கரைகலந்துபாலிற்சமைத்தநல்லமுதுதன்னை... ...... *
யிருத்தியகனகக்கான்மேலிலங்குபொற்கலத்தின்மீது ... .... *
விருப்பொடுபடைத்துநெய்யுமிக்கமுக்கனியும்பெய்து .... *

(இ-ள்.) பருப்புடனேசெழுமைபொருந்தியதேங்காய்த் துருவலும்சேர்த்துச் சருக்கரைக்கலந்தபாலிலேசமைத்த திவ்வியமாகிய திருவமுதினைப் பொன்னாற்செய்த நாற்காலியின்மேற் பிரகாசிக்கின்ற பொற்கலத்திலே அன்புடனேபடைத்து நெய்யும் வாழைப்பழமும் மாம்பழமும் பலாப்பழமும் பெய்தென்றவாறு. (௫௧)

மாலயன்வலாரிமற்றவானவர்பிழைக்கமுன்னு ..... ...*
ளாலமுண்டவனேநல்லவமுதமுண்டருள்வாயென்று *
சீலமாமகிழ்ச்சிபொங்குஞ்சிந்தையினுரைப்பக்கால...*
காலனுமுண்டுநீராற்கரமலர்கழீஇயபின்னர்... ..... ... *

(இ-ள்.) மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் இந்திரனும் 'மற்றதேவர்களும் பிழைக்கும்படி முன்னாளிலே விஷத்தையுண்ட கடவுளே நல்ல அமுதையுண்டருள்வாயென்று நல்லகுணமும் மகிழ்ச்சியும் பொருந்திய மனதோடு வேண்டிக்கொள்ள அவ்வேண்டுகோளின்படியே பரமசிவன் அமுதுசெய்துசலத்தினாலேகைபூசியபின்-எ-று

வெள்ளிலைபழுக்காய்நல்கிவிரைதருதூபதீபங், ... ..... *
கொள்ளுநற்றசுகாட்டிக்கோலநன்னீறுசாத்தித்..... *
தெள்ளொளிவிளங்குமாடிதிருந்தமுன்றிகழ்வித்தெங்கு
முள்ளவர்முடிமேலோங்கவொண்குடைகவித்தல்செய்து

(இ-ள்) வெள்ளை வெற்றிலையும் பாக்குங்கொடுத்து வாசனையைத் தருகின்ற தூபதீபஞ்செய்து அழகியதிருநீறுதரித்துத் தெளிந்தஒளிவிளங்குகின்ற கண்ணாடிகாட்டி எங்குநிறைந்தவராகிய பரமாசாரியருடைய முடியின்மேல் ஒளியையுடைய பட்டுக்குடை பிடித்தாரென்றவாறு. (௫௨)

கற்றைவெண்கவரிசெம்பொற்காம்புநீடாலவட்டம்....*
பற்றியன்புடனேவீசிப்பரிவுடனடியார்சூழப்... ..*
பொற்றவிசிடைமேயமேவும்புண்ணியன் திருமுன்னைப்
போ, துற்றகையுடனேவாதவூரரங்கிருந்தபின்பு......*

(இ-ள்.) கற்றையாகிய வெள்ளிபசாமரையும் சிவந்தபொன்னினாற்செய்த நெடியகாம்பையுடைய ஆலவட்டமும் எடுத்து அன்புடனேவீசி அடியார்கள்சூழப் பொன்னினாற்செய்த ஆசனத்திலேஎழுந்தருளியிருக்கின்ற புண்ணியசொரூபராகிய தேசிகோத்தமருடைய சந்நிதிமுன்னே மலரைஇரண்டுகைகளிலு மேந்திக்கொண்டு திருவாதவூரரங்கிருந்தபின்பென்றவாறு. (௩௪)

மந்திரம்பதங்கள்வன்னம்புவனங்கடத்துவங்க.........*
ளைந்துநற்கலைகளென்றுமறுவகையகற்றியந்தச்....*
சிந்தனைக்கரியமேலைச்சிவத்துடனறிவுசேரப்......*
பந்தனையொழிவார்தம்மேற்பரிந்தருட்பார்வைசெய்து.

(இ-ள்.) பதினொருமந்திரங்களும் எண்பத்தொருபதங்களும் ஐம்பத்தோரக்ஷரங்களும்இருநூற்றிருபத்துநாலுபுவனங்களும் முப்பத்தாறு தத்துவங்களும் ஐந்துகலைகளுமாகிய ஆறு அத்துவாக்களையும் நீக்கி முடிவாகிய மனத்துக்கெட்டாத மேன்மைபொருந்திய சிவத்துடனே அறிவுபொருந்தப் பாசக்கட்டுகள் நீங்குவாராகிய மாணிக்கவாசகர்மேல் அன்புவைத்துக் கிருபாநோக்கஞ் செய்தென்றவாறு. (௩௫)

எவர்க்குமெய்ஞ்ஞானமாமஞ்செழுத்தையுமுணர்த்தவே
ண்டி, யவத்தொழிலகற்றியாளுஞ்சிவத்தை முன்னாகமா
றித், தவப்பெருவடிவங்கொண்டார்தண்டமிழ்ப்பாடுமன்பர், செவிப்புலன்வழியேசிந்தையுறத்திருவாய்மலர்ந்
தார்... .. ...... ........ .....................................*

(இ-ள்) பெரியதவவடிவங்கொண் டெழுந்தருளிவந்த ஞானதேசிகர் அதிதீவரபக்குவரெவர்களுக்கும் உண்மையறிவாகவிளங்கும்படி பஞ்சாக்ஷரத்தை அறிவிக்கவேண்டி அவத்தொழிலைநீக்கியாளுகின்ற சிவத்தைமுன்னாக மாறிக்குளிர்ந்த தமிழ்வேதம்பாடுகின்ற அன்பராகிய திருவாதவூரருடைய காதினிடத்தேமனத்திலே பொருந்தத் திருவாய்மலர்ந்தருளினாரென்றவாறு. (௩௬)

(வேறு)

விரவுமன்பொருவடிவுகொண்டணைவார் விழித்தபார்வையின்
விளக்கின்முன்னிருள்போற், சுருதிசெந்தமிழாக்கிய மொ
ழியார்தொலைவிலாதவெத்துயர்ப்பவமொழிந்து, பாவிமெ

ன்புதம்பணிபவர்படிமேற்படியவீழ்ந்தனர் வாழ்ந்தனர்பரி
வான், மருவுமிங்கிவர்சென்னியிலிருதாண்மகிழவைத்தனர்ம
திநதிமுடிப்பார் ...... .. ... .. ............................*

(இ-ள்.) கலந்த அன்பே ஒருவடிவமாகக்கொண்டுவந்தருளியபரமசிவனுடைய பார்வையினாலே விளக்கின்முன்னே யிருள்கெடுவதுபோல வேதத்தைத்தமிழிற்பாடியமாணிக்கவாசகர்நீங்காதவெவ்விய துன்பத்தைத்தரும் பிறவியொழிந்து துதிசெய்துமெல்லியதிருவடியையணங்குபவராய்ப் பூமியின்மேல்படியவீழ்ந்துவாழ்ந்தார்பத்தியையுடைய இவரது சிரசின்மேல்மகிழும்படி இரண்டு திருவடியுஞ்சூட்டினான் சந்திரனையுங் கங்கையையுமுடித்தபரமசிவனென்றவாறு.

மன்றுமுன்னுளவுயிர்க்கரணங்கண்மாய்ந்துபோய்ம் முதலறி
விழந்தருளாற், றன்னுமின்னருட்சிவகரணங்க ளேடாமறலாற்
சுகவறிவதற்றேற்றிச், சென்னியிற்மிசைம்மேவியபாதந்திரு
ந்து கண்ணிணைச்சேர்த்திருகரத்தால், துன்னல்செய்திடுமிதய
மேலணைத்துவகைகூர்ந்துமெய்யுணர்ச்சியிலெழுந்தார் .*

(இ-ள்) நிலைபெற்றமுன்னிருந்த பசுகரணங்களெல்லாங் கெட்டுத்திருவருளினாலே பொய்ப்முதலகியமுன்னறிவுபோய்க்கிருபையிருந்த சிவகரணங்களாகத்தோன்றலால சுகவறிவு அதிலேயுண்டாய்ச் சிரசின்மேல்வைத்தபாதத்தை இரண்டுகண்களிலுஞ் சேர்த்துக் கொண்டு இரண்டுகையினாலும் நினைக்கின்ற இதயமாகியமார்பின்மேல அணைத்துக்கொண்டு மனமகிழ்ச்சியடைந்து மெய்யுணர்வுடனே யெழுந்தார் திருவாதவூரரென்றவாறு. (௫௮)

மேலைப்புத்தலத்திந்திரனிமையோர்மீதெலாய்ப்பொழி விரைமல
ர்மழைபோல், போலவித்தலம் புதையவந்துதிரப்பூதருங் கண
நாதருமகிழச், சாலநற்குணம்புனையுதலலடியார்தங்கள் செங்
கையிலசைவியலுந்தயங்கு, மாலவட்டமுங்கவரியுமிருபாலசை
யுமாமுனிக்கணமடிவணங்க.............................*

(இ-ள்.) மேலுலகத்திலிருந்து தேவேந்திரனும் தேவர்களும் மேலே தூவுகின்ற வாசனைபொருந்திய புட்பமாரிபோல இந்தப்பூமிமறையும்படி அச்சோலையிலிருந்துமலர்களுதிரப் பூதகணங்களும் கணநாதரும் மனமகிழ்ச்சியடைய மிகுந்த நற்குணத்தையுடைய நல்லடியார்கள் தங்களுடைய சிவந்தகைகளின்மேல்கொண்ட மாலைகளும் பிரகாசிக்கின்ற ஆலவட்டங்களும் வெண்சாமரைகளும் இரண்டுபக்கங்களிலும் அலசைய மகத்தாகிய முனிவர் கூட்டங்களெல்லாம் வணங்கவென்றவாறு. (௫௯)

இருந்தவப்பெருங்கருணையனெதிரேயெய்தியன்புடை யியல்
பினிறைஞ்சிச், சிரந்தனிற்றமதிருகரங்குவியாச்சிறந்தபேர
ருணிறைந்தசெய்கையராய், வருந்தியித்தலமகிழ்ந்துமேற்ப
றந்துமாலயன்றொழவரியநீயடியே, னருந்துயர்ப்பவமகற்ற
விங்குருவமாவதேயெனவழுதுநெஞ்சழிந்தார் ...... *

(இ-ள்.) இப்படியிருந்த அந்தப்பெரிய கிருபையுடைய கடவுளெதிரேசேர்ந்து அன்புடையதிருவாதவூரர் நமஸ்கரித்துச்சிரசினிடத்திலே தம்முடைய இரண்டுகரங்களையுங் குவித்துக்கொண்டு சிறப்புப்பெற்ற அதிகஆராமைநிறைந்தவராய்வருத்தப்பட்டு இந்தப்பூமியைத்தோண்டியும் மேலேபறந்தும் மகாவிஷ்ணுவும் பிரமனுங்கண்டு வணங்குதற்கரிய நீர் அடியேனுடைய அரியதுயரைச் செய்கின்ற பிறவியைநீக்குதற்கு இங்கேகுருவடிவங்கொண்டு வந்ததுஎன்னஅருமையென்று அழுதுமனமுருகினாரென்றவாறு. (௫௰)

ஐயனேயெனையாண்டருள்புரியுமாதியே யுழையணிமழுவிருக்
குங், கையனேகொடுங்காலனைமுனியுங்காலனேயிருகண்ணினு
டைமணியே, செய்யனேயடிபோற்றியென்பெரியசெல்வமே
யடிபோற்றிபொய்யினர்தப், பொய்யனேயடிபோற்றியெவ்
வுயிர்க்கும்போதமேயடிபோற்றியென்றழுதார் ..... ..... *

(இ-ள்) ஐயனேயென்னை ஆண்டுகிருபைசெய்யும் ஆதியேஅழகியமானுமழுவு மிருக்குங்கையையுடையவனே கொடியயமனைக் கோபித்துதைத்த திருவடியையுடையவனே என்னுடைய விரண்டு கண்களிலேயிருக்குமணியே சிவந்தரூபத்தையுடையவனே உன்னுடைய பாதங்கள்போற்றி என்னுடையபெரியசெல்வமே உன்னுடையபாதங்கள்போற்றி பொய்யருக்குப்பொய்யனே உன்னுடையபாதங்கள்போற்றி எந்தவுயிருக்கும் அறிவுக்கறிவாயிருப்பவனே உன்னுடையபாதங்கள்போற்றியென்றழுதாரென்றவாறு (௫௧)

அற்றைஞான்றிருள்வைகறையெனும்போதணைதலும்பரனரு
ட்குருவடிவந் - துற்றசாந்துடன்மூயங்குசெங்கழுநீர்த் தொ
டையலின்சுமைபொறாதெனத்துளங்கிக் கற்றுமான்கரதேந்
தியவிறைவன்கவின்கொண்மார்பணிமலர்த்தொடைகழித்தங்-
குற்றவான்றுயரகன்றுநல்லடியாருடன்விளங்கினர்களங்கமொ
ன்றிலார் ... ........ ... .... .................. ...... ...*

(இ-ள்.) அன்றைத்தினம்இருள்நீங்கிவிடியற்காலம்வருதலும் அருளையுடையகுருவினதுதிருமேனியாலதுநிறைந்தசந்தனமூட்சேர்ந்த செங்கழுநீர்மாலையும்சுமையாதலிற்பொறுக்கமாட்டாமற்றென்றுகலங்கி [illegible]ஏந்தியகையையுடைய அக்கடவுள் அழகுபொருந்தி

யமார்பிலே அணிந்த சந்தனமாலை முதலியவைகளைக் களைந்து அவருடைய துன்பங்களெல்லாம் நீங்கி நல்லடியார்களுடனே விளங்கி யிருந்தார்களங்கமொன்றில்லாத மாணிக்கவாசகரென்றவாறு (௬௨)

வாதவூரனையிறைவர்தம்பெரியமாளைபோலிருண்மாய்ந்தபி
ன்னவர்பாத-போதமாகிவந்தூறு சுடர்விளக்கம்போல மேயி
னன்புணரியிற்றோன்ற வேதநாதர்தமிருபதமிறைஞ்சி மெய்
ம்மையாளனைவேறுகொண்டிருந்தங்-கமாகமத்தறிவருந்
பொருளையுரைக்கவுநினைந்தாரறமுரைத்தார்.

(இ-ள்.) திருவாதவூரிலேதங்கிய தலைவரானமாணிக்கவாசகருடையபெரிதாகிய அஞ்ஞானநீங்கினதுபோலஇருள்நீங்கிப்பின்புஅவரிடத்திலேவிளங்கியசிவஞானமென்னுந்தீபம்போல் சூரியன்கடலிலேஉதயமாக அப்போதுதமது இரண்டுபாதங்களையும் வணங்கிய திருவாதவூரனை வேறேஅழைத்துக்கொண்டுபோயிருந்து அங்கே சிவாகமத்துற் சொல்லப்பட்ட அறிதற்கரிய பொருளைச் சொல்லநினைந்தனர் வேதநாயகராகியும் முன்னேஜனகர்முதலியநால்வருக்குங்கல்லாலின் கீழிருந்து தருமமுரைத்தவராகியும் விளங்கியபரமாசாரியனென்றவாறு (௬௩)

களிம்புதோய்ந்தசெம்பெனவுனைமருவுங்கருமைகூர்மலங்கண்
டதுகலக்கும், பளிங்குபோன்றதுன்றன்மையம்மலத்தின்-ப
ற்றினுடல்பலவெடுத்துழன்றுப், வளங்குலாம்புவனந்தொறு
ஞ்செயமுன்-வல்வினைப்பயன்வருமுறைநெறியே, யளந்துநா
ந்தரநுகர்ந்துமேதுகர்வு மாக்கியேதிரிந்தனைமனவழுககால ✻

(இ-ள்.) இருள்வடிவமாகிய மலமானது களிம்புதோய்ந்த செம்பைப்போல அநாதியே உன்னைப்பொருந்தியிருக்கும் உன்னுடையதன்மையானது திரிட்ட வன்னங்களைப்பற்றுகின்ற பளிங்குபோலாம்அந்தமலத்தினது சம்பந்தத்தால்அநேகதேகங்களெடுத்து உழன்று வளம்பொருந்திய புவனங்கள்தோறுஞ்செய்யும் உன்னுடைய வலியவினைப்பயன்கள்வருகிற கிரமத்தின்வழியே அளவை செய்து நாம்நியதிசெய்ய நீ அதனைப்புசித்து அப்படி புசிக்குமிடத்து ஆகாமியவினையையும்விளைத்துக்கொண்டுதிரிந்தாய் அஞ்ஞானத்தினலென்றவாறு (௬௪)

செய்துளோர்பெறும்வினைப்பயனொருவர்சேர்க்க வேண்டுவ
தில்லெனினதுமே, லெய்துமேலிதுநுகர்வதென்றறிவதில்லை
நீவினையெனிற்சடமறியா, துய்தலாகியநன்னெறியுணரா வு
னையுமுன்வினைப்பயனையுமுணர்ந்து, வைதவாமல மொழித்த
ருள்புரிய-வாழ்வுதல்குவமியாமெனமதிப்பாய்

(இ-ள்.) வினைகளைச்செய்த ஆத்மாக்களுக்கு வினைப்பயனை ஒருவர் இடைநின்றுசேர்க்கவேண்டுவதில்லையெனின் நீ சிற்றறிவுடையவனுனபடியால்மேல்வருவதின்னதென்றும்புசிப்பது இன்னதென்றும்அறிந்துசேரமாட்டாய்வினை தானறிந்து சேருமோவென்றால் சடமாதலின் அறியாதுபிழைத்தலாகிய நல்வழியை யறியாத உன்னையும் உன்வினைப்பயனையும் அறிந்து இருள்வடிவமாகிய மலமொழித்துக்கிருபைநீங்காதமோக்ஷத்தைத் தருவோம்யாமென்றுமதிப்பாயாகவென்று அநுக்கிரகஞ்செய்தார்பரமாசாரியரென்றவாறு (௧௫)

எவர்க்குமிம்மலஞ்சேரவிங்கொழியா திருப்பதென்னெனி லி
ன்னல்கொள்பிறவித், துவக்கெனுந்தமதிருவினைப்பயனுந்
துலைபுகுப்பொருளெனநிறைநிகர்த்தா-லவர்க்குதப்பதங்கொ
டுத்திடவொழிப்போ - மதுவிலாதவரழுங்கிபவ்வளவும், பவப்
பெருங்கடல வீழ்வர்தாம்பருவம் - பார்க்குமெம்மையுந்தம்
மையும்பாரார்...... ...... ...... ... . . ........

(இ-ள்.) யாவர்க்கும் இந்தமலத்தைச் சேரநீக்காமல் இருப்பது என்னெனின் துன்பத்தைக் கொண்டபிறவியினுடைய சம்பந்தமாயிருக்கின்றதங்களுடையயிருவினைகளும்ஒருதுலையினிருதட்டிலும் இடப்பட்டபொருளைப்போலே ஒத்தாலவர்களுக்குமாத்திரந் தம்முடையபதத்தைக்கொடுத்து அப்பிறவித்துன்பத்தை நீக்குவோம் அப்படிஇருவினையொப்பு வாராதவர்கள் வருத்தப்பட்டு அவ்வளவு நாளும் பெரியபிறவிக்கடலின் வீழ்ந்தலைவார்கள் தங்கள் பக்குவத்தைப் பார்க்கின்ற பதியாகிய நம்மையும் பசுவாகிய தம்மையும் விசாரியார்களென்றவாறு. (௧௬)

என்றுகூடுமிப்பருவமென்றியம்பி - லியாமிருந் துளவிடந்தோ
றுமிறைஞ்சி, நன்றிசேர்சிவபுண்ணியம்புரியு-நன்மையாலதுநணு
குமென்றறிநீ, மன்றிலானவெம்மியல்புனக்குரைக்கின் - மாசிலாவு
ருமூன்றவற்றருவ, மொன்றுபேரொளியொன்றருவுருவ-மொன்று
தானருவுருவமென்றுணர்வாய்.. ............ ........................*

(இ-ள்.) என்றைக்குக்கூடும் இந்தப்பருவமென்று சொல்லுமிடத்தில் யாமிருக்கின்ற ஸ்தலங்கள்தோறும்போய் எம்மைத்தொழுது சிவஸ்தலத்தில வசித்தல்முதலிய சிவபுண்ணியம் பத்தினையுஞ்செய்யும் நன்மையினுலே அவ்விருவினையும் யொப்புவருமென்று நீயுணர்வாயாக கனகசபையிலேவிளங்கிய எம்முடைய இயல்பு உனக்குச் சொல்லுமிடத்தில் குற்றமில்லாத எமது சொரூப மூன்று அவற்றில் அருவமொன்று அறிவுவடிவாகிய அருவுருவமொன்று அருவையுடைய வுருவமொன்று என்றறிவாயாக வென்றருளினர் பரமாசாரியர் என்றவாறு. (௧௭)

னிகாரியமுஞ்செய்து உள்ளிலும் புறத்திலும் எம்மைப்பூசைசெய்து அக்கினிகாரியமுஞ் செய்துமுடித்துச் சிவாகமப்பிரகாரம் நன்மைபொருந்திய பெரிய இந்தக்கிரியைத்தொழிலை அன்புடனே செய்யவல்லவர்கள் எம்முடைய பக்கத்திலிருத்தலாகிய சாமீப்பிய பதவியைப் பெறுவார்களென்றவாறு. (௭௰)

முக்குணப்புலனைந்துடனடக்கி - மூலவாயுவையெழுப்பிருவ
ழியைச், சிக்கெனும்மடியடைத்தொருவழியைத் - திறந்துதா
ண்டவச் சிலம்பொலியுடன்போய்த், தக்கவஞ்செழுத்தோரெ
ழுத்துருவாந் - தன்மைகண்டருட்கும்பெருவெளிகலந்தே, பங்க
முந்தினமெமதுருப்பெறுவார், புவியிலம்பேட்டுவனெடுத்த
மென்புழுப்போல் . .. ............ ...... ... ...*

(இ-ள்.) சத்துவம் ரஜசு தாமதம் என்கின்ற மூன்று குணங்களையும் பஞ்சேந்திரியங்களையும் அடக்கிப் பிராணவாயுவை யெழுப்புகின்ற இரண்டு வழியாகிய இடைபிங்கலை நாடிகளை நன்றாக அடைத்துச் சுழிமுனைவழியைத் திறந்து நடனச்சிலம்போசையுடனே சென்று தகுதியையுடைய ஐந்தெழுத்தும் ஓரெழுத்துருவாகிய தன்மைகண்டு அருளோடு சேருகின்ற பரவெளியிலே புகுந்து அழுந்தினவர்கள் எம்முடைய உருவத்தைப்பெறுதலாகிய சாரூப்பியபதத்தையடைவார்கள் பூமியிலே குளவி தன்னுருவாக்கிய மெலிய புழுப்போல என்றவாறு. (௭௧)

பரந்தவான்கலைமுழுதுமாகமநூற் பகுதியும்பலசமயசாத்திர
மும், தெரிந்தாய்ந்ததில்வாய்ந்தமுப்பொருளின் செயலே
பொருளெனமனந்தெளிந்து, புரிந்துமுன்பார்த்துளசிற்றறிவனை
த்தும்-போக்கியவ்வறிவெனச்சிவபோதம், விரிதருந்தோன்று
நெஞ்சுடையவித்தகரோ - மேன்மையானநம்மெய்ப்பதம்பெ
றுவார் .. ... ... ... ... ... ... ..... ... ...*

(இ-ள்.) விரியப்பெற்றமேலாகியகலைஞானமுழுவதும் ஆகமநூலினுடையபாகுபாடுகளனைத்தும் பலசமய சாஸ்திரங்களும் தெரிந்து ஆராய்ந்து அவ்வாராய்ச்சியிலே முப்பொருளாகிய பசுபதிபாசத்தினுடைய செய்திகளே உண்மைப்பொருளென்று மனந்தெளிந்து முன்செய்த கன்மத்தின்பயனாக வந்தசிற்றறிவனைத்துங்கெடுக்கும் போதமென்னப்பட்டசிவஞானம்விரிந்துதோன்றுகின்ற மனத்தையுடைய சதுரப்பாட்டினரோ உயர்வாகிய நம்முடைய சாயுச்சியபதத்தைப்பெறுவார்களென்றவாறு. (௭௨)

உருப்பெலாதவரிழிகுலத்தவர்நல் லொழுக்கமில்லவரென்று
நம்மளவில, விருப்பிலாதவரெனினுமெய்ந்நீறுமிக்கசாதன

## ௩௮ திருப்பெருந்துறைச்சருக்கம்.

வேடமுங்கண்டாற், றரிப்பெலாதுசென்றெதிருறவணங்கித்த
க்கபோனகமளித்தவர்க்கெளிதா, விருப்பர்தாமவரடியவர்க்க
டியாரென்பர்யாரெனதெனுஞ்செருக்கறுப்பார் ..... *

(இ-ள்) பொல்லாத வுருவுடையவராயினும் இழிந்தகுலமுடையவராயினும் நல்ல ஒழுக்க மில்லாதவராயினும் என்றைக்கும் நட்பிடத்திலே அன்பில்லாதவராயினும் அவர்களுடைய மெய்யிலே விபூதியும் உயர்ந்தஉருத்திராக்ஷவேடமுங்கண்ட வளவிலே தரியாமலெதிரேசென்றுவணங்கித்தகுந்த அறுசுவைப் பதார்த்தங்களுடனே அவர்களுக்குத் திருவமுது செய்வித்து அவர்களுக்கு எளியரா யிருந்து அவரடியர்க்கடியராயிருப்பவர்கள் யானெனதென்னுஞ்செருக்கையறுப்பார்களென்றவாறு. (௭௫)

விரிந்தசஞ்சிதவினைகளன்புடனும்விழிக்கவெந்ததுவிரும்புமி
ப்பிறப்பிற், பொருந்தும்வல்வினையுடலுடனகலும்புந்தியின்க
ணருள்வருவினைபோக்கு, மருந்துடர்ப் பொருளுயிருடம்புன
தேயல்லநம்மனவாகுமிங்ஙனேப்போ, விருந்தனம்பெருவடி
வைநின்கருத்தி விருத்துவாய்பொருளிதுவெனவுரைத்தார் *

(இ-ள்.) விரிந்திருக்கின்றசஞ்சிதவினைகள் அன்புடனேசக்ஷு-தீக்ஷையென்கிற நம் விழித்துப்பார்க்கும்பார்வையினாலே வெந்துபோயிற்றுவிரும்பப்பட்ட இச்சனனத்தில் அனுபவிக்கும்படி யெடுத்துக்கட்டப்பட்டபிரார்த்வம் இந்தத்தேகத்துடனேபோம்நம்முடைய புத்தியில்தங்கியதிருவருளானது இனிமேயறவொட்டாமல்ஆகமியவினைகளையொழிக்கும் அரியதுயரைத்தருகின்றஉன்னுடையபொருளும் உயிரும் உடம்பும் உன்னுடையதல்ல நம்முடையதாகும் இங்கேஉன்னைப்போலமானிடவடிவங்கொண்டுவந்தநமதுவடிவைஉன் மனத்திலிருத்திவைப்பாய் இதுவேபொருளென்று அருளிச்செய்தாரென்றவாறு. (௭௬)

அத்தனார்திருவாய்மலர்ந்தருளு மேலவாசகங் கேட்டகமகிழ்ந்
து-பத்தனார்தமக்கெழுபிறப்பறுக்கும்பாதமீதுறப்பணிந்தெ
திரொழுந்து - பித்தனென்பிழை தனக்கிரங்கும்பிரானே நா
மிகப்பேதைமையுடையேன் - முத்தனாக மெய்காட்டினையெ
னவேமொழிந்துவந்துகைமுடிமிசைகுவித்தார் ... ......*

(இ-ள்.) அத்தனாராகியகடவுள்திருவாய்மலர்ந்தருளியகளங்கமற்ற உபதேசமொழிகளைக்கேட்டு மனமகிழ்ந்து திருவாதவூரார்தம்முடைய எழுபிறப்பையும்தீக்குகின்றகுருவினது பாதமலர்மேற்பணிந்து எதிரேயெழுந்து பித்தனாகிய என்னுடைய குற்றத்துக்குஇரங்கியருளியபரமசிவனே மிகவும் அறியாமையுடைய அடியேன் சீவன்முத்

தனாக உண்மைகாட்டினாயென்றுசொல்லி மனமகிழ்ந்து கைகளைச்சிரசின்மேற்குவித்து வணங்கினானென்றவாறு. (௭௫)

என்னதாகமுன்னினைந்துளபொருளுமில்லதாகியவுடலமுமியா
னு-நின்னவாகநின்றருள்கொடுநினைந்தேனின்மலாவென நின்
றுநின்றுருகா-மன்னுதானைதன் மேலணிகலன்கண்மதுரைமீன
வன்வான்பொருளிறையோன்- முன்னதாகவைத்திறைஞ்சினர
றஞ்சேர்முதல்வனார்முகமலர்வுகொண்டிருந்தார் . .... ......*

(இ-ள்.) என்னதென்றுநான்முன்னேநினைந்திருந்தபொருளும்எனக்கிடமாகியதேகமும்யானும்உமதுஅருளைக்கொண்டுஉம்முடையவைகளாகவேநினைந்தேன்நின்மலனேயென்றுநின்றுநின்றுருகித்தம்முடையபட்டுவஸ்திரங்களும்மேலேஅணிந்திருந்தஆபரணங்களும் மதுரையிலிருக்கின்ற பாண்டியன்குதிரை கொள்ளக்கொடுத்தபொருள்களுந்தமதுகுரு வின்முன்னேவைத்து நமஸ்கரித்தார்தருமசொரூபராகியபரமசிவனும்முகமலர்ச்சிகொண்டிருந்தானென்றவாறு.

(வேறு.)

பெருந்துறையுறைவானன்புபெறுந்திருவடியராகி... .... ...*
யிருந்தவர்தம்மின்மேன்மையெய்தினர்முகத்தைநோக்கித் *
திருந்தியபொருளிதெல்லாந்திருப்பணிகளியுமேலா ... ...*
மருந்தவர்க்குதவுமில்லாதலந்தவர்க்கருளுமென்றார் ...... *

(இ-ள்.) திருப்பெருந்துறையிலேயெழுந்தருளி யிருக்கின்றபரமாசாரியரானவர்தம்மிடத்தில்அன்புடையவராயிருந்த அடியார்களில்சிறந்தஒருவர்முகத்தைப் பார்த்துத்திருத்தமாகிய இந்தப்பொருளையெல்லாஞ்சிவாலயப்பணிக்குக்கொடும் அரியதவத்தையுடையவர்களுக்குக்கொடும்வறியவர்களுக்குக்கொடுமென்று அருளிச்செய்தாரென்றவாறு (௭௭)

தம்பெருமுதல்வர்சொல்லுந்தகுமொழிப்படியேயுள்ள *
செம்பொருளியாவுமன்பின்றிறந்துளார்தொலைத்தபின்ன .. *
ரம்பரனளித்தஞானமருந்தினையருந்திப்பாச...... ......... *
வெம்பிணியகற்றுய்ந்தவித்தகர்முத்தரானார் ... ......... *

(இ-ள்) தம்முடையமுதல்வராகியபரமாசாரியர் சொல்லியதகுந்தசொற்படியே தம்மிடத்துள்ளதிரவியத்தையெல்லாம் கொடுத்துவிட்டுஅழகியகடவுள் அருளிச்செய்த ஞானமிர்தத்தைப் புசித்துப்பாசமென்னும்வெய்யபிணியைநீக்கப்பெற்றஅன்பராகிய திருவாதவூரர்சீவன்முத்தரானாரென்றவாறு (௭௮)

திருத்திகழ்கவிகைக்கீழுஞ்சிறந்தபொற்சிவிகைமேலும் ...*
வரத்திருமேவுதானைமன்னவனென்னவந்த...... ..........*

ருருத்தெரியாதநீறுங்கோவணவுடையுங்குஞ்சி ......... ......... *
விரித்துளசிரமுங்கண்ணீர்மிகப்பொழிவிழியுமானார்... .. *

(இ-ள்) திருத்தமாகியகுடைநிழற்கீழ்ச்சிறக்கப் பெற்றபொற்சிவிகையின்மேலும்அழகுபொருந்தியசேனைகள்சூழ்ந்துவர ஒருஅரசனைப்போலவந்ததிருவாதவூரரானவர் உருவந்தெரியாமற்பூசப்பட்டநீற்றையுங்கோவணவுடையையுங்குடுமிவிரிந்திருக்கின்ற சிரசையும்ஆனந்தபாஷ்பம் பொழிகின்றகண்களையுமுடையவ ராயினாரென்றவாறு. (எகூ)

அன்புடனோக்கிநிற்பரழுவர்கைதொழுவார்விழுவ......... *
ரின்புறவெழுவர்பின்பாலலகுவரிரங்குமீள்வர்............... *
நன்பகற்கங்குல்காணார்ஞானநலமிகக்கொண்டு ...... .. ...*
கொன்புனைபித்தர்பாலாபிசாசர்தங்கொள்கையானார் ... ... *

(இ-ள்.) தமக்குஅனுக்கிரகஞ்செய்தபரமாசாரியனையன்பொடே பார்த்துநிற்பார்ஆனந்தபாஷ்பம்பொழியஅழுவார்கைகூப்பித்தொழுவார்கீழேவிழுந்து நமஸ்கரிப்பார் ஆசைபொருந்தஎழுந்திருப்பார்பறங்காட்டாமல் முன்பாகநடந்துசெல்வார்இரக்கங்கொண்டு திரும்பிவருவார் பகலும் இரவும்அறியமாட்டார்சிவஞானத்தையே பொருளாகக்கொண்டு கண்டோர்களை அச்சஞ்செய்கின்ற பித்தர்பாலர்பிசாசர்களுடைய கோட்பாட்டையுடையவரானார் மாணிக்கவாசகரென்றவாறு (அய)

டன்றாமிந்நிலைமையுற்றார்தன்படைசுற்றமாகித்...... ... ...*
துன்னினரெலாம்வந்துதோன்றலைத்தொழுதுநின்ற...... *
தென்னவன்முனியாவண்ணஞ்செழும்பரிநிரல்கொண்டேக
வென்னுமதொன்றுந்தேராதிதுபழுதென்றிரங்கி ... ......*

(இ-ள்) நிலைபெற்றஇந்நிலையைப்பொருந்தியதிருவாதவூரருடையவலிமைபொருந்தியபடைத்தலைவர்களும்பந்துக்களுமாகியஎல்லாரும்நெருங்கியெதிரேவந்துநின்றுஅவரைத்தொழுதுவணங்கி அரசனாகியபாண்டியன்கோபியாதபடிசெழுமை பொருந்திய குதிரைக்கூட்டங்களைவாங்கிக்கொண்டுபோகவேண்டுமென்பதைத்தெரியாதிருக்கிறதுபழுதென்றிரங்கியென்றவாறு (அக)

ஐயநீவருதல்வேண்டுமென்றவரழைத்தபோதிற்...... ......*
செய்யநீறணியார்தாளைத்திறலினர்தம்மைநோக்கி...... ... *
மையலாமுணர்வின்மிக்கீரியாவர்நீர்மாயாபேதப்......... *
பொய்யெலாமுரைத்தல்வேண்டாம்போமினியகலவென்றார் *

(இ-ள்.) ஐயரே நீர்வரவேண்டுமென்று அவரழைத்தபோதில்செம்மையையுடையதிருவெண்ணீறணிகின்ற திருவாதவூரர் அந்தச்சே

ளுதிபதிகளைப்பார்த்து அஞ்ஞானத்திலே யிருந்தநீங்கள்யாவர்யா யாயேதாமகியபொய்யுரைகளெல்லாம்நம்முடனேசொல்லவேண்டா ம்தூரப்போய்விடுங்களென்றானென்றவாறு (அஉ)

என்னிவர்புகல்வதென்றேபாவருநின்றிரங்கி ... ... ... ... *
துன்னுநற்றுணைவீரர்தம்முளேதுயரமெய்திப் ... ... ... *
பன்னுநம்மொழியுங்கொள்ளார்பரிவிலரொன்றுநீங்கித் ... ... *
தென்னவற்கின்னவாறுசெப்புவோமென்றுசென்றார் ... ... *

(இ-ள்.) இவரிப்படிசொல்வதுஎன்னவென்றுசேனாதிபதிகளெல் லோரும்இரங்கிநின்றுதங்களுக்குள்ளே துன்பமடைந்து நாம்சொ லுகின்றசொல்லையும் உட்கொள்ளாதவராயும்நம்மேலன் பில்லாதவ ராயுமிருக்கிறாரென்று அவரைவிட்டு நீங்கிப்பாண்டியராசனுக்கு இ தைச்சொல்லுவோமென்றுபோனார்களென்றவாறு. (அரு)

சென்றவர்வையைநாடன்றிகழ்சபைமுன்னெய்தி ... *
வென்றிறன்மன்னம்போற்றி மாமதுரேசம்போற்றி ... ... *
யென்றுபின்வாதவூரரெய்தியசெய்தியெலலா ... ... *
மொன்றியகவற்றிகூருமுளத்துடனின்றுசொல்வார் ... *

(இ-ள்.) அப்படிபோனவர்கள் பாண்டியராஜனுடைய சிறப்புப் பொருந்திய சபைக்கெதிரேபோய் நின்று பராக்கிரமத்தையுடைய அரசனே சரணம் பெரியதுரைக்குநாயகனே சரணமென்று வண ங்கினபின்பு திருவாதவூரர் நடந்தசெய்கைகளையெலலா மிருந்தக வலைபொருந்திய மனதுடனேநின்று சொல்வார்களென்றவாறு.

நின்பெயர்புனைந்தோராகிநின்பெருங்கருமஞ்செய்வோ ... *
ரன்பவர்செய்கைதன்னையெங்ஙனம்யாங்கள்சொல்வோம் *
பொன்பொலிமௌலிபோய்நின் புடைவிடைகொண்டுபோந் *
தன்பெருந்துறையாமந்தவளநகர்புகுந்தபின்னர் [ரு

(இ-ள்.) தென்னவன் பிரமராயனென்று உன்பெயரைத் தரித் தவராகியும் உனக்கு மந்திரித்தொழில் செய்பவராயும் இருக்கின்ற திருவாதவூரருடையசெய்தியை எப்படி நாங்கள்சொல்வோம்பொ ன்னினாற் செய்யப்பெற்று விளங்கிய கிரீடத்தைத்தரித்த அரசனே உன்னிடத்திற் செலவுபெற்றுக்கொண்டுபோய் நிலைபெற்ற திருப் பெருந்துறையென்னும் பெயரையுடைய அழகிய நகரத்திலே பு குந்தபின்பென்றவாறு. (அரு)

அந்நகர்மருங்கோர்காவிலணைந்துளகுருந்திலீசன் ... *
றன்னடியார்களாகுந்தாபதர்பல்லர்சூழ ... ... ... *
மன்னியங்கொருவர்மேலாமாதவவேடம்பூண்டு ... ... *
முன்னுறவிருத்தல்கண்டுமுடிவிலாமகிழ்ச்சிகொண்டு *

(இ-ள்.) அந்தநகரத்துக்குப்பக்கத்தில் ஒருசோலையிலிருக்கின்ற குருந்தவிருக்ஷநிழலின்கண்ணே சிவனடியார்களாகிய தபசிகள் அனேகர்சூழ நிலைபெற்று அங்கே ஒருவர்மேலாகிய மகிமைபொருந்திய தவவேடம்பூண்டு எழுந்தருளியிருப்பதைக்கண்டு அளவற்றசந்தோஷம்பெற்றானென்றவாறு. (அசு)

அங்கவர்தாமுந்தாமுமன்பொடுசிலசொற்கூறிச் ...... *
சங்கரசிவனேபோற்றியென்றவர்தாளில்வீழ்ந்து......*
செங்கரங்குவித்துச்சென்னிசேர்த்துவந்தனைகள்செய்து
பொங்கொளுமணிப்பூணுடைபொருளெலாமுவந்துதல்கி

(இ-ள்.) அந்தப்பெரியவரும் தாமும் அன்புடனே சிலவார்த்தைகள்பேசிச் சங்காசிவனே சரணமென்று அவருடைய பாதங்களிலே நமஸ்கரித்துச் சிவந்தகைகளைக்கூட்டிச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு பூசித்து மிகுந்த ஒளியையுடைய ரத்தினுபரணங்களையும் பட்டுவஸ்திரங்களையும் திரவியங்களையும் சந்தோஷமாக அவருக்கேகொடுத்தானென்றவாறு. (அஎ)

குறைவிலாவாடைநீத்துக்கோவணமுடுத்துச்சென்னி...... *
நறைமயிர்விரித்துநீற்றைமெய்யெலாநயந்துபூசி... ..... *
முறைமையன்றிதுதானென்னுமொழிந்தவெம்முகமும்பாரார்
நிறைபழிபித்தராளுர்நிருபவென்றிறைஞ்சிநின்றார்.........*

(இ-ள்.)குறைவில்லாத தம்முடைய வஸ்திரத்தைநீக்கிக் கோவணமாத்திரங் கட்டிக்கொண்டு தலையிலேயுள்ள மயிரைவிரித்துக்கொண்டு தேகமுழுவதும் விபூதியை விருப்பத்துடனேயணிந்து இப்படிச்செய்கிறது கிரமமல்லவென்றுசொன்ன எங்கள்முகத்தையும் பாராதவராய்க் கிரமந்தப்பியபித்தனைப்போலானுர் பாண்டியனேயென்று வணங்கிநின்றார்களென்றவாறு. (அஅ)

கேட்டலுமதுரைமாறன்கிளர்ந்தமெய்ம்முழுதும்வேர்வு... *
காட்டிடவெகுளிபொங்கிக்கண்கனல்வடிவமாகி ............ *
வாட்டிறன்மன்னர்க்கின்னவண்மையருளமோல்லவைய......... *
மீட்டுறுசெல்வந்தானையெவையிலவென்றுநக்கான் ............*

(இ-ள்.)அவர்கள் சொன்னவார்த்தையை மதுராபுரியாசனுகிய பாண்டியன்கேட்டுத் தேகமுழுவதும் வேர்வையுண்டாக கோபமிகுந்து கண்கள்அக்கினிவடிவாகச்சிவந்து வாள்யுத்தத்திலே திறத்தையுடைய அரசர்களுக்கு இப்படிப்பட்ட வளத்தைச்செய்கின்ற மந்திரிகளுண்டாமூல சம்பாதிக்கப்பட்ட நாடு செல்வம் சேனைமுதலியவைகளில் குறைவென்னவென்று சிரித்தானென்றவாறு. (அகூ)

அடுபரிகொள்வானிந்தவரும்பொருள்கவர்வதாகக் ............*
கெடுமதியுரைப்பார்தஞ்சொற்கேட்டுமாலெய்தினனைக்......*
கொடுமைகொளிந்தவோலைகொடுத்தொருதினத்துணம்பாற்*
கடுநடைத்தூதரேகிக்கைக்கொண்டுவம்மினென்றான் ........*

(இ-ள்.) யுத்தத்திலே பகைவனைக்கொல்லத்தக்க குதிரைகளைக் கொள்ளும்பொருட்டு நாம்கொடுத்தஅரியதிரவியங்களைக்கொள்ளை யிடுவதற்காகக் கெடுமதிசொல்லுவார்சொல்லைக்கேட்டுமயங்கியதிரு வாதவூரனைவேகமாகிய நடையையுடைய தூதர்கள்போய்க் கொடு மையாகவெழுதிய இந்தவோலையைக்கொடுத்து ஒருதினத்திலேநம் மிடத்திற்குக் கைப்பிடியாகக்கொண்டுவாருங்களென்றான் பாண்டி யராஜனென்றவாறு. (கூய)

ஏவலிற்சென்றதூதரெழிற்பெருந்துறையிலெய்தி........*
யாவலிற்சிவன்றாளேத்துமன்னனைக்கண்டிறைஞ்சி........*
மேவலர்க்குருமேறென்னவெந்தொழில்வேந்தன்வாய்ந்த .*
காவலர்க்கதிபன்மாறன்திருமுகங்காண்கவென்றார் ..........*

(இ-ள்) அந்தப்பாண்டியராஜன் ஏவலினாலேபோன தூதர்கள் அழகியதிருப்பெருந்துறைக்குப்போய் அன்பினாலே சிவனுடைய திருவடிகளை வணங்கியிருக்கின்ற திருவாதவூரனைக்கண்டு வணங்கிச் சத்துருக்களுக்குக் கொடியதண்டத்தைச்செய்கின்ற இடியேறுந் தவேந்தனாகியும் மேன்மைபொருந்திய அரசர்க்கரசனாகியும் இருக் கின்ற பாண்டியனுடைய திருமுகம் இதுகாண்பீராகவென்று சொன் னார்களென்றவாறு. (கூக)

அற்றமில்கொள்கைமிக்காரரன்திருமுகமதன்றி..............*
மற்றொருமுகமுங்காணமனதிலரிதன்மேலன்பு.......... ....... *
பற்றிலர்பிறிதோரோலைப்படியெடுத்துரைமினென்ன .......*
வுற்றதனியல்புவல்லானெழுதியதுவந்துசொல்வான் ....... *

(இ-ள்) சோர்வில்லாதகோட்பாட்டின்மிகுந்த திருவாதவூரர்ப ரமசிவன் திருமுகமல்லாமல் வேறொருமுகத்தையும் பார்ப்பதற்கு மனமில்லாதவராய் இந்தத்தூதர்கொண்டுவந்த திருமுகத்திலும்பற் றில்லாதவராய் வேறொருவோலைப்படியே யிதனையும்எடுத்துச்சொ ல்லுங்களென்றுசொல்ல அவர்சொற்படி நல்லதென்று அது தெரிந் தஒருவன் அதிலெழுதியிருப்பதை மகிழ்ந்து சொல்லுவானெ-று-

தென்னவனரசனோலைதென்னவன்பிரமராய..................*
னென்னுநல்லமைச்சர்காண்கவெல்லையிறவுங்கொண்டேகி *
த்னோன்னுறுபரிகொளாமற்கோவனுறங்கிருந்தீர் ......... .*
மன்னர்தங்கருமஞ்செய்வார்வன்னபரிசிலுவகையுந்தேம்.*,

(இ-ள்) பாண்டியராஜனு லெழுதப்பட்ட வோலைதென்னவன் பிரமராயனென்றுசொல்லும்நல்லமந்திரிகாண்க அளவற்றதிரவியங் கொண்டுசென்று பெருமைபொருந்திய குதிரையைக்கொள்ளாமல் கோவணங்கொண்டீர் அரசரது காரியஞ்செய்பவர்களுடைய வண்மையிப்படிப்பட்டதென்று மகிழ்ச்சியடைந்தோ மென்றவாறு.

வையகமன்னராகிவாழ்வதின்மனைகம்டாறு............ ...*
மெய்தியவுதரத்தீயாலிரப்பதுபெருமையன்று ......*
மெய்தகத்தம்மையாண்டவேந்தனைப்பிழைத்துவேறு... ...*
செய்வதுபலிக்குமென்றுதேர்ந்தநூற்றுணிவுங்கண்டோம் *

(இ-ள்) பூலோகத்து அரசராகிச்சம்பத்துடன் வாழ்வதைக்காட்டிலும் வீடுகள்தோறும் தன்னையடைந்த உதராக்கினியினாலே இரப்பது பெருமையாகுமென்று உண்மையாகத் தம்மைசம்ரக்ஷணை செய்த அரசருக்குப் பிழைசெய்துவேறொருகருமஞ்செய்வது பயன்படுமென்றும் நீர் நூலிலே ஆராய்ந்து தேர்ந்த துணிவையுங் கண்டோமென்றவாறு. (௩௬)

மன்னனையடைந்துவாழ்தல்வஞ்சநஞ்சுமிழ்நாகந்... .......*
தன்னுடன்மருவிவாழ்ந்தன்மையென்றுணர்வீராயிற் ......*
றின்னுமிவ்வோலைகாணும்பொழுதுநந்தூதர்களம்மோ ......*
டிந்நகர்வருவமாறமெழுத்தெனவுரைத்துநின்றான்.........*

(இ-ள்) அரசனைச்சேர்ந்துவாழ்வது வஞ்சகத்தைச்செய்யும்விஷத்தையுமிழ்கின்ற சர்ப்பத்துடனே கூடிவாழ்கின்ற தன்மைபோலவென்றறிவீராகில் இந்தவோலையைக்கண்டமாத்திரத்திலே நம்முடைய தூதர்களுடனே இந்தமதுராநகரத்துக்கு வரக்கடவீராக இதுபாண்டியன் கையெழுத்தென்று படித்துநின்றான்-எ-று.

மீனவனெழுதுமோலைகேட்டபின்மின்பாலன்ப...... ... *
ரானவரடியாரெம்மையடிமையாயுடையரல்லாற் ...... ...*
றானெனக்கண்ணனென்றுந்தனையான்பிழைத்தேனென்று*
மாநிலமன்னர்சொன்னதென்னெனமனத்திலெண்ணி. ...*

(இ-ள்) பாண்டியனெழுதிவிட்டவோலையைக்கேட்ட மாணிக்கவாசகர் உமாதேவிபாகராகிய பரமசிவனுடையஅடியார்களேயெம்மை அடிமையாக உடையவரேயல்லாமல் தானெனக்குத் தலைவனென்றும் தனக்குநான் பிழைசெய்தேனென்றும் பெரியவுலகத்தையாளுகின்ற அரசன்சொன்னது என்னவென்றுமனதிலே நினைத்தென்றவாறு. (௩௭)

அந்தகவெழுத்தோதக்கேட்டபண்டவன் தூதர்தாமும்... ....*
வந்தெதிருடையனுக்கீட்டோருடையவாமதுரையாலே ... .....*

ன் ஆவணிமாதம் மூலநாளில் இங்கே நல்லகுதிரைகள் வருமென்று சொல்லுவாயாக வென்றவாறு. (௱)

தொன்மதிக்குலத்துமன்னன்றுயர்செய்வனென்றேசற்று ...✽
நின்மனக்கவர்ச்சிகொள்ளாதொழிகென நீறுசாத்திப் ........✽
பொன்மணிக்கலன்களைக்கிப்பூந்துகில்பிறவுந்தந்து ...... ..✽
மன்மனத்துவகைகூரமந்திரிப்பான்மைசெய்து .... ... ....✽

(இ-ள்) பழமையால்வருகின்ற சந்திரகுலத்து அரசனாகிய பாண்டியன் துன்பப்படுத்துவானென்று சற்றும் உன்மனதிலேகவலைகொள்ளாதேயென்று விபூதிதரித்துப் பொன்னாலும் ரத்தினங்களாலுஞ் செய்த ஆபரணங்களும் அழகியவஸ்திரமும் வாகனமுதலியவைகளுங்கொடுத்து அவ்வரசன் மனதில் மகிழ்ச்சியடையும்படி மந்திரிக்கேற்றகோலஞ்செய்தென்றவாறு. (௱க)

தென்றிசைக்கதிபன்றன்பாற்சென்றிதுகொடுத்துக்காண்டி....✽
யென்றுநன்மணியுநல்கியேகெனவிடுத்தபின்னர் ... ......✽
கன்றகல்புனிற்றுவென்னக்கசிந்திருகண்ணீர்வார............✽
நின்றுநின்றிறைஞ்சியையாநீத்தியோவென்றுநொந்து......✽

(இ-ள்) தென்னாட்டிற்கு அதிபனாகியபாண்டியனிடத்திலேபோய் இதைக்கொடுத்து நீகாண்பாயாகவென்று நல்ல மாணிக்கமொன்று கொடுத்துப்போவென்று அனுப்ப அதன்பின்பு கன்றைநீங்கிப்போகுந்தலையீற்றுப்பசுப்போலஇருகண்ணிலும்கசிந்துநீரொழுகும்படி நின்று நின்றுவணங்கி ஐயாவென்னை நீக்கினையோவென்றுமனநொந்தானென்றவாறு. (௱உ)

விழிப்புனல்சிந்தச்சிந்தவிண்ணவன்விடைபெற்றேகிச்✽
சுழிப்புனல்வாவிசோலைசூழ்பெருந்துறையைநீங்கி .. ✽
வழிக்குறுதுணையாயுள்ளவள்ளலைந்தெழுத்துமோதிப் ✽
பழிச்சுறுதூதரோடுமதுரையம்பதியிற்சென்றார் . ...✽

(இ-ள்) கண்களிலேயிருந்துநீர்தாரைதாரையாயொழுக ஆரமைபுடனேபரமசிவனிடத்திலேசெலவுபெற்றுக்கொண்டுபோய்ச்சுழியையுடையநீர்மிகுந்ததடாகமுஞ்சோலையுஞ்சூழ்ந்த திருப்பெருந்துறையைநீங்கிவழிக்குத்துணையாயிருக்கின்றகடவுளுடைய பஞ்சாட்சரமும் உச்சரித்துக்கொண்டு தம்மைவணங்குகின்ற தூதர்களுடனேமதுராபுரியிற்சேர்ந்தார்திருவாதவூரரொன்றவாறு. (௱ங)

மதுரைமன்னவன்முனேகிமனமிலாவணக்கஞ்செய்து ✽
கதிர்மதிச்சடையோனீந்தகவின்கொண்மாமணிமுனல்கி,
'யெதிருறநின்றபோதிலின்புறவழுதிநோக்கி .........✽
விதிமுறையிருமிங்கென்னவிருந்தனர்விரிந்தநூலார் .. ✽

(இ-ள்) அம்மதுரை அரசனாகியபாண்டியனிடத்திற்குப்போய் அதில்விருப்பமில்லாமற்புறத்தில் வணக்கஞ்செய்துகிரணநிறைந்த சந்திரனைத் தரித்த சடையையுடைய பரமசிவன் கொடுத்த அழகு பொருந்தியமாணிக்கத்தைக் கையுறையாகவைத்து எதிராகநின்ற மாத்திரத்தில் மனமகிழ்ச்சியுடனேபாண்டியராஜன்பார்த்து முறைமைப்படி இங்கேயிருவென்று சொல்லியிருந்தார் விரிந்தநூலில் வல்லவராகிய மணிக்கவாசகரென்றவாறு. (ாச)

விலைமதிப்பில்லாவந்தமேதகுமணியைப்பல்கா ...... *
விலையறவியந்துநோக்கிநெஞ்சினுவகையெய்தித் *
தலைவனைச்சிந்தையுள்ளேதரிப்பவர்தம்மைநாடி... ...*
சிலைமுகக்கரத்துமன்னன் செய்ததே துரைமினென்றான்

(இ-ள் ஒருவராலும்விலைமதிக்கக்கூடாத அந்தமேன்மை பொருந்தியமாணிக்கத்தைவியப்புடனேபலதரம் உற்றுப்பார்த்து மனதிலே சந்தோஷப்பட்டுப் பரமசிவனைக்கருத்திலேவைத்திருக்கின்ற திருவாதவூரரைப்பார்த்து வில்லைக்கையிலேந்துகின்ற பாண்டியன் நீர் செய்த காரியமென்ன சொல்லுமென்று கேட்டான் எ-று (ாரு)

மலக்கொடும்பகையைவெல்வார்மன்னவன்முகத்தைநோக்கி.*
நிலத்தொளிர்புகழின்மிக்கார்நீதருநிதிகொண்டேகி...... *
யிலக்கணக்குறைபாடின்றியிரிருகதியுமுண்டாங்.......... ...*
குலப்பரியினங்கள்யாவும்விலைக்குறக்கொண்டபின்னர்......*

(இ-ள்) மும்மலங்களென்னும் கொடியபகைகளை வெல்லுகின்ற திருவாதவூரர் பாண்டியன்முகத்தைப்பார்த்துப் பூலோகத்திலே விளங்குகின்ற மிகுந்தகீர்த்தியையுடையஅரசனே நீகொடுத்ததிரவியத்தைக்கொண்டுபோய் இலக்கணங்களொன்றுங் குறைபாடில்லாமல் நான்குகதிகளுமுடைய நல்லசாதியான குதிரைக்கூட்டங்களெல்லாம் விலைக்குக்கொண்டபின்பென்றவாறு. (ாசா)

அரும்பரித்தொகுதியெல்லா மணிதிகழ்மதுரைக்கேகப்
பொருந்தியதினமேதென்னப்பூசுரர்விதியிற்றேர்ந்து*
திருந்துமாவணியாந்திங்கண்மூலநற்றினமாமென்ன...*
விருந்தனனதனைநாடிப்பெருந்துறையென்னுமூரில் *

(இ-ள்) அருமையானகுதிரைக்கூட்டங்களையெல்லாம் அழகுமிகுந்தமதுரைப்பட்டணத்துக்குக்கொண்டுபோகப்பொருந்தியநன்னாளென்றைக்கென்றுகேட்டபோதுபிராமணர்விதிப்படிபார்த்துத்திருத்தமாகிய ஆவணிமாதத்தில் மூலநட்சத்திரம் நல்லநாளென்று

# ௪௮ திருப்பெருந்துறைச்சருக்கம்.

சொல்ல அந்நாளைக்குறித்துக்கொண்டு திருப்பெருந்துறையென்னு
ம் ஊரிலேயிருந்தேனென்றவாறு. (௱௭)

நின்படைச்சுற்றமெல்லாநீடிமிந்நகருக்கெய்து .. .. *
மன்புடன்கடிதுமீண்டாரவர்பெரும்படிறுகூற.... *
மன்பெருமுனிவாலோலைவரைந்தனையதனாலவந்தேன் *
கொன்பரித்திரள்களெய்துங்கூறுமந்தணிமிலன்றூர் .*

(இ-ள்) உம்முடையசேனைகளும் சுற்றத்தாரும் நீடிய இந்தமது
ராபுரிக்குப்போகவேண்டுமென்னும் விருப்பத்துடனே சீக்கிரத்தி
லே திரும்பிவிட்டார்கள் அவர்கள்என்மீதுபெரியஅபவாதஞ் சொ
ல்ல அதைக்கேட்டுநீர் கோபத்துடனேஒருவோலையெழுதி அனுப்
பிவைத்தீர் அதனாலேமுன்னதாகவந்தேன்பெருமைபொருந்தியகு
திரைக்கூட்டங்களெல்லாம் நான்சொல்லிய ஆவணிமூலத்தன்றைக்கு
வருமென்றார் திருவாதவூரரென்றவாறு. (௱௮)

என்பதுகேட்டுமாறனும்பிடையெமக்குண்டான.....*
மன்பெருநண்புநீங்கநினைத்துளமனத்தார்சொல்லா *
லன்பிலர்போலவோலையெழுதினமதுகொண்டென்னே
துன்புறலொழிவீரென்றுநன்மையாய்த்தொன்மைகூறி.

(இ-ள்) இப்படிசொல்வதைக்கேட்டபாண்டியன் உம்முடனே
மக்குண்டாகிய நிலைபெற்றமிகுந்தசிநேகம் நீங்கும்படிக்கு நினைத்த
கருத்துள்ளவர்களாகிய சிலர்சொல்ல அதனாலே அன்பில்லாதவர்கள்
போல ஓலையெழுதினம் அதுகொண்டென்னகாரியம் மனவியாகு
லம் ஒழிவீர்களென்று நன்மையாகப் பழையவுரிமையின் படியே
பேசியென்றவாறு. (௱௯)

கொன்னெடுங்கோயிலூடுகொடுபுகுந்துரிமைகூறத்...*
தன்னருகிருத்திமேன்மைதக்கநற்கலைகளலகில்... ...*
பொன்னணிகலன்கள்யாவும் புனையுமென் றளித்துமுன்
போன்மன்னுளகருமங்கூறிமனையிடையேகுமென்றான்.

(இ-ள்) பெருமைபொருந்திய நெடியஅரமனையிடத்தே அழை
த்துக்கொண்டுபோய் உரிமையாகத்தன்னுடைய பக்கத்திலிருத்தி உ
யர்ந்ததகுதியாகிய நல்லவஸ்திரங்கள்கொடுத்துப்பொன்னினாற்செய்
தபலவுஆபரணங்களைத்தரித்துக்கொள்ளுமென்று கொடுத்துமுன்
போலத்தானே இராசகாரியங்களெல்லாஞ்சொல்லிவீட்டுக்குப்போ
மென்றுவிடுத்தான் பாண்டியராஜனென்றவாறு. (௱௰)

தன்பதிமனையிற்சென்றுதாபதர்வைகட்பின்னர் ... .... *
நன்பரிச்சமூகமெய்துநாளிரண்டென்னுமுன்னர் .... *

வெம்படைச்சுற்றநீங்கியிருந்துழிவிரிந்தநேமி... ...*
யம்புவிக்கரசன்றன்முனமைச்சரிலொருவன்சென்று.*

(இ-ள்.) தன்னுடையபெரிய அரண்மனைக்குப்போய்த் திருவாத ஆரரிருக்கட்பின்பு நல்லகுதிரைக்கூட்டங்கள்வரவேண்டியதினத்துக்கு இரண்டுநாளைக்குமுன்னேவிரியப்பெற்ற சமுத்திரஞ்சூழ்ந்த. புவிக்கரசனாகிய பாண்டியன்வெவ்விய சேனாதிபதிகள்சுற்றங்கள்யாவரையும் நீங்கித் தனித்திருக்கும்போது மந்திரிகளில் ஒருவன்முன்னேபோயென்றவாறு. (௩௰௧)

போற்றியெம்பொருளைநாடபோற்றியென்றிறைஞ்சிக்கூறு*
மாற்றமுண்டொன்றுநின்பேர்புனைந்துளவரிசைபெற்றோர்*
சாற்றருந்துரகங்கொள்ளநேரியன்றலத்திற்சார்ந்து ..... ...*
நீற்றினனடியார்கையினின்பொருள்யாவுமீந்தார் .. . ......*

(இ-ள்) பொருளைநாடனாகிய அரசனேசரணஞ் சரணமென்றுவணங்கஞ்செய்து யான்சொல்லுகின்ற விண்ணப்பமொன்றுண்டு அதென்னெனில் தென்னவன்பிரமராயனென்று நின்பெயரைத்தரித்திருக்கின்ற வரிசைபெற்றோராகிய மந்திரியார்சொல்லுதற்கரிய குதிரைகொள்வதற்குச் சோழனுடையதேசத்துக்குப்போய்த் திருநீறுதரிக்கின்றபரமசிவனடியார்கையில் உன்னுடையதிரவியங்களெல்லாங் கொடுத்துவிட்டாரென்றவாறு. (௩௰௨)

நின்பெருந்தூதரோகியெழுதுநின்றோலைகாட்டும்......*
பின்புவந்துனதுசீற்றமொழித்துயிர்பிழைத்தலெண்ணி
யன்புடையவர்போலுன்றனடியிணைகுறுகிப்பின்னர் *
நன்பரித்திரளிங்கெய்துநாளுனக்களிப்பலென்றார் ..*

(இ-ள்) பெரியஉம்முடையதூதர்கள்போய் நீரெழுதியவோலைகாட்டியபின்பு அவர்வந்து உமதுகோபத்தைநீக்கித் தம்முயிர்பிழைப்பதுகருதி அன்புடையவர்கள்போலஉமதுதிருவடியைச்சேர்ந்து ஆவணிமூலத்தில் நல்ல குதிரைக்கூட்டங்களிங்கு நானுனக்குத்தருவேனென்றாரென்றவாறு. (௩௰௩)

மற்றவர்மொழிந்தவெல்லாம்பொய்புனைமன்னவென்னச்
சொற்றமிழ்வையைநாடன்றூதரைவெருவநோக்கி ... *
யற்றமில்சுருதிவல்லாரருட்பெருந்துறையிலெய்தி [ன்
யுற்றவெம்பரிகளுண்டேலோலைவந்துரையினென்று

(இ-ள்) அந்தத்திருவாதவூரர்சொன்ன வார்த்தையெல்லாம்பொய் வார்த்தையாகும் அரசனேயென்றுசொல்லப் பாண்டியராஜனுடனே தூதர்களஞ்சும்படிப்பார்த்துச் சோர்வில்லாதவேதத்தில்வல்ல பெரியோர்கள்வசிக்கின்ற மகிமைபெற்ற திருப்பெருந்துறைக்குப்

# ௩ய் திருப்பெருந்துறைச்சருக்கம்.

போய் அங்கேகுதிரைகளிருக்கின்றனவாவென்று சீக்கிரத்திற் பார்த்துவந்து சொல்லுங்களென்றானென்றவாறு. (௱௰௪)

அருந்திறற்றூதரோகியத்தினங்கடிதுமீண்டு .... ... *
வருந்திமுன்சென்றுமன்னர்மன்னனைவணங்கிநின்று *
பெருந்துறையெல்லூரும்பிறிதுளபதியுந்தேடிக் *
கருந்தடங்களிற்றும்வேந்தகண்டிலப்பரிகளென்றார் ...*

(இ-ள்.) அரியதிறத்தையுடைய தூதர்கள்போய் அன்றைத்தினந்தானே சீக்கிரத்திலே திரும்பி வருத்தத்தோடு மன்னர்மன்னனாகிய பாண்டியன்முன்னேவந்து வணங்கிக் கரியமலைகள்போன்ற யானைகளையுடையவரசனே திருப்பெருந்துறையென்னுமூரிலும் அடுத்தமற்றவூர்களிலும் தேடிப்பார்த்தோம் குதிரைகளைக் காண்கிலோமென்றார்களென்றவாறு. (௱௰௫)

பாங்குநின்றின்னவாறுபகர்தலும்வெகுட்சியெய்தி... .....*
யீங்குதங்கருமஞ்செய்வனென்றிடர்செய்வான்றன்னைத் ... *
தாங்கருந்துயரஞ்செய்துதகைந்துநந்தனத்தையெல்லாம் *
வாங்குமின்றண்டலாளரென்றிகன்மன்னன்சொன்னான் .. ...*

(இ-ள்) தூதர்களிந்தப்பிரகாரஞ்சொன்னமாத்திரத்திலே கோபமடைந்து இங்கேநம்முடைய காரியஞ்செய்கிறேனென்று போய் நமக்குத்துன்பஞ்செய்தவனைப் பொருத்தற்கரிய துயரஞ்செய்து மறித்து நம்முடையதிரவியங்களையெல்லாம் வாங்குங்கள் தண்டற்காரர்களேயென்று ஆக்கியாபித்தான் வலிமையையுடையபாண்டியராசனென்றவாறு. (௱௰௬)

மன்பெருந்தண்டலாளர்மறையவர்குலத்துமிக்கார் ...*
முன்புநின்றினையசொல்வார்முனிவுடைமுகத்தராகி *
நன்பரித்தொகுதிகொள்ளநயந்துமக்கந்ந ளீந்த.....*
தன்பொருளெல்லாம்வாங்கச்சாற்றினன்சீற்றமன்னன்.*

(இ-ள்) அரசனுடைய பெரியதண்டற்காரர்கள் பிராமணகுலசிரேஷ்டராகிய மிகுந்த மாணிக்கவாசகர் முன்னேநின்று இவைகளைச்சொல்வார்கள் கோபத்தையுடைய முகத்தினராகிய நல்லகுதிரைகளைக்கொள்ள நயமுடனேஉம்முடையகையில்அந்நாளிற்கொடுத்ததன்னுடையதிரவியமெல்லாம்வாங்கச்சொல்லினன்கோபத்தையுடையபாண்டியனென்று பின்னுஞ்சொல்லுவார்களென்றவாறு. (௱௰௭)

மற்றிதன்பயனியாதெனின்மன்னவன்விடுட்பவென்றி *
யுற்றவன்றூதர்வல்லையொண்பெருந்துறையிலெய்திக்*

கொற்றவெம்பரிகள்காணார்மீண்டனர்கோவுமப்பாற் *
பற்றியநேசம்விட்டான்பாரினியாளவொட்டான்...... *

(இ-ள்.) இப்போது நாங்கள்பணத்தைக்கேட்பதற்கு நிமித்தமென்னவெனில் அரசனாலே விடுக்கப்பட்ட வெற்றிபொருந்திய வலிமையுடையதூதர்கள் சீக்கிரத்திலே திருப்பெருந்துறைக்குப்போய் வெற்றியையுடைய வெவ்வியகுதிரைகளைக்காணாமல் வந்துவிட்டார்கள் ஆகையால் அரசனும் உம்மிடத்திலேவைத்த நேசத்தைவிட்டான் இனிப்பூமியையும் ஆளவொட்டானென்றவாறு. (௱௰அ)

தனமினிற்றருதல்வேண்டுமென்றுவன்றண்டலாளர்... *
சினமுடன்புகலவாளாவிருத்தலுந்தீமைகூறு ...... *
நினைவுடனமைச்சர்வாழ்வுநீக்கிமெய்யாக்கைமன்னர்த் *
தனியுறவலிதிற்காவற்சாலையிலாக்கினார்கள் ......... *

(இ-ள்) திரவியமுழுவதுங்கொடுக்கவேண்டுமென்று பின்புதண்டற்காரர் கோபத்துடனேசொல்லப் பேசாமலிருக்கவேஅவர்கள்தீமை மிகுத்தமனதுடனே அமைச்சுரிமையை நீக்கி உண்மையாக்கையுடைய மாணிக்கவாசகரை வலிமையாகச்சிறைச்சாலையில் வைத்தார்களென்றவாறு. (௱௰௯)

சற்றுமுட்டளர்விலாததன்மையின்வாதவூரர்... ............ *
மற்றவர்செலுத்தச்சென்றுவன்சிறைச்சாலெய்த ......... *
நற்றவர்வருத்தங்காணநாணமுற்றொளிப்பான்போன்று *
பொற்றடந்தேரின்வெய்யோன்போய்க்குடபான்மறைந்தான்

(இ-ள்) சற்றாயினும் மனந்தளர்ச்சியில்லாததன்மையையுடையவராய்த் திருவாதவூரரானவர் அந்தத்தண்டற்காரர் செலுத்தப்போய் வலியசிறைச்சாலையையடைய நல்லதவத்தையுடையஇவரது வருத்தத்தைப்பார்க்க நாணமடைந்துஒளிப்பவனைப்போலப்பொன்மயமாகிய விசாலம்பொருந்திய தேரினின்றும் சூரியன்போய் மேற்குத்திசையின்கண்ணே மறைந்தானென்றவாறு. (௱௨௰)

கள்ளுலாவிதழிமாலைகவின்பெறமுடித்தவேணி ......... *
வள்ளலாரேவச்சென்றுவழுதிமேல்வெகுட்சிகொண்டு...... *
வெள்ளைவான்பிறைப்பற்றோன்றவிழுங்கவந்தகாந்தபேயின் *
கொள்ளைவாயனையவண்ணங்கொண்டதுசெக்கர்வானம் ... *

(இ-ள்.) தேனுலாவியகொன்றைமாலிகையை அழகுபெறமுடித்த சடையையுடைய பரமசிவன் ஏவப்போய் பாண்டியன்மேற் கோபங்கொண்டு வெளுத்த மேலாகிய பிறைப்பல்லானதுதோன்ற

## ௱௨ திருப்பெருந்துறைச்சருக்கம்.

விழுங்க வாயைத்திறந்த கொள்ளிவாய்ப் பிசாசம்போல வடிவுகொண்டது செக்கர்வானமென்றவாறு. (௱௨௧)

தெண்டிரையுலகிநல்லதிறத்தினர்க்குற்றதீங்கு........*
கண்டுளசிறியோர்போலநகை கத்தனகவின் கொண்முல்லை
யொண்டமிழ்வாதவூரர்க்குற்றதையுணர்ந்தேதுன்டங்*
கொண்டவரிதயம்போலக்குவிந்தனகமலமெலாம் *

(இ-ள்.) தெளிந்த அலைநீர்சூழ்ந்த உலகத்திலேநல்லயோக்கியர்களுக்குச் சம்பவித்ததீங்கைப்பார்த்தசிறியவர்கள்போலவாசனைகொண்டமுல்லைச்செடிகள் சிரித்தன ஒள்ளிய தமிழ்வேதம் பாடுகின்றமாணிக்கவாசகருக்கு வந்ததீங்குதெரிந்து துன்பங்கொண்ட பெரியோர்கள் சிந்தைபோலக்குவிந்தன தாமரைமலர்களெல்லாம். எ-று.

தென்னவன்வைத்தகாவற்சிறையினிலுறையுந்தெய்வ ...... *
மன்னவரொருவர்காணிறுணமுற்றயர்வாரென்றே .........*
யின்னல்கொண்மனத்தாள்போலவிருட்கரங்கொண்டுகூடற் *
பொன்னகருள்ளார்கண்கள்புதைத்தனள்கங்குல்மங்கை . *

(இ-ள்.) பாண்டியனால் வைக்கப்பட்ட சிறைச்சாலையிலேதங்கிய தெய்வத்தன்மையையுடைய திருவாதவூரர் ஒருவர்கண்டால்மனமழிவாரென்று துன்பங்கொண்ட மனமுடையவள்போல இருளாகிய கைகளைகொண்டு அழகியமதுரைமாநகரிலுள்ளவர்கள் கண்களைப்புதைத்தனள் இராத்திரியாகிய பெண்ணென்றவாறு. (௱௨௩)

மன்பகைதுரப்பதிந்தமந்திரித்தலைவர்க்குண்டா......*
மென்பதுமுளதோவந்தோ வென்செய்துமென்றிரங்கி
யன்பனையகன்றுநெஞ்சாலழலெழவுயிர்த்துமாழ்குந்*
துன்புடைமடவார்போலத் துயின்றிலர்மதுரையுள்ளார் ·

(இ-ள்.) பாண்டியனுடைய பகையை நீக்கிக்கொள்ளுந் தன்மைஇந்தமந்திரிகளிலே முதன்மைபெற்ற திருவாதவூரருக்கு உண்டாமென்று சொல்வதுமுண்டோ ஐயோ, இதற்கு நாமென்னசெய்வோமென்றிரங்கித் தலைவனைப்பிரிந்து ஆற்றாமையுள்ள மனத்தோடு அழலாகிய பெருமூச்சுவிட்டு மயங்குகின்ற துன்பத்தையுடைய மகளிர்போல அன்றிரவில் நித்திரைசெய்கிலர் மதுரையிலுள்ளவர்களெல்லாமென்றவாறு. (௱௨௪)

செம்மனப்புனிதர்க்குண்டாந்தீங்குதங்கிழமையாமேல...... *
யைம்முகக்கடவுளீன்ற வறுமுகற்குணக்குமாபோல்...... *
விம்முசெஞ்சூட்டுமுட்டாள்வியன்சிறைச்சேவலெல்லாந்...*
தம்மனையிடங்கடோறுந்தழங்கினபுலரிக்காலை............ *

(இ-ள்.) நல்லமனத்தையுடைய பரிசுத்தரானதிருவாதவூரருக்கு உண்டாகிய தீங்கினைத்தங்களுக்கிருக்கின்ற உரிமையினாலே ஐந்துமுகத்தினையுடையபரமசிவனின்றருளியஆறுமுகசுவாமிக்குச் சொல்வதுபோலப் பருத்த சிவந்தஉச்சிக்கொண்டையையும் முள்ளையுடையகாலையும்பெரியசிறைகளையுமுடைய சேவல்களெல்லாம் தங்கள்தங்கள்வீடுகள்தோறும்விடியற்காலத்திற்சத்தித்தனவென்றவாறு(ருஉ௫)

சிற்பரமுணர்ந்துஞானச்செந்தமிழ்நூனீதிப் ... ..... ..... *
பொற்பினை யுடைமாணிக்கவாசகர்க்கிருதுபாரார்
விழ்ப்பொய்மொழியிற்பிழைத்தசடிலனைப்போல ............ [போல
லற்புதன்கோயின்முன்றிலார்த்தனசங்கமெங்கும் ..........*

(இ-ள்.) பரமசிவனது யதார்த்தவடிவையறிந்து செவ்விய தமிழ்வேதமென்கிற ஞானநூலையோதும் நீதியையுடைய மாணிக்கவாசகருக்குத்துன்பத்தை பொறுக்கமாட்டாமற் பொய்ச்சொல்லுகின்றவர்கள்போலப்பிரகாசம்பொருந்திய சடையை யுடையவராயும் குலாயுதத்தையுடையவராயும் திருவாலவாயிலெழுந்தருளியிருக்கின்ற சொக்கநாயகர்சந்நிதிக்குமுன்னே அனேகசங்கங்கள்முழங்கினவென்றவாறு. (ருஉ௬)

எம்பிறைபரியிலேறுநாளிதோவென்றுபார்க்குஞ் ... .......*
செம்மலர்மடவாளிட்ட திலகசெந்தூரப்போல ............*
வம்மலைமிசையேவைகிபாடகக்கிரிசூழ்போந்து....... ... *
மைம்மிகுகடன்மேல்வந்துமுளைந்தது வாலைபானு........*

(இ-ள்.) எம்முடைய கடவுள்குதிரையிலேறிவருகின்றநாளிதுவென்று பார்க்கின்ற செந்தாமரைப்பூவில் வீற்றிருக்கப்பெற்ற திருமகளணிந்த சிந்தூரப்பொட்டுபோல மேற்குமலையில் அஸ்தமித்துமகாமேருமலையைச்சுற்றிக்கொண்டுவந்து கருமைமிகுந்த கீழ்க்கடலிலே உதயமானான்இளஞ்சூரியனென்றவாறு. (ருஉ௭)

மண்கெழுசெங்கோல்வேந்தன்வைகறையெழுந்துநீருற் ...*
கண்கடலவிளகிமூழ்கிக்கண்ணுதற்பூசைசெய்து ... .. ...*
தண்கதிர்முத்தமாலைதரித்துநற்கலன்கடாங்கி ........ ... ......*
விண்கிளர்செய்பொற்கோயின்முகப்பினிலவீற்றிருந்தான் *

(இ-ள்) பூவுலகத்திற் செங்கோல்செலுத்துகின்ற பாண்டியன்விடியற்காலத்தில நித்திரையை யொழிந்து கண் கால் முதலியஅவயவங் களைச்சுத்திசெய்து ஸ்நானஞ்செய்துசிவபூசைசெய்து குளிர்ச்சிபொருந்திய கிரணங்களையுடைய முத்துமாலைகளைத்தரித்துக்கொண்டு நல்ல ஆபரணங்களை யணிந்துகொண்டு ஆகாசமளாவியசெம்

பொன்னினாற்செய்த தன்னுடைய அரமனைமுகப்பிலே வந்துவீற்றிருந்தானென்றவாறு. (௱௨௮)

வன்றிறலாளரெல்லாம்வாம்பரித்திரள்கள்கொள்வான்...... *
சென்றரனடியார்க்கீந்தசெம்பொருடாரீராகி... ...... ...*
யின்றுமைவருத்தஞ்செய்துமென்றெறிவெயிலினூடு.... *
நின்றிடுமென்னநின்றார்நீள்பெரும்புகழ்நிற்பார்.........*

(இ-ள்.) வலிய சௌரியத்தையுடைய தண்டற்காரர்களெல்லம்தாவுகின்ற குதிரைக்கூட்டங்கள் கொள்ளப்போய்ச் சிவனடி யார்களுக்குக் கொடுத்துவிட்டநல்லதிரவியத்தைத்தரமாட்டீராகில் இன்றைக்கு உம்மை வருத்தப்படுத்துவோமென்று எறிக்கின்றவெயிலிலேநின்றிடுமென்றுசொல்ல அப்படியேநின்றார் மிகுந்தபுகழில் நிற்பவராகிய திருவாதவூரரென்றவாறு. (௱௨௯)

அங்குநின்றிளைப்பார்தம்மையாண்டவாண்டகையையுன்னி.*
யிங்குணர்ந்திலைகொலோவென்றுதம்மனத்தொடுசொல்லிச்*
சங்குவெண்குழையாய்மன்னன்றனக்குவாம்பரிகளீத ...*
லங்கடனாமென்றுநவின்றசொற்பொய்ம்மையாமோ ... *

(இ-ள்.) அந்தவெயிலிலேநின்றுஇளைப்பாராகியமாணிக்கவாசகர் தம்மையாண்ட குருவைநினைத்து இங்கேயெனக்குநேரிட்டவருத்தத்தையறிந்தாயில்லையாவென்றும்வெள்ளியசங்கக்குழையையுடையபரமசிவனே பாண்டியனுக்குத் தாவுகின்ற குதிரைகள் கொடுப்பது நம்முடைய கடனாமென்று சொன்ன சொற் பொய்ம்மையாமோவென்றுந்தம்முடையமனத்திற்சொல்லுவாமென்றவாறு ௱௩௰

ஊனுடம்புடையவாழ்க்கையொழித்துனக்கடிமையென்று.*
மாநிலம்புகலுமாறுவந்துனையடைந்தேன்றன்னை... .... .....*
மீனவன்றன்பால்மீளவிடுத்தனைவேலைநீரு .. ... ... ..... ...*
ளானபினந்நீராற்றுநீரானவாவதுண்டோ ......... ... ...*

(இ-ள்) மாமிசபிண்டமாகிய தேகவாழ்வைநீக்கி உனக்குஅடிமை யானவனென்று பெரியவுலகத்தார் சொல்லும்படிவந்து உன்னையடுத்த அடியேனைப்பாண்டிய னிடத்தில் மறுபடியும் விட்டாய்ஆற்று நீர் சமுத்திரத்துடனே கலந்தபின்பு அக்கடலநீராகுமேயல்லாமல் ஆற்றுநீராவதுண்டோவென்றவாறு. (௱௩௧)

அறத்தனிச்செல்விபாகவன்பிலேனின்பாலென்று .... *
வெறுத்திடிலடியேற்கிங்குவேறொருதுணையுமில்லை... *
செறுத்துயர்புரங்களெல்லாஞ்செற்றவனடியான்றன்னை
நிறுத்தினர்வெயிலிலென்றுனின்புகழ்க்கேற்றமாமோ *

(இ-ள்) முப்பத்திரண்டுதருமத்தையும்வளர்க்கின்றளைப்பற்ற உமா தேவியை ஒருபாகத்திலே வைத்தகடவுளே உம்மிடத்தில் அன்பில் லேனென்று என்னைவெறுத்துவிட்டாய் அடியேனுக்கு இங்கே வே றொருதுணையுமுண்டோ பெரியதிரிபுரங்களைக்கோபித்து எரித்தசிவ னுடைய அடியானைவெயிலின்மேல்நிறுத்தினார்களென்றால் உம்முடைய கீர்த்திக்குப் பெருமையாகுமோவென்றவாறு. (௱௯௨)

வானநாடவர்க்குமேமேலாய்வந்துனக்கடிமையிப்போ..*
தானநானிடும்பையுற்றாலாருனக்கடிமையாவார் .. ...*
நானெனுமனத்தார்சொல்லுநலனுரையன்றிநின்ற .. *
ஈனனுமொருவன்சொல்வதேறுமோ வுளத்திலென்றார்.

(இ-ள் தேவர்களுக்குமேலானவனேவந்து உனக்குஇப்போது அடி மையானநான் துன்பப்பட்டால் ஆருனக்கு அடிமைப் படுவார்கள் யானென்னும் அகந்தையறுத்தநல்லமனத்தையுடையவர்கள் சொல் லுகின்ற நல்லசொல்லல்லாமல் ஈனனாகிய என்னுடையசொல்லான து செவியிலேறுமோவென்றொன்றவாறு. (௱௯௩)

அவத்தொழில்புரியாமேன்மையன்பருக்கன்புசெய்து .. ...*
பவக்கடலிடைவிழாமற்பரிந்தருட்பார்வைநல்கித் ... .... ...*
தவப்பெருவடிவங்கொண்டுதாளளித்தாளுமையர்... ..... ...*
செவிப்புலன்புகுந்ததன்பர்செப்பியமாற்றமெல்லாம் ... ...*

(இ-ள்) அவத்தொழிலைச்செய்யாத மேன்மையையுடைய அன் பரிடத்திலே கிருபைசெய்து பிறவிக்கடலிடைவிழாமல் அன்புட னே கிருபாநோக்கமருளிக் குருமூர்த்தமாக வெழுந்தருளித் திரு வடியைக் கொடுத்தருளுகின்ற பரமசிவனுடைய செவியினிடமாக நுழைந்தது திருவாதவூரர்சொல்லியசொற்களெல்லாமென்றவாறு.

காம்படுந்தோளிபாகன்கண்ணுதலண்ணலன்பர்...............*
தாம்படுதுயரமெண்ணியத்துயர்தணிக்கவேண்டித் . . ...*
தேம்படுமலங்கன்மார்பிற்றென்னவன்றனக்குமேன்றி..... *
வாம்பரியளித்தல்சொல்வாம்வல்வினைப்பகைகளையெல்லாம்..*

(இ-ள்) மூங்கிலினையொத்த தோளி[illegible]டைய உமாதேவிபாக னாகிய நெற்றிக்கண்ணையுடையவனாகிய [illegible]கின்ற பரமசிவன்ற ன்னுடைய அடியாராகிய திருவாதவூரர் [illegible] துயரத்தை நினைத் து அத்துயரத்தை நீக்கவேண்டி வாசனை[illegible]ருந்திய வேப்பமாலை யணிந்த மார்பையுடைய பாண்டியனுக்கு [illegible]மையுடையதாவு கின்ற குதிரையைக்கொடுத்த [illegible] தீவினைப் பகை யை வெல்லுவாமென்றவாறு. (௱௯௪)

திருப்பெருந்துறைச்சருக்கம்
முற்றுப்பெற்றது. ஆக திருவிருத்தம்-௱௯௪

# குதிரையிட்டசருக்கம்.



(வேறு.)

தந்தையென்பவர்மைந்தர்வாதைதவிர்ப்பதேகடனாதலா .... *
லந்தமின்றியகாதலன்பராமுங்கல்கண்டபினரியெலாம்... .... *
வந்துவெம்பரியாகவும்பரிவீரர்வானவராகவுஞ் ...... *
சிந்தைகொண்டனரந்தமாலவிதிதேடுவார்மதிசூடுவார்...... *

(இ-ள்) பிள்ளைக்கு வந்தவருத்தத்தை நீக்குவது பிதாக்களுக்குக் கடனாகையாலே முடிவில்லாத அன்பையுடைய திருவாதவூரர் வியசனப்படுவதைப் பார்த்தபின்பு நரிகளெல்லாம்வந்து வெவ்விய குதிரைகளாகவும் தேவர்கள் அந்தக்குதிரைகளைச் செலுத்துகின்ற ராவுத்தராகவும் மனத்திலிடத்திலே நினைத்தார் அந்தமகாவிஷ்ணுவும் பிரமதேவனும் தேடுவாரும் சந்திரனைத்தரிப்பவருமாகிய பரமசிவனென்றவாறு. (க)

தேசிலாநரிவந்துவந்துதிரண்டுவெம்பரியானபின். .... *
மாசிலாவிமையோர்கடாமுமமைந்தசேவகராகினார் ... *
மாசிலாமணிமன்றராடியவாசிவாணிபர்போலவே .... *
டேசிலாவுருமாறினார்மறையிவுளியின்புறமேவினார்...*

(இ-ள்.) அழகில்லாதநரிகள் வந்துவந்துகூடி வெவ்வியகுதிரைகளானபின்பு குற்றமில்லாததேவர்களும் அவைகளுக்குஏற்றராவுத்தராயினார்கள்களங்கமில்லாத அழகியசபையினிடத்திலேநடனஞ்செய்கின்ற கடவுளானவர் ஆரியதேசத்துக் குதிரைவர்த்தகர்போலஏசுதலில்லாத தம்முடைய உருவமாறினவராகி வேதக்குதிரையின்மேலேறிகொண்டாரென்றவாறு. (உ).

சேடுகொண்டிரண்டுவீரரிரண்டுஞாங்கர்சிறக்கவே .... .... *
யூடெழுந்துகளிம்பரொங்கணுமுடருங்கிளர்வெய்தவே... *
கோடடன்றுடிவிம்மநீடியகூடல்சூழ்மதில்வாயில்வா...... *
யாடவெம்பரிகொண்டுசென்றனராதியாருமைபாதியார் *

(இ-ள்.) சவுக்குகள்கொண்டு குதிரைச்சேவகர் திரண்டுஇரண்டுபக்கங்களிலுஞ் சிறப்பாகவர அவ்விடத்திலேஎழுகின்ற தூளியானது பூமியாகாசமெங்கும் பரக்க உடுக்குகொம்பு உடுக்கைமுதலியவாத்தியங்களுஞ்சத்திக்க மதுரைமாநகரத்து நெடிய மதில்வாயிலினிடத்தே ஆடுகின்ற வெவ்வியகுதிரைகளைக்கொண்டுவந்தார் யாவர்க்குமுதலவராகியும் உமாதேவியையொருபாகத்திலுடையவராகியும் இருக்கின்ற கடவுளென்றவாறு. (௩)

அங்குதின்றவர்சென்றுவெம்பலலங்கலானைவணங்கியே... *
யெங்கணுந்துகள்பொங்கிவிம்மவெழுந்துகாளமார்ப்பவே *

திங்கள்வெண்குடைமன்னவாரியதேசவெம்பரியின்றுநந்... *
துங்கவன்மதிலின்புறத்துதுவந்திவந்தவெனச்சொன்னார்.... *

(இ-ள்.) அங்கேநின்றவர்கள்போய் வேப்பமாலையைத்தரித்த பாண்டியனையணுகியெவ்விடத்திலுந்தூசுகளெழும்பிநெருங்கவுஞ்சின்னங்கள்முழங்கவும் சந்திரவட்டக்குடையையுடைய அரசனே ஆரிய தேசத்துக் குதிரைகளின்கூட்டம் நம்முடைய உயர்ந்த வலிமையான மதிற்புறத்து நெருங்கிவந்தனவென்று சொன்னார்களென்றவாறு. (௪)

வாசியின்றிரள்வந்தவென்றலும்வாதவூருறையையர்மே ... *
னேசம்வைத்தவர்தம்மைமுன்னரழைத்துநீர்கலையாதிதந் *
தாசில்வெம்பரிகாணவம்மினென்றெழுந்தியஞ்செழுந்தடையல்சீ
கூசதன்படைசூழவேயிறைகோவிலிடைநெறிமெய்தினன் *

(இ-ள்.) குதிரைக்கூட்டங்கள் வந்தனவென்று சொன்னமாத்திரத்திலே திருவாதவூராரிடத்திலே நேசம்வைத்து அவரைவரவழைத்து வஸ்திரமுதலியவெகுமதிகள்கொடுத்துக் குற்றமில்லாத வெவ்விய குதிரைகளைப் பார்க்கவாருமென்றுசொல்லி யெழுந்து சத்துருக்களும் அஞ்சத்தக்கதன்னுடையசேனைகள்சூழப் பாண்டியராசனானவன் அரமனையைவிட்டுப் புறத்துவந்தான் என்றவாறு. (௫)

(வேறு.)

வண்டுபடியலங்கனெடுந்தடந்தோண்மாறன்- மணிச்சிவிகைமீ
தேறிமதுரைமூதூர், கண்டிருகண்களிக்கும்வகையாலவாயிற்
கடவுளிடும்பரிவரவுகாண்பானெண்ணிச, செண்டுவெளிதனிற்
போந்துபனிநீர்தோய்ந்த-செங்கழுநீர்மதுமாலைசிறந்துதூங்
குந், தண்டரளமணிப்பந்தர்நிழற்கீழ்ப்பொற் றவிசின்மிசை
யினிதிருந்தான்சேனைசூழ .... .... .... .... .. *

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கின்ற வேப்பமாலையணிந்த நெடிய விசாலம்பொருந்திய புஜத்தையுடையபாண்டியனானவன் ரத்நசிவிகைமேலேறிக்கொண்டுபழமையாகியமதுராபுரியிலுள்ளவர்கள் பார்த்து இரண்டுகண்களுங்களிக்கும்படித்திருவாலவாயிலிருக்கின்ற சொக்கநாயகர் கொண்டுவருகிறகுதிரைகளின்வரவினைக்காணநினைத்து வையாளிவெளிக்குப்போய்ப்பனிநீர்தோய்ந்தசெழுமை பொருந்தியசெங்கழுநீர்மாலைசிறந்து தொங்குகின்றகுளிர்ச்சிபொருந்திய முத்துப்பந்தலினிழற்கீழ் அழகியபொன்னிற்செய்த சிங்காசனத்தின்மேல் இனிதாகவிருந்தான் சேனைகள் சூழவென்றவாறு. (௬)

முத்தமிழின்றிறநவிலும்புலவர்சூழ-முதுமறையோன்மங்கல
ச்சொன்முறையிற்கூறக்-கைத்திகழும்வளைபலம்பக் கலன்கண்
மின்னக்-கன்னியர்களிருபாலுங்கவரிவீசக், கொத்துலவும்பல
மலரின்வாசந்தோய்ந்து -குலவுமிளந்தென்றல்வரமாதர்பாட,

# ௫௮ குதிரையிட்டசருக்கம்.

மொத்துமணி முத்தமெனும்பணிகள்பூண்டு - வெண்மதியின்
றோற்றம்போல்வீற்றிருந்தான் ..................................*

(இ-ள்.) இயலிசைநாடகமென்னும் முத்தமிழின்றிறத்தை அறிந்த புலவர்கள் சூழப் பழமையாகிய வேதப்பிராமணர்கள் முறையாகவாழ்த்தெடுக்கக் கைகளிலணிந்திருக்கின்ற வளையல்கள் தொனிக்க ஆபரணங்கள் ஒளிசெய்ய மங்கையர்கள் இரண்டுபக்கத்திலுமிருந்து வெண்சாமரைகள்வீசப் பலபூங்கொத்துகளின் வாசனையளாவிப்பொருந்திய இளந்தென்றலானதுவீச மகளிர்கள்பாட மெச்சுகின்ற முத்துமாலிகையைத்தரித்துக்கொண்டு வெண்மையாகிய உதயகாலத்துச் சந்திரனைப்போல வீற்றிருந்தான்பாண்டியராஜன். எ-று

மங்குல்படிதடம்புரிசைவாதவூரர் - மனங்களிப்பவிழிகளிப்ப
வழுவிலாத,திங்களெனுந்தன்மரபுவிளங்கவெல்லாந்திருநீறும
ஞ்செழுத்துஞ்சிறந்துமல்கச், சங்கினுடன்காளங்கண்முழவ
மார்ப்பத் - தயங்கியெழுந்துகளுயர்வானிறம்மேற்செல்லத்,
துங்கநெடுங்கடல்பரந்துவருதலேபோலத் - துவன்றியுளபரித்
திரளின்றோற்றங்கண்டான் ........................ ..... ... ......*

(இ-ள்.) மேகங்கள் தங்குகின்ற விசாலமாகியமதில்சூழ்ந்த திருவாதவூரில் அவதரித்த மாணிக்கவாசகருடைய மனது சந்தோஷிக்கக் கண்கள்களிக்கக் குற்றமற்ற தன்னுடைய சந்திரவம்சம் விளங்க என்றைக்கும் திருநீறும் பஞ்சாக்ஷரமும் சிறந்து நிலைபெறச் சங்குகளும் சின்னங்களும் பேரிகைகளும் சத்திக்கப் பூமியிலேயெழுகின்றதுகள் உயர்ந்த ஆகாசத்தின்மேற் பரவப் பெரியகடலானது பரவிவருகின்றதுபோல நெருங்கிவருகின்ற குதிரைக்கூட்டங்களின் தோற்றத்தைக்கண்டான் பாண்டியராஜனென்றவாறு. (௮)

(வேறு.)

அங்கிளர்மதுரையம்பதியிலாவணித் .............. *
திங்களின்மூலநாள்செறிதினத்தினி ..............*
லெங்கணுநீறுமஞ்செழுத்துமோங்கிடச்..........*
சங்கரனிடும்பரிச்சமூகம்வந்தவால....... ... .......*

(இ-ள்.) அழகுமிகுந்த மதுராநகரத்தில் ஆவணிமாதத்தில் மூலநாளில் எவ்விடத்திலும் திருநீறும் பஞ்சாக்ஷரமும் விளங்கும்படிப்பரமசிவனாலேஇடப்பட்டகுதிரைக்கூட்டங்கள்வந்தன எ-று.

துத்திரண்மணிகெழுசோதிமாமுடிப்...........*
பார்த்திவன்விழிநலம்பருகவீதியிற்... .... ......*
கூத்தினர்செயலெனக்குலாவுவாம்பரிச்....... ...*
சாத்தவர்வரும்பெருந்தன்மைகூறுவாம்.......... *

(இ-ள்.) பரிசுத்தமாகிய திரசுழி பொருந்திய ரத்தினம்பதித்துப்பிரகாசிக்கின்ற பெரியகிரீடந்தரித்த அரசனுடையகண்கள் விருந்துண்ண வீதியினிடத்திலே கூத்தாடிகள்செய்கையைப்போல விளங்கித்தாவுகின்ற குதிரையைநடத்தி ராவுத்தர்கள்வருகின்ற பெரியதன்மையைச்சொல்லுவாமென்றவாறு. (௰)

கட்டியசுரிகையர்கவின்கொள்வாளினர்...... ....*
பொட்டணிநுதலினர்பொன்செய்மேனியர் ... *
பட்டுடைமருங்கினர்பவளநீள்வடம்...... ....... *
விட்டொளிவிளங்கியவியன்கொண்மார்பினர்...*

(இ-ள்.) அரையிலேகட்டியஉடைவாளினையுடையவரும் அழகியகத்தியையுடையவரும் சந்தனப்பொட்டணிந்த நெற்றியையுடையவரும்பொன்னிறமாகியமேனியையுடையவரும்பட்டுவஸ்திரத்தையணிந்த அரையையுடையவரும் விட்டுவிட்டு ஒளிசெய்கின்றபவளமாலையையணிந்த விசாலமாகியமார்பையுடையவரென்றவாறு. (௰௧)

புன்மயிற்பீலியர்புலியின்றோலினர் .. .........*
பின்மலர்ப்பாசிலைபிணைந்தகுஞ்சியர்... ...........*
வன்மொழிக்குரலினர்வயங்குதூணியர்... ... ...*
வின்மலிகரத்தினர்வெறித்தபார்வையர்... ......*

(இ-ள்) இலேசாயிருக்கின்ற மயிற்பீலியையுடையவரும் புலித்தோலையுடையவரும் பின்புறத்தில் தாழ்கின்ற குடுமியிலே மலரும் பச்சிலையும் சேர்த்துக்கட்டிய மாலையையணிந்தவரும் உரத்தசொல்லையுடையகுரலினரும் பிரகாசிக்கின்ற அம்புறாத்தூணியுடையவரும் வில்லேந்திய கைகளையுடையவரும் வெறிசசபார்வையையுடையவருமென்றவாறு. (௰௨)

பொன்னியல்குழையினர்பொலன்கொண்மாலையர்...*
பன்னிறச்சாத்தினர்பணைத்ததோளினர் .............. *
சென்னியிற்கதிர்மணியிலங்குசேடனைப்....... ...... *
பின்னிவிட்டெனப்பிணைத்தகுஞ்சியர் ............*

(இ-ள்.) பொன்னினாற்செய்த குண்டலத்தையுடையவரும் பொன்னரிமாலையையுடையவரும் பலநிறத்தையுடைய தலைச்சாத்தணிந்தவரும் பருத்தபுயத்தையுடையவரும் சிரோரத்தினம்விளங்குகின்ற ஆதிசேடனைப்பின்னிவிட்டதுபோலப் பின்னியகுடுமியையுடையவருமென்றவாறு. (௰௩)

தாங்கியசுரிகையுந்தயங்குவேல்களும் .... .........*
வாங்கியசிலைகளுங்கணையும்வாளுடாய்... .........*

ஞாங்கரிலிவர்வரநாப்பட்டோன்றினார் ........*
தேங்கியநதிமதிச்சென்னியண்ணலார் .... *

(இ-ள்.) தாங்கப்பெற்ற உடைவாள்களும் பிரகாசிக்கின்ற வேலாயுதங்களும் வளைந்தவிற்படைகளும் அம்பும் கதிகளும் உடையவருமாய்ப் பக்கங்களிலே இவர்கள்வர நம்பிவிலேவந்தார் அவராரென்றால் தேங்கப்பெற்ற கங்காநதியையும் மூன்றாம் பிறைச்சந்திரனையுமுடித்த சிரத்தையுடைய பரமசிவமென்றவாறு. (௰௪)

(வேறு.)

நச்சுரகவுச்சிமணிநண்ணுமொருவண்ணக் .....*
கச்சிடைவிசித்துளகவின்கொளுடைவாளும் *
பச்சைமுழுநீலமொடுபன்னிறமடைஞ்சோ ...*
செச்சைநிறமன்னியதிரண்டவிருதோளும்... *

(இ-ள்) நஞ்சையுடையசர்ப்பத்தினது சிரோரத்நம்பதித்துவிளங்கி [illegible]நிறத்தையுடையகச்சையிடையிலேகட்டி அதனிடத்துமேல்வசா[illegible] அழகைக்கொண்ட உடைவாளும் பச்சைநீலமுதலிய பல[illegible]மையுடைய ரத்நமாலைகளணிந்த சிவந்த நிறத்தையுடையவிரட்[illegible]பொருந்திய இரண்டுபுயங்களுமென்றவாறு. (௰௫)

ஒப்பரியசட்டையுமுடுத்திலகுபட்டுந்... ..............*
தொப்பியமுகத்துடைதுலக்கமுளராகிச் ... .... ... *
செப்பருநலங்குலவுசெண்டொருகைகொண்டே ... *
யிப்படியிலிப்படிவம்யாவருளரென்ன......... .. .. *

(இ-ள்.) உவமைசொல்லுதற்கரிதாகிய அங்கியும் உடுத்துவிளங்கியபட்டுடையும் தலைச்சாத்தும் உடையவராயும் திருமுகத்திற்பிரகாசமுள்ளவராயும் சொல்லுதற்கரியநன்மைமிகுந்த குதிரைச்சவுக்கை ஒருகையிலேகொண்டு இந்தப்பூமியிலே இந்தவடிவமுள்ளவர்கள்யாரிருக்கிறார்களென்று சொல்லவென்றவாறு. (௰௬)

கட்டிபடுமீறின்மணிகச்சைமணிமுன்பி ......... *
னிட்டவிருபக்கமணியின்னொலிபுலம்பப்...... ......*
பட்டிலகுபக்கரைபணிக்கவரியெட்டும் .. ... ......*
விட்டொளிவிளங்குமொருவெண்பரியிலேறி .... *

(இ-ள்) அங்கவடியிற்கட்டியமணிமாலைகளும் கச்சையிற்கட்டிய மணிமாலைகளும் முற்புறத்தும் பிற்புறத்தும் இரண்டுபக்கங்களிலுங்கட்டிய மணிமாலைகளும் இன்னோசையாய் ஆரவாரிக்கப்பட்டிரு[illegible]செய்யப்பட்ட கல்லணையிற் கட்டிய சாமரைகளெட்டும் விட்டுவிட்டு ஒளிவிளங்கப்பெற்ற வெள்ளைக்குதிரையின் மேலேறியென்றவாறு. (௰௭)

வீசுகவரித்திரண்மிடைந்தொளிரமீதே ............ *
தேசொடுகவித்துளசெழுங்குடைவயங்கப் ............ *
பூசல்புரிவெம்பரிபொருந்துபடையூடே ............ *
மாசில்குலவாரியரின்மன்னனெனவந்தார் ............ *

(இ-ள்) வீசுகின்ற சாமரைக்கூட்டங்கள் நெருங்கிப்பிரகாசிக்கவும் மேலேகவித்திருக்கின்ற செழுமைபொருந்திய குடைகள்காந்தியோடு பிரகாசிக்கவும் யுத்தஞ்செய்கின்ற வெவ்வியகுதிரைச்சேனையினிடையிலே குற்றமற்றஆரியதேசத்தார்க்கு அரசனைப்போலவந்தார் குதிரைச்சேவகரென்றவாறு. (௰௮)

மன்னவனுமிங்கிவர்வருந்தகைமைகண்டே ............ *
தன்னுளமகிழ்ந்திருதடங்கணிமையாமல் ............ *
லன்னமுடையூர்திநெடுமாலரனையல்லா ............ *
தின்னவழகியாவருளரென்றதிசயித்தான் ............ *

(இ-ள்) பாண்டியனும் இந்தக்குதிரைச்சேவகர்வருகின்ற பெருமையைப்பார்த்து தன்மனமகிழ்ந்து விசாலம்பொருந்திய இரண்டுகண்களும் இமையாமல் அன்னவாகனத்தையுடைய பிரமதேவன் விஷ்ணு உருத்திரன்-இவர்களிலொருவரல்லாமல் இந்தஅழகோடுங்கூடியவர் யாவருள்ளாரென்று அதிசயித்தான் என்றவாறு. (௰௯)

பண்ணியதவத்துளபயன்பரியின்மீதே ............ *
நண்ணியதெனத்தமினயந்துணர்வியந்தா ............ *
ரெண்ணியமுடித்தனரெனக்கருதிநின்றார் ............ *
புண்ணியமறைத்தமிழ்புகன்றதிருவாயார் ............ *

(இ-ள்) முன்னே தான்செய்த தவத்தினாலே உண்டாகியபிரயோசனமே குதிரையின்மேலேவந்ததென்றுதமக்குள்ளேமகிழ்ச்சிகொண்டு அதிசயத்தையுடையவராய் என்னெண்ணத்தைமுடித்தாரென்று நினைத்துநின்றார் புண்ணியவடிவமாகிய வேதத்தைத் தமிழ்செய்த மாணிக்கவாசகரென்றவாறு. (௨௰)

தூயசுடர்வேல்பலசுழற்றியெதிர்செல்வார் ............ *
வாயொலிவிளைப்பரிகல்வாளினைவிதிர்ப்பார் ............ *
நேயமொழிதம்மிலணிநின்றுசமர்செய்வா ............ *
ராயினரரன்புடையிலானபரிவீரர் ............ *

(இ-ள்) தூய்மையான ஒளியுள்ள அனேகவேலாயுதங்கள் சுழற்றிக்கொண்டு எதிரேபோவார்கள் வாயினாலே ஆரவாரிப்பார்கள் பலகைகொண்டு கத்திகளை அசைப்பார்கள் நேசமுடனே தங்களுக்குள்ளே அணிவகுத்துநின்று யுத்தஞ்செய்வார்கள் இப்படிப்பட்ட விநோத

# குதிரையிட்டசருக்கம்.

முள்ளவர்களானார்கள் பரமசிவனோடு கூடவந்த குதிரைவீரர்கள் என்றவாறு. (உக)

நீறுசிவநீதிநிலைநிற்கவுலகாளு... ...... ......... ... ......*
மாறனுமகிழ்ந்துதவமன்னவரையழைத்தே...... ... ...*
கூறரியவாரியகுலேசரொருவீதி ............. .....*
யேறுப்பவரைசென்றழையுமென்றினிதுசொன்னான்....*

(இ-ள்) திருநீறும் சைவநெறியும் நிலைநிற்க உலகத்தையாளுகின்ற பாண்டியன்மகிழ்ந்து தவராசராகிய திருவாதவூரரையழைத்துச் சொல்லுதற்கரிய ஆரியகுல அதிபரை ஒருவீதியிலேயிந்தகுதிரைகளை நடத்தும்படிக்குப்போய்ச் சொல்லுமென்றுயினிதாகச்சொன்னானென்றவாறு. (உஉ)

என்னிவன்மொழிந்தனனெனத்தமிலிரங்கா.... *
மன்னியவருந்தவருமவாண்முகமலர்ந்தே ... *
கன்னலைநலங்கொளகனியைகருதிநெஞ்சான் . *
முன்னுறவணங்கிவிழிமுத்துதிரநின்று... ... .... *

(இ-ள்) என்னவார்த்தையிவன்சொன்னானென்று தமக்குள்ளேயிரக்கமுற்று நிலைபெற்றஅரியதவத்தையுடையமாணிக்கவாசகரும் ஒளிபொருந்தியமுகத்திலே மலர்ச்சியுள்ளவராய்க் கரும்பையும் நற்சுவைகொண்டகனியையும் ஒத்தபரமசிவனுக்குச் சமீபத்தேபோய்மனத்தினாலே முன்னேவணங்கிக் கண்களிலேயிருந்துமுத்துகள்போல நீருதிரும்படி நின்றானென்றவாறு. (உங)

மன்றல்மலரோனுநெடுமாலுமுருவேறு ......*
யன்றுமுதலின்றுமறியாதவனைநின்றாய்... .....*
வென்றிவிடையன்றியுயர்வெம்பரியின்மீதே ... *
யின்றுனைவணங்குமுனமெத்தவமுயன்றேன்...*

(இ-ள்) வாசனைபொருந்திய தாமரைமலரிலிருக்கும் பிரமனும் மகாவிஷ்ணுவும் உருவம்வேறாகி அன்றுமுதல் இன்றைவரைக்கும் அறிதற்கரியவனாய்நின்றவனே வெற்றியையுடைய இடபவாகனத்திலல்லாமல் உயர்ச்சியுள்ள வெவ்வியகுதிரைவாகனத்தின்மேலே இன்றைக்கு உன்னைக்கண்டுவணங்க முன்னே என்னதவஞ் செய்தேன் என்றவாறு. (உச)

வந்தபடியிவ்வுருவணங்குமிதுவல்லா........ ...... *
லந்தவடிவாகியுனையாரறிபவல்லா ................*
ரிந்தவகைகண்டடியவர்க்கெளியையென்றே......*
சிந்தைதனிலன்பொடுதெளிந்தலதெல்லாம்...*

(இ-ள்) தேவரீரெழுந்தருளிவந்த இவ்வடிவைக்கண்டு வணங்கப் பெற்ற இதுவல்லாமல் மற்றுவாக்குக்கெட்டாத அந்த நிஷ்களவடிவாகி யிருந்தாயானால் உன்னையாவரறியவல்லவர் இந்தவடிவங்கண்டல்லவோ பெரியோர்கள் அடியார்களுக்கு எளியனாயிருக்கின்றாயென்று மனத்தில் அன்புடனே தெளிந்துசொல்லுகிறார்கள் எ-று. (௨௫)

என்றுமுகமன்பலவிளம்பியருளாலே ......... *
வென்றிபுனைமீனவன்விளம்புமொழிசொன்னார் *
கொன்றைமுடியாருமதிசைந்துகொடைமாற *
னன்றியொடுநாளும்வகைநற்பரியுகைத்தார் ... *

(இ-ள்) இப்படியென்று அனேகஉபசாரவார்த்தைகள் சொல்லி அருளினாலேவெற்றியைத்தரித்த பாண்டியராஜன் சொன்னசொல்லை விண்ணப்பஞ்செய்தார் கொன்றைமாலிகை தரித்த முடியையுடைய பரமசிவனும் அதற்கிசைந்து கொடையையுடைய பாண்டியராஜன் நன்றாகப்பார்க்கும்படி நல்லகுதிரையைநடத்தினார் எ-று. (௨௬)

மன்னரவபந்தமுடன்வட்டநெறிவீதி .. ......*
யென்னுமிவுளித்தொழில்களியாவுமினிதேரி... *
யுன்னுமனவேகமெனமேவருபர்பாய்மா ...*
நன்னடையிதம்படிநடாத்தியெதிர்வந்தார் ... *

(இ-ள்) நிலைபெற்ற நாகபந்தம் விருத்தம் நெறிவீதியென்கின்ற குதிரையினுடைய நடைபேதமெல்லாம் இனிதாக நடத்திக்காட்டி நினைக்கின்ற மனோவேகம்போலவோடுகின்ற உயர்ந்த குதிரையானவை நல்ல நடையிதம்படி நடத்திக்கொண்டு எதிரேவந்தார் என்றவாறு. (௨௭)

வெம்பரியினண்ணலைவியந்துதமிழ்மாறன் *
கம்பமுடியெய்தவொருகைவிரல்சுழற்ற .. ...*
வம்பொன்விலையில்லதொருங்கலையளித்தா. *
னெம்பரமர்செண்டின்மிசையேற்றுநகைசெய்தார்.

(இ-ள்.) வெவ்வியகுதிரைக்குஎசமானைப்பார்த்து அதிசயப்பட்டுத் தமிழைவளர்த்தபாண்டியன்சிரக்கம்பஞ்செய்து ஒருகைவிரலைச்சுழற்றி அழகியபொன் இவ்வளவென்று விலையில்லாதநா யரியவஸ்திரமொன்றுகொடுத்தான் எம்முடையகடவுளானவர் சவுக்கின்மேல் ஏற்றுக்கொண்டு புன்னகைசெய்தாரென்றவாறு. (௨௮)

(வேறு)

ஏற்றவொண்கலையைநேசமெய்திறையொருவன்சென்று*
காற்றெனவிரைவினெய்திக்கடிதுதன்கரதலில்வாங்கிப்.*

போற்றிலன்முடியின்மீதுபயனைந்திலனென்றமாற ... *
னீற்றினன்மறப்பினுமேலநெஞ்சிடைவெகுட்சிகொண்டான்

(இ-ள்.) அப்படிஎற்றுக்கொண்டபிரகாசம்பொருந்திய வஸ்திரத்தை நேசத்தையுடையவனுய்க் காற்றைப்போலச் சீக்கிரத்தில் வந்து விரைவாகத்தன்கையில் வாங்கிவணங்கவில்லை சிரசிமேல தரித்துக்கொள்ளவில்லையென்று பாண்டியராஜன் திருநீற்றையணிந்தகடவுளினுடைய மறட்பினுமேல கோபங்கொண்டானென்றவாறு. (உ௬)

வெளிப்படவரியமேனிவிண்ணவன்கண்ணுநெஞ்சுங்.. *
களிப்புறவருதல்கண்டுங்கண்டிலன்கன்னிநாட ... *
னொளித்துலகெங்குநிற்போனுறுபவமொழித்துஞானை *
மளித்திடினன்றிபாவரவன்றிறந்தெரியவல்லார் ..... *

(இ-ள்) வெளிப்படக் காணுதற்கரிய அருமைத் திருமேனியையுடைய பரமசிவனுனவரை பார்த்தவர்கண்களும் மனமுஞ்சந்தோஷமடையும்படி வருகிறதைப்பார்த்தும் பாண்டியன் காணவில்லை ஒளித்துக்கொண்டு உலகெங்கணுநிற்கின்றகடவுள்பிறந்தபிறவியையொழித்து அறிவுகொடித்தாலல்லாமல் எவர்கள் அவருடையதன்மையைத்தெரிய வல்லவர்களென்றவாறு. (௩௰)

எண்டிசைமன்னரன்பாலீந்தமென்கலைகள்யாவுஞ் .. *
செண்டிடைக்கோடலன்றோர்தேயநல்விடநகைமெயன்ற
வண்டமிழ்வாதவூரர்மாமதுரேசனெஞ்சிற் *
கொண்டுளமுனிவுதீரக்குறைந்துமுன்னின்றுசொன்னார்

(இ-ள்) எட்டுத்திசைகளிலும் இருக்கின்ற அரசர்கள் அன்பால்தமக்குக்கொடுக்கப்பட்ட வஸ்திரங்களையெல்லாம் சவுக்கிலே வாங்கிக்கொள்வது அவரது தேசவழக்கமென்றுவளத்தையுடைய தமிழ்பாடுகின்ற திருவாதவூரரானவர்பாண்டியராஜன்முன்னேநின்று அவன் மனதிலகொண்டிருந்த கோபம் சாந்தியாகும்படி தாழ்ந்துசொன்னாரென்றவாறு. (௩௧)

நலத்தருமிந்தநீர்மைகேட்டபினயந்துமன்னன் ... ...*
கலககமிலிவுளிநன்னூல்கற்றவர்தம்மைநோக்கி ..... *
யிலக்கணவிதியாலுள்ளவிருப்பரியிழிவுமேன்மை ... *
துலக்குடனும்மிநாடியெப்முடன்சொல்லுமென்றான் *

(இ-ள்.) நன்மைபொருந்திய இந்தவழக்கத்தைக் கேட்டபிற்பாடு அன்புகொண்டு கலக்கமில்லாத அஸ்வலக்ஷண சாஸ்திரங்கற்றறிந்தவரைப்பார்த்து லக்ஷணவிதிப்பிரகார மிருக்கிற பெரியகுதிரையினுடைய இழிவும் உயர்வும் பிரகாசமாக உங்களுக்குள்ளே சோதித்

து நம்மோடே சொல்லுமென்று சொன்னான் பாண்டியராஜன் என்றவாறு. (௬௨)

சொற்றிகழ்ந்துரகநூலின் றுணிபொருளுணர்ந்துளோருங்
கொற்றவெம்பரிகட்குள்ள குற்றமுங்குணமுநாடிப் ...*
பொற்றடங்கிரியின்மீதுபொருகயல்பொறித்துமீண்ட.
வெற்றிகொண்மன்னர்கோன் முனிவ்வுரை விளம்பலுற்றார்.

(இ-ள்) சொல்லினாற் பிரகாசிக்கப்பட்ட அஸ்வலக்ஷணத்தினுடைய நிச்சயமாகிய பொருளைத்தெரிந்தவர்கள் வெற்றிபொருந்தியவிரும்பத்தக்க குதிரைக்குள்ளே குற்றத்தையும் குணத்தையும்பார்த்துமகமேருமலையின்மேல் தன்னுடையமீனக்கொடியை எழுதிவைத்துத் திரும்பிய வெற்றியைக்கொண்ட அரசர்ககரசனாகியபாண்டியராஜனமுன்பாக இந்தப்படிசொன்னார்களென்றவாறு. (௬௩)

(வேறு.)

தாவிணைச்சந்திரசுழி பாடீண்டாவர்த்தநு- தன்னுடையடியிற்சுழி யாமுடலின்பக்க, மேவுசுழிகௌவகமாங்காகவர்த்த - மேன் மைதிகழ்முன்வளையச்சுழிதானாகும், பாவுசெழுங்கேதாரியடியிற்சேர்ந்த பயனிலகொடுஞ்சுழிகேசாவர்த்தமாகும், பூவமரு ங்கச்சையிற்பட்டடைமேயாகப்-புகன்றசுழியிச்சுழிகள்புணரா வாகி ... ............................ ............ . ...*

(இ-ள்) துன்பத்தைத் தருகின்ற சந்திரச்சுழி அண்டாவர்த்தமென்னுந் தன்னுடையடியிலிருக்கின்ற சுழியாகும் உடலிலேருபக்கத்திலிருக்கின்ற சுழியாகியகௌவகமும்காகவர்த்தமும்மேன்மையாகவிளங்கிய முன்வளையச்சுழியும் பரவிய செழுமையுள்ள கேதாரிச்சுழியும் காலிலிருக்கின்ற பிரயோசனமில்லாத கொடியசுழியாகியகேசாவர்த்தமும் பொலிவோடுங்கூடிய கச்சைநிலையிற் பட்டாடையாகச்சொல்லப்பட்ட சுழியும் ஆகிய இந்தச்சுழிகள் பொருந்தாதனவா மென்றவாறு. (௬௪)

கொம்புகன்னந்திருகுகன்னநஞ்சபாதங் -கொள்ளிக்கால்வெள் ளிக்கண்டனிகுன்று, வெம்புதழற்கடலைமுகப்பரமேனர்கண்ட மண்டப்பாழ்விலங்கிபலவண்டமாதல்,செம்பொறியாமக்கினி சித்திரங்கண்மூன்று - சிறந்தினியமட்டிற்பாலறுபாலென்மேற, யப்புவியோர்மொழிந்தபழுதினையுமின்றி- யடிநாவிற்குரமிரட்டையாகாவாகி ... ........................ ......... ....*

(இ-ள்) கொம்புபோலிருக்குநீண்டகாதும் - முறுக்கியகாதும் ❀

❀ நஞ்சபாதமாவது மூன்றுகால்விளர்த்து-ஒருகால்கறுத்தது.

கறுத்தகாலொன்றும், * விளர்த்தகாலொன்றும் விளர்த்தகண்ணும் தீனிகுன்றாமையும் வெப்புகின்ற நீரையுடைய மயானருத்திரனைப் போலு நீலகண்டமும் பீஜமில்லாமையும் ஏகக்குறைய விருக்கும் பெரியபீஜமும் செவ்வையாகிய பதுமையயும் அக்கினியும் சித்திரமும்போலசைவில்லாமலும் முகப்பு மாலை ... ர்கால்களிலைகளிற் சுழியில்லாமையுமெனப் பூலோகத்தார்செ ... குற்றங்களில்லாமல்கழுத்தடியில மார்க்கண்டமிரட்டையாயிராமலென்றவாறு. (௬௫)

சிரமதனிலிரண்டுசெழுந்துளைப்பிறன்கு - சிறந்தவுரந்தனி
லிரண்டுருதன்மேலொன்று, குரவமிசைநிறைசுழியொன்றி
ரேறு - குலவியவீரைந்துசுழி தறையாதாகி, நரிவெருகுகரு
ங்காகமலைகையே றி - ஞாளிசெழுங்கழலெனிகரவிவன்றாகி,
விரவுபெருந்திரைவேலைமங்குலசங்கம் - விடைமுழவம்பேரா
ன்முழக்கமிகவுண்டாகி ...... .............. *

(இ-ள்) சிரசிலே இரண்டுசுழியும் செழுமையுள்ள நாசியிலே நான்குசுழியும் சிறந்தமார்பிலே இரண்டுசுழியும் நெற்றியிலே ஒருசுழியும் உதட்டிலே ஒருசுழியும் ஆகிய சுழிகள்பத்துங்குறையாமல நரி பூனை கரியகாகமலகைப்பேய் ஓரி நாய் செழுமையுள்ளபலதிகிலைகளுடைய சத்தமில்லாதவையாய்ப் பெரிய அலையையுடைய கடல் மேகம் சங்கம் இடபம் பேரிகை இவைகளைப்போல சத்தமுடையவாமென்றவாறு. (௬௬)

உருத்திகல்செய்புலியுளியங்கழுதைசெந்நா - யொண்பூனை
நரியினுடன்கரியகாகந், தரித்தவழற்புகைநிறமொப்பனவாகா
வித் - தருக்கிமருத்தெனுங்கனத்தன்மையொப், விரித்தகதி
ர்வெண்டரளந்திங்களலி - மென்கமலத்தாதுசெழுங்கனகங்கா
யா, வரத்தமலர்நல்லபசுங்கிள்ளைபோல - வமைந்தவொளிதய
ங்கியவங்கத்தவாகி....... ......... ... . .......... . *

(இ-ள்.) கோபித்துப்பகைக்கின்ற புலி-கரடி-கழுதை-செந்நாய்-ஒளியையுடைய-பூனை - நரி தரிக்கப்பெற்றகரியகாகம்- தீ புகை- இவைகளினுடைய நிறத்தைப்பொருந்தாதவைகளாய் இறுமாப்புடையனவாய் வாயுவென்னும் வேகத்தோடுங்கூடிப் பிரகாசித்த கிரணங்களையுடைய வெள்ளியமுத்துக்கள் சந்திரன் நிலாத்திரளும் மெல்லியதாமரையினுடைய மகரந்தம் செழுமைபொருந்திய பொன் காயா செவ்வரத்தமலர் நல்ல பச்சைக்கிளி ஆகிய இவைகள்போல் அமைந்த உருவத்தையுடையவாகியென்றவாறு. (௬௭)

---

* கொள்ளிக்காலவனு - மூன்றுகால்கறுத்து - ஒருகால்விளர்த்தது

நெற்றியகன்றுயர்ந்ததரமுடைத்தாய்வெண்மை-நிறைந்துதம்மி
லொத்திலகுமெயிற்றவாய், நாற்றநறுங்கந்தமிகச்சிறந்தநா
வுஞ் - சூதவிளந்தளிர்போலுஞ்செவ்வணமேவித்தே, யுற்றவிர
ண்டிமைமயிருந்தொகையுண்டாகி - யுக்கிரமாம்விழிப்பார்
வையுடையவாகி, முற்றுமெயிற்றசையின்றியுள்வளைந்து-முக்
கோணமெனத்திகழுமுகத்தவாகி ... .. ...... . ......*

(இ-ள்.) நெற்றிபரந்து உயர்ந்தமேலுதட்டையுடையவாய்வெண்ணிறநிறைந்து தம்மிலே சரிசமையாய் ஒத்துப் பிரகாசிக்கப்பெற்ற பற்களையுடையவாய் நிறைந்த நல்லவாசனை சிறந்த நாக்கும் மாவிளந்தளிர்போலும் செம்மைநிறம் பொருந்தி இரண்டிமைமயிருந்திரட்சியுடையவாய் உக்கிரமாகியகண்பார்வையுடையவாய் மேகத்தில் அதிகமாமிசமில்லாமல உள்ளேவளைந்து முக்கோணமாய்ப் பிரகாசிக்கும் முகத்தையுடையவாயென்றவாறு. (௬௫)

உளையினுடன்றலைமயிருநிறமொன்றாகி - யுரத்தினுடன்கழுத்
துரகபடம்போன்று, வளைசிறந்தொளிபரந்துகுவிந்துள்
வாங்கி மண்டலமாயுரங்கொள்குளம்புகள்செறிந்து, கிளை
கொணரப்புகள்பரந்துதசைதானொன்றிக் கிளர்முழந்தாளொ
ளித்தபதங்கெழுமலின்றி, நெளிமுதுகுபொருந்துறுதண்டையிர
ண்டுதண்டை - நீண்டுடலநெய்த்தநிறமாமையாகி...... ......*

(இ-ள்.) கழுத்துமயிரும் தலைமயிரும் ஒருநிறமாய் மார்பினுடனே கண்டமும் பாம்பின்படம்போலவுஞ் சங்குகள்போலத்தொனியுண்டாய்க் குவிந்து உள்வாங்கி மண்டலஞ்செய்வனவாய் வலிமைகொண்ட குளம்புடையவாய்க் கிளைகொண்ட நரம்புகள்மறைந்து தசையையுடையவாய்ப் பிரகாசிக்கிற முழங்கால் நெளித்தலில்லாமல் நெளிப்பாகிய முதுகுப்பொருத்துடைகளுந்திரண்டுதண்டைக்காலானது நீண்டுசிவந்தநிறத்தையுடையவாய்-எ-று. ௬௬

மிக்கசெழுமறைநாவிற்கமலநாதன் - விழிப்புனலேலவிண்ணோ
ர்கணமர்தம்பால், மைக்கடன்மேலமிர்தத்திலங்கிமீதிவ-
மல்குகருப்பையினாகவண்டந்தன்னிற், றெக்கவெழுமேத
மெனுமிவற்றிற்றோன்றுந் - தொன்மைபவாயீரிரண்டுதுணை
த்தாணெற்றி,யொக்கவெழுக்கும்பரிகளுளவாய்வானி - லொண்
புனலிற்செலலுநெறியுளவுமாகி...... ...... ...... ...... *

(இ-ள்.) மிகுந்த செழுமையுள்ள சாய்புதவத்தினுடையநாவிலும் பிரமதேவனானவன் ஓமஞ்செய்யும்போது அவன் கண்ணினின்றுகையில்விழுந்த நீரினிடத்தும் இந்திரன்முதலிய திக்குப்பாலகரெண்மரிடத்துஞ்சமுத்திரத்திற்பிறந்த அமிர்தத்தினிடத்தும்அந்த

ப்பிரமஹோமஞ்செய்த அக்கினியிடத்தும் நிறைந்தகருப்பையிலும் லட்சுமிசாபத்தாற் பிரமன் கோட்டானாக அந்தக்கோட்டான் மூட்டையிலும் ஆகிய இவ்வேழிடத்திலும் உற்பத்தியான பழமையுடையனவாய் நாலுகாலும்நெற்றியும் ஒக்கவெளுத்திருக்கும் பஞ்சகல்யாணி என்னுங்குதிரைகள் ஆகாயத்திலும் நீரிலும் செல்லுகின்ற வழியுண்டாயின என்றவாறு. (௬௰)

மங்காளன்சாரங்கன்கங்காநீலன் - மௌவழகன்கொங்காளன்ச
ன்னசம்பான்,குங்குமச்சோரன்கரியானீலன்சாரன் - குலவுமள்
ளானுரஞ்சிவந்தானல்லான்பொல்லான், றங்குகருங்காற்சம்பா
னென்றுகூறுந் - தன்மையுளபன்னிறமும்புனைந்தசாதித், துங்
கமிகும்பரியிவையென்றவற்றின்றன்மைத் - தொன்மையுணர்த்த
ரசனைமுன் றொழுதுநின்றார்..............*

(இ-ள்.) மங்காளனென்றும் - சாரங்கனென்றும் - கங்காநீலனென்றும் - மௌவழகனென்றும் - கொங்காளனென்றும் - சன்னசம்பானென்றும் - குங்குமச்சோரனென்றும் - கரியானென்றும் - நீலனென்றும் - சாரனென்றும் - விளங்கிய மள்ளானென்றும் - உரஞ்சிவந்தானென்றும் - நல்லானென்றும் - பொல்லானென்றும் - கருங்காற்சம்பானென்றும் - பலநிறத்தையுமுடைய சாதியாய் உயர்ந்த குதிரைகளிவைகளென்று அவற்றின் மேன்மையெல்லாஞ்சொலிப் பாண்டியராசனைத்தொழுதுநின்றார்களென்றவாறு. (௬௧)

நற்பரியினியல்புணர்ந்தோரின்னவாறு-நவின்றமொழிகேட்டு
மிகநயந்துவெள்ளி, வெற்பனையவிடையேறியளிக்குந்தெய்வ
வெம்பரிகள்யாவும்விலைமதித்தபின்னர்ப், பொற்புடைய தன்
பொருண்மேலெண்மடங்கு போதுதலாற்பொங்குமகிழ்வெ
ய்திமாறன்-நற்பனையமுகநாடிக்கயிறுமாறித்தருகதுரகத்தொ
குதித்தன்னையென்றான் ..........................*

(இ-ள்) நன்மையுள்ள குதிரையினுடைய லட்சணங்களை யறிந்தவர்கள் இந்தப்பிரகாரஞ் சொன்ன சொல்லைக்கேட்டு மிகவும்நயப்பையடைந்து வெள்ளிமலையையொத்த இடபவாகனத்திலேறிவந்தகடவுளாற் கொடுக்கப்பட்ட தெய்வீகமுள்ள வெவ்விய குதிரைகளையெல்லாம் விலைமதித்தபின்பு அழகுபொருந்திய தான்கொடுத்த பொருளின்மேல் எட்டுப்பங்கு அதிகமாகிய விலைபெற்ற குதிரைகள் வருதலினாலே மிகுந்த மகிழ்ச்சியடைந்து பாண்டியனானவன்பரமசிவனுடைய் திருமுகத்தைப்பார்த்துக் கயிறுமாறித்தாக்கடவீர் குதிரைக்கூட்டங்களையென்றவாறு. (௬௨)

(வேறு.)

காத்துலகனைத்துமுய்யக்கண்ணருள்செய்யுநீதிப்...... *
பார்த்திவன்கருமஞ்செய்வார்பற்றியங்கரத்தில்வாங்கச் *
சாத்தவர்தம்மிலங்கோர்சால்பினர்கயிறுமாறி ......... *
யீத்தனர்பந்தியூடுசேர்த்தனரிவுளியெல்லாம் ......... *

(இ-ள்.) உலகமெல்லாம் பாதுகாத்துப் பிழைக்கும்படி கிருபா நோக்கஞ்செய்கின்ற நீதியையுடைய பாண்டியராஜனது காரியஞ் செய்வோர்கள்கையினாற்பிடித்துவாங்கக் குதிரைச்சாத்தர்களுக்குள்ளே பெருமைபொருந்திய ஒருவர்கயிற்றைமாறிக் கொடுத்தார் உடனே அவர்கள் குதிரைகளையெல்லாம்லாயத்திலேசேர்த்தார்கள் எ-று.

திண்டிறல்செழுவுநேமித்தென்றிசைக்கிறையுஞ்செய்ய
வண்டமிழ்க்கிறையுங்காணவந்திதிசையினேகிப் ... *
பண்டைநற்படிவமாகிப்பணிந்துவிண்ணவர்க்குள்சூழக்
கொண்டலைப்பொருவுகண்டர்குலவுதங்கோயில்புக்கார் *

(இ-ள்.) மிகுந்தவலிமைபொருந்திய சக்கரஞ்செலுத்துகின்ற தென்றிசைக்கு அதிபனாகிய பாண்டியராசனும் செப்பமையாகியவளத்தையுடைய தமிழுக்கரசராகிய மாணிக்கவாசகரும் காணும்படியாய்த் தாம்வந்ததிசைவழியாகச் சென்று பழைய வடிவங்கொண்டு தேவர்களெல்லாம் வணங்கிச்சூழ மேகம்போன்ற கரியகண்டத்தையுடையபரமசிவனுனவர் பிரகாசிக்கின்ற தமது கோயிலிற் புகுந்தாரென்றவாறு (௪௪)

வாய்ந்தனபரிகளும்மாலென்றெழில்வாதவூரில் ... .... *
வேந்தனைமனையில்லகவிடுத்துளமகிழ்ச்சிகூர்ந்து..... *
சார்ந்தமெய்த்தகைமையோருந்தானையுஞ்சூழவேகி ... *
யாய்ந்தநற்றமிழ்நூல்வல்லவரசனுங்கோயில்புக்கான் *

(இ-ள்) இப்படிப்பட்டகுதிரைகள் உம்மாலெனக்குக்கிடைத்தன வென்றுதிருவாதவூர்வேந்தராகிய மாணிக்கவாசகரை அரமனைக்குப் போகவிடுத்து மனமகிழ்ச்சியடைந்துதன்னைச் சார்ந்தபெரியோர்களும்சேனைகளும் சூழும்படிச்சென்று ஆய்ந்திருக்கின்றநல்லதமிழ்நூலிலவல்லவனாகிய பாண்டியராசனும்தன்னுடைய அரமனையிற் புகுந்தானென்றவாறு. (௪௫)

அத்தினமகலக்காலையணைதலும்பரிகளெல்லாம் ... ...*
நித்தனதருளினாலேநெடுங்கூரநரிகளாகி.............*
மெய்த்தமிழ்மதுரைமூதூர் விழித்துயிலொழித்திரங்கத்
தத்தமிலுடன்றுகூடித்தனித்தனிக்களித்துநின்று. ... *

(இ-ள்.) அந்தநாள்போய் மறுநாளுதயமானபின்பு பரமசிவனுடைய கிருபையினாலே குதிரைகளெல்லாம் நெடியகுரலையுடையநரிகளாய் உண்மையாகிய தமிழ்விளங்குகின்றமதுரைமாநகராருடைய நித்திரையையொழித்து இரங்கும்படித்தமக்குள்ளேதாமேகூடிச் சண்டையிட்டு வெவ்வேறாகச் செருக்கடைந்துநின்றன-று (சுசு)

(வேறு.)

நின்றநின்றநெடும்பரியாளர்மேற் ................ *
சென்றுவெம்பகைசெய்துவெருட்டியே ........ *
துன்றுகின்றதுரங்கமொருங்கொடு .... ... ...... *
கொன்றுநின்றுயர்கூவிளிகொண்டவால் ... ... ... *

(இ-ள்.) அங்கங்கிருந்த நெடியகுதிரைக்காரர்கள்மேல் குதிரைகள்போய் வெய்யபகைகொண்டு வெருளச்செய்து நெருங்கியிருக்கின்ற பழையகுதிரைகளை ஒருங்குபடக்கொன்றுநின்று உயர்ந்தபெருங்கூச்சல் கொண்டனவென்றவாறு. (சுஎ)

வரைசெய்கோபுரமாடநெருங்கிய ............... *
வரசர்வீதியுமாவணவீதியு ... .......... ... *
முரசவோசைமுழக்கொழிந்தேமிக்க ......... *
குரைகொள்வாய்நரிகூக்குரலானதால ..... .. *

(இ-ள்.) மலையைப்போற்செய்த கோபுரமும் உப்பரிகைகளும் நெருங்கிய ராஜவீதிகளும் கடைவீதிகளும் பேரிகையோசைமுழக்கம்நீங்கி மிகுந்தசத்தத்தைக்கொண்ட வாயையுடையநரிகள் ஊளையின் சத்தமாயிற்றென்றவாறு. (சுஅ)

பாடியாரணப்போற்றமன்றிற்பயின் ............ *
றாடியார்விளையாட்டின்பதுமையா . .......... . *
லோடியாருமொளித்திடவென்றொரு ............ *
கோடியானதுகூவுநரிக்குழாம் ................ .. *

(இ-ள்.) வேதங்கள்பாடிப் போற்றும்படிக்குக் கனகசபையிலே நிருத்தஞ்செய்கின்ற கடவுளுடைய விளையாட்டின்பதுமையினாலே எல்லாருமோடியொளித்துகொள்ளுங்காளென்று ஒருகோடி நரிகள் கூட்டங்கொண்டு கூவுமென்றவாறு. (சுசு)

துங்கமாறன்றெருகுபடைவெங்கொலை ........... *
தங்குமாயுதந்தாங்கிபெதிர்க்கவே ............. *
வெங்குமானநரிகளெல்லாங்கொடுஞ் ........... *
சிங்கமாமமர்செய்யத்தொடங்குமால் ........... *

(இ-ள்.) உயர்ச்சிபொருந்திய பாண்டியராஜனுடைய கூட்டமா

கிய சேனைகள் வெய்ய கொலைதங்கிய ஆயுதங்களையெடுத்துக்கொண்டெதிர்க்க எங்கும்பசியிருக்கின்றநரிகளெல்லாங் கொடிய சிங்கம்போலஅமர்செய்யத்தொடங்குகின்றதென்றவாறு. (ருய)

நீடுவாரடையிடந்தொருநின்றணி...... ............ *
கூடுவார்மிகக்கூவிவெருட்டுவா . ............*
ரோடுவாரொளித்தோடிப்புகுமிடந் ...........*
தேடிவாரெதிர்சென்றமர்செய்குவார் ............ *

(இ-ள்.) நீடிய தெருக்கள்தோறும் நின்று அணிவகுப்பாகக் கூடுவார்கள் மிகவுங் கூச்சலிட்டு பயங்கச்செய்வார்கள் ஓடுவார்கள்ஒளித்துக்கொண்டு ஓடிப்புகுந்துக்கொள்ளு மிடந்தோறும்தேடுவார்கள்எதிரேசென்று யுத்தஞ்செய்வார்களென்றவாறு. (ருக)

எங்களாருயிர்காத்தருளின்றணி ...... ...... ... *
திங்களாயெனத்தெய்வம்பரவுவா .. ......... ......*
ரங்கபாடமடைத்தரண்செய்குவார் ... ............*
மங்குலாடுமதிற்றலையேறுவார்.. ...............*

(இ-ள்) எங்களுடைய ஆத்மாவை இன்றைக்குக்காத்துரட்சிக்கவேண்டும் மூன்றாம்பிறையையணிந்த பரமசிவனேயென்று சொக்கநாயகரைப்பரவுவார்கள் அழகியகதவுகளைச்சாத்திக்கொண்டு காவல்செய்வார்கள் மேகங்கள் விளையாடுகின்ற மதிலின்மேலேறிக்கொள்வார்களென்றவாறு. (ருஉ)

நற்றவஞ்செயனன்கிலதானதோ..... ..... .........*
கொற்றவன்செய்யகோல்கொடிதானதோ... *
விற்றிதன்பயனென்னெனவின்னணம்...... ......*
முற்றிரங்கினர்கூடலுளோரெலாம்....... .. ......*

(இ-ள்) நம்முடையதேசத்தில் நல்லதவஞ்செய்வது நன்மையில்லாததாயிற்றோ அரசனுடைய செங்கோல் கொடிதானதோ இன்றைக்கு இதனுடையபிரயோசனம் என்னவோவென்று இந்தப்பிரகாரம் இரங்கினார்கள் மதுராபுரியிலுள்ளவர்கள் என்றவாறு. (ருங)

தூயவன்றுரகத்தொழிலாளர்கள்... ... ..........*
கோயிலின்கடைகூகுரல்செய்துபோய்... .... *
மாயவெம்பரிவந்தவெல்லாநரி ............. ...*
யாயவென்றரசற்கெதிர்கூறினார்..... ... ...... *

(இ-ள்) பரிசுத்தராகிய வலிமையுள்ள குதிரைக்காரர்கள்அரமனைவாசலில் வாயைத்திறந்துகூச்சலிட்டுக்கொண்டுபோய் மாயமாய்

வந்தவெம்மை பொருந்தியகுதிரைகளெல்லாம் நரியாய்ப்போயின வென்றுபாண்டியராஜனுக்கெதிரேசொன்னார்களென்றவாறு. (௫௪)

மாக்களோசையும்வாம்பரியோசையுங் .... ... . ... *
கூக்குலாவுகுறுநரியோசையு ... .... .......... *
டீகமொண்மாமுடிமீனவன்றன்செவி .......... ... *
தீக்கொள்வேலைச்சொருகியதொத்தவால். ........ *

(இ ள்.) மனிதர்களுடையசத்தமும் தாவுகின்றகுதிரைகளுடையசத்தமும் ஊளையிடுகின்றகுறியவாகிய நரிகளுடையசத்தமும் மேலாகியகிரீடத்தைக்கொண்டசிரசையுடைய பாண்டியராஜாவின்காதிலேகாய்ந்தவேலாயுதத்தைச்சொருகியதொத்திருந்தன எ-று. (௫௫)

இந்தவாறொலிகேட்டிருகண்டழல் ............ ··· *
சிந்தவாகஞ்சிறுவெயர்ப்பெய்தவே ........ ...... *
யந்தமாறன்வெகுட்சிகண்டண்ணலார் .. .........*
வந்தமாயநரிப்படைமாற்றினார் ... ..... ...... ......*

(இ-ள்.) இந்தப்பிரகாரமாகிய சத்தத்தைக்கேட்டு இரண்டுகண்களுந் தீப்பொறிசிந்தத்தேகத்திலேவேர்வை சிறியதுளிகளாக உண்டாக அந்தப்பாண்டியராஜன்கோபிக்கஅதைக்கண்டுபரமசிவனுனவர் மாயமாய்வந்த நரிச்சேனைகளை நீக்கினாரென்றவாறு. (௫௬)

என்கொணுடன்புனைந்தநலந்திகழ் ··...........*
மின்கொளாரம்விளங்கியமொய்ம்பினன் ........ .*
நன்கணுகிநடப்பவர்தண்டல்செய். .............. *
வன்கணுளளாவம்மெனக்கூறினன் ... ......., ....·· *

(இ-ள்.) செல்வத்தைக்கொண்ட பாண்டியநாட்டை யுடையவனும் அலங்காரம்செய்தநன்மைபொருந்தியபிரகாசங்கொண்ட முத்துமாலைவிளங்கியபுயத்தையுடையவனுமாகிய அரசனானவன் தன்னுடையகண்ணுக்குச் சமானமாய் நடக்கின்றகொடிய தண்டற்காரரை வாருமென்று ஆக்கியாபித்தானென்றவாறு. (௫௭)

வேறு.

நரியினிற்றெருகுதியெல்லாநற்பரித்திரள்களாக்குஞ்···*
சரிதையைக்கொணர்மினென்னத்தாடொழுதவர்களோடி,
யிருபிறப்புடையராகியினிபிறப்பில்லார்தம்மை ···*
வினைவினிற்குறுகிநும்மையழைத்தனன்வேந்தனென்றார்

(இ-ள்) நரியினுடையகூட்டங்களெல்லாம் நல்லகுதிரைக்கூட்டங்களாக்குகின்ற சரித்திரத்தையுடைய மந்திரியைக் கொண்டுவாருங்களென்றுசொல்லத்தண்டற்காரர் அந்தப்பாண்டியன் பாதத்தைவண

ங்கிச் சீக்கிரமாகப்போய்இரண்டுபிறப்பையுடையவராகி யினியொருபிறப்புமில்லாத மாணிக்கவாசகரைக்கண்டு உம்மை அரசனழைத்துக்கொண்டுவரச்சொன்னானென்றார்களென்றவாறு. (கஅ)

சித்தருக்கன்புபூண்டசித்தருமுறுவலெய்தி........ ...*
நித்திலத்தொளிபோல்மின்னுநீறெனுஞ்சாந்துபூசிப்.*
பத்தருக்கேவல்செய்வார்பதமலர்முடியிற்சூட்டி... .*
முத்தமிழ்ப்பொருளைநாடன்முன்புசென்றருகுநின்றார்

(இ-ள்.) சித்துவித்தைகாட்டியகடவுளிடத்திலே அன்புவைத்தசித்தத்தையுடைய திருவாதவூராரும்புன்சிரிப்புக்கொண்டு முத்துப்பிரகாசத்தைப்போல பிரகாசியாநின்றதிருமேனியிலே திருநீறாகிய சந்தனத்தைப்பூசி அடியவர்களுக்கேவலசெய்வாராகியகடவுளுடையபாதாரவிந்தங்களைச் சிரசிலேவைத்துக்கொண்டு இயலிசை நாடகமென்னு முத்தமிழையுமுவளர்க்கின்றபொருளை நாடனாகிய பாண்டியராஜன்முன்னேபோய்ப் பக்கத்திலேநின்றாரென்றவாறு. (க௯)

மூட்டெழுமழல்போல்மன்னன்முனிவுடை முகத்தனாகி
யீட்டுநம்பொருள்களெல்லாமிரப்பவர்தமக்குநல்கி...*
நாட்டுளநரிகளெல்லாநற்பரியாக்கிநம்முன் .......*
காட்டினாரிவர்செய்மாயங்கண்டிரோவமைச்சிரென்றான்.

(இ-ள்) மூண்டெழுகின்றதீயைப்போல் பாண்டியராஜனானவன் கோபத்தையுடையமுகத்தினனாகிச் சொல்லுவான் இவர்நாம் சம்பாதித்ததிரவியங்களெல்லாம் யாசகர்களுக்குக்கொடுத்துவிட்டு நாட்டிலேயிருக்கின்ற நரிகளையெல்லாம் நல்லகுதிரைக்கூட்டங்களாக்கி நம்முன்னே யழைப்பித்துக்காண்பித்தார் இந்தமாயத்தைக் கண்டீர்களோ மந்திரிகளேயென்றானென்றவாறு. (௨௰)

தன்றொழில்வழுவினோர்கடமக்குறு துயரஞ்செய்தல்..*
வன்திறலரசர்நீதியாயினுமறைவல்லாளர் .... ....*
சென்றுயர்தவத்தினிற்போர்தெரிவையர்விருத்தர்பால.
ரொன்றிவர்க்குறுகண்செய்தலெம்மனோரியல்பன்றென்று

(இ-ள்.) பின்னும்பாண்டியராஜனானவன் தன்னுடைய தொழிலிலேதப்பினவர்களுக்கு மிகுந்ததுன்பத்தைச்செய்வதுவன்மைபொருந்திய சௌரியத்தையுடைய அரசர்களதுநீதியாயினும்வேதத்தில்வல்லபிராமணர்கள் உயர்ந்ததவமார்க்கத்திலேநிற்பவர்கள்மாதர்கள் விருத்தர்கள்பாலர்கள்என்றுசொல்லப்பட்ட இவர்களுக்குத் துன்பஞ்செய்வது நம்போல்வார்களுக்கு இயற்கையல்லவென்று சொல்லியென்றவாறு. (௨க)

தண்டல்செய்வன்கணாளர்தங்களைநோக்கிநங்கண் ..... *
கண்டிடமுன்னில்லாமற்கடிதினிவ்வர்கொண்டேகி..*

மண்டழல்வெயிலினூடேவளைப்பினினிறுத்திநம்பாற் *
கொண்டதனங்களெல்லாங்குறைவறவாங்கு மென்றான்.

(இ-ள்.) கொடுமையையுடைய தண்டற்காரர்களைப் பார்த்து இவனை நம்முடைய கண்பார்க்க எதிரேநில்லாமல் சீக்கிரத்திலே கொண்டுபோய் நெருங்கிய தீயையொத்த வெயிலினிடத்திலே ஒருகோடுகிழித்து அதிலேநிறுத்தி நம்மிடத்திலேவாங்கிய திரவியங்களையெல்லாம் குறைவில்லாமல் வாங்குங்கோளென்றான் பாண்டியராஜனென்றவாறு. (௬௨)

வன்றிறலேவலாளர்மற்றவர்தமைக்கொண்டேகி.......*
யொன்றியவளைப்பினூடுநிறுத்தலுமுலகோர்போற்று.*
நன்றிகொள்வாதவூரர்நரியெலாம்பரிகளாக்கித்.........*
தென்றிசைநிருபர்க்கீந்தசித்தனைநினைந்துசொல்வார் .*

(இ-ள்.) வலிய சௌரியத்தையுடையதண்டற்காரர் அவரைக்கொண்டுபோய்க் கோடுகிழித்து அதிலேநிறுத்தினார்கள் அப்போது உலகத்தார் வணங்குகின்ற நன்மையைக்கொண்ட திருவாதவூரர் நரிகளையெல்லாங் குதிரைகளாக்கித் தென்னாட்டரசனாகிய பாண்டியனுக்குக்கொடுத்த சித்தனைநினைந்துசொல்லுவரென்றவாறு. (௬௩)

தொல்லையோரிருவர்தேடுஞ்சோதியேயாதுசெய்வேன் *
றில்லையோர்பரவநின்றதெய்வமேயாதுசெய்வே ....*
னில்லையோகருணைநின்பாலின்றெனையடிமைகொண்டா.
யல்லையோதமியேனின்னலறிதியோவறிந்திலாயோ...*

(இ-ள்.) முற்காலத்திலே பிரமவிஷ்ணுக்கள்தேடிய சோதிசொரூபனே நானென்னசெய்வேன் தில்லைமூவாயிரவர் வணங்கும்படி நின்றகடவுளே நானென்னசெய்வேன் உன்னிடத்திற் கிருபையில்லையோ என்னையடிமைகொண்டவனீயல்லையோ என்னுடைய துன்பத்தையறிந்தாயோ அறிகிலாயோவென்றானென்றவாறு. (௬௪)

பரித்திரளரியேயானபான்மைகண்டடியேன்றன்னை *
வருத்தினரிதனைமாற்றவல்லநீமாற்றாயாகிற்...... [று
றரித்தனைவிடத்தையென்னுந்தன்மையுப்புரங்கண் மூன்
ளெரித்ததுமிலவாமென்றெண்ணிரங்கினரெவர்க்குமிக்கார்

(இ-ள்.) குதிரைக்கூட்டங்கள் நரிகளான தன்மையைக்கண்டு அடியேனைவருத்தினார்கள் இதனைநீக்கத்தக்க நீ நீக்கமாட்டாயானால் விஷத்தைக் கண்டத்திற்றரித்தாயென்னும்தன்மையும்திரிபுரங்களை மூன்றுமெரித்ததும் இல்லையாமென்று இரங்கினார்எவரினுமிகுந்தவராகிய திருவாதவூரரென்றவாறு. (௬௫)

நன்றிகொள்கடவுட்கங்கைநதியினைவையைபூடு...... ... ...*
சென்றெழில்வாதவூரர்பரிடர்தீரென்றேவி * ........ ...*
யன்றொருமடந்தைக்காளாயடியவர்க்கெளியார்கொன்றை ...*
துன்றியமுடியின்மேன்மண்சுமந்ததையுரைத்தல்செய்வாம்*

(இ-ள்) நன்மையைக் கொண்ட தெய்வகங்கையைப் பார்த்து வையைநதியின்மேலேபோய் அழகியதிருவாதவூருடைய பெரிய துன்பத்தை நீக்கென்று அனுப்பி அப்போது ஒருபிட்டுவாணிச்சிக்கு க் கூலியாளாய் அடியவர்களுக்கு எளியராகிய பரமசிவன் கொன்றைமலர் நெருங்கிய சிரசின்மேலே மண்சுமந்த கதையைச்சொல்லுவாமென்றவாறு. (கஎ)

குதிரையிட்டசருக்கம்

முற்றிற்று. ஆகதிருவிருத்தம் - உ௱சஅ.

## மண்சுமந்தசருக்கம்.

தங்கியவருளின்மிக்கார்தாம்படுமிடும்பையுன்னி.... .......*
யங்கணரவர்பாலுற்றவருந்துயரகற்றுகென்று..............*
கங்கையைவிடுப்பவேகிக்கடும்பெருக்கெடுத்துவையைப்....*
பொங்கலைப்புனலாயெங்கும்புரண்டதுபுணரியேபோல்....*

(இ-ள்) தங்குகின்றகிருபையிலே மிகுந்தவராகிய திருவாதவூரர்படுகின்ற துன்பத்தைநினைத்து பரமசிவனவரிடத்திலேவந்தஅரியதுன்பத்தை நீக்குவாயென்று கங்காநதியையேவ அது கடியபெருக்கெடுத்து வையைநதியிலேசேர்ந்து மிகுந்தசலப்பிரவாகமாய் எங்கும்புரண்டது. சமுத்திரம்போலென்றவாறு. (க)

சேர்ந்தவெண்முத்தமூரல்செய்துநீர்க்கலைமேலார்த்து*
காந்தளுஞ்செங்கைவீசிக்கனதனக்குரும்பைகாட்டி. *
மாந்தளிர்ப்பதங்கண்மீதுவருதிரைச்சிலம்பார்ப்பப்*
போந்துளகணிகைமாதர்ப்போன்றதுவையையாறு *

(இ-ள்) வெண்மைபொருந்திய முத்தமாகிய பற்களாற் சிரித்து நீராகியவஸ்திரத்தை மேலேகட்டிக்கொண்டு காந்தளாகியகைதனை வீசி கனம்பொருந்திய தனமாகிய குரும்பைகளைக்காட்டிமாந்தளிராகிய பாதங்களின்மேலேவருகின்ற அலையென்னுஞ் சிலம்புகள் சத்திக்கநடக்கின்ற வேசைமாதரை நிகர்த்ததுவையைநதி எ-று.

திரைப்பெருமருப்பினாலேசெழுங்கரையிருபாற்குத்தி *
மரத்திரண்முறித்துச்சாலிவயலெலாமழித்துவாயா ... *
னுரைத்திரள்சிந்திமீதேநுண்மணலிறைத்துவண்டு. *
நிரைத்தலின்மதத்தவேழநிகர்த்ததுவைகையாறு...... *

(இ-ள்) அலையாகிய பெரியகொம்பினாலே செழுமைபொருந்திய இரண்டுபக்கத்துக் கரைகளையுங்குத்தி மரக்கூட்டங்களைமுறித்து நெற்பயிர்களையுடைய கழனிகளையெல்லாமழித்து வாயினாலேநுரைக்கூட்டங்களைச்சிந்தி நொய்மணலை மேலேயிறைத்து வண்டுகள்வரிசையாக மொய்க்கவருதலால் மதத்தையுடையயானையையொத்தது வைகைநதியென்றவாறு. (௩)

மைத்திகழ்குழலாளந்தடலைமகன்முலையிற்றோய..... *
வைத்தனைவருத்துமேன்மையனகவாயுதமென்றெண்ணி
யொத்தெழுந்தொளிருங்கன்னலுயங்குசெங்கழுநீர்கஞ்சம்
புததலையழிக்கவேண்டிப்புரண்டதுபழனமெலாம். *

(இ-ள்) மையைப்போலப் பிரகாசிக்கின்ற கூந்தலையுடைய அழகியபார்வதியினது ஸ்தனபாரங்களிற் கூடும்படிக்குப் பரமசிவனை வருத்துகின்ற மேன்மைபொருந்திய மன்மதனுடையஆயுதங்களென்று நினைத்து ஓரோராசியாய் எழுந்து பிரகாசிக்கின்ற கருப்புகளையும் விளங்குகின்ற செங்கழுநீர்மலரையும்தாமரைமலரையும் இன்னும் புதியவாயுள்ள பலமலரையும் அழிக்கவேண்டி வயல்களின்மேல் விழுந்து புரண்டது வைகையாறென்றவாறு. (௪)

வடம்படைத்துயரபாரவனமுலைமுகத்துமாத........ *
ரிடுந்துகில்கடுகிவீழ்வதென்னநின்றழகுசெய்து..... *
தடம்படக்கிடந்ததெங்கின்றயங்குசெங்குரும்பைமீது *
நெடும்புனற்றிரைபோய்மீளநிவந்ததுவைகையாறு.. *

(இ-ள்.) முத்துமாலையைத்தரித்துள்ள அழகியதனபாரத்தின்மேல் மங்கையர்கள் தரிக்கின்றவஸ்திரம் சீக்கிரத்தில் வீழ்வதுபோலநின்று அழகினைச்செய்து விசாலமாகவிருக்கின்ற தென்னமரத்தில் விளங்குகின்ற சிவந்த குரும்பையின்மேல நெடியநீர்த்திரைகள் வீழ மீளப்பெருகியது வைகைநதி என்றவாறு. (௫)

மீதெழுபரிதிகையால்விடுங்கனல்வெம்மைதீரப்...... *
பூதலமடவாள்போர்க்குப்புதியவெண்டுகிலேபோல... *
யாதலர்ப்பழனஞ்சோலையாதெனப்பரந்துகஞ்ச ... *
மாதுறைமதுரைமூதூர்மதிற்புறஞ்சென்றுசேர்ந்து.. *

(இ-ள்) ஆகாசத்திலெழுகின்ற சூரியனானவன் தன் கிரணங்களென்னுங்கைகளால் விடுகின்றவெப்பம்நீங்கிப் பூமிதேவியானவள்போர்த்துக்கொள்கின்ற புதுமைபொருந்திய வெள்ளைவஸ்திரம்போல்

மலர்களையுடைய கழனியெது சோலையெதுவென்று சொல்லப் பரவி த்தாமரைப்பூவிலிருக்கின்ற லட்சுமியானவள்வசிக்கின்ற மதுரைமா நகரத்து மதிற்புறத்தே வெள்ளம்வந்து சூழ்ந்தது என்றவாறு. (௬)

தாங்கியதுவசவாயிற்றடமதிலிடியத்தள்ளி ........ *
யாங்கெழின்மதுரைமூதூரழிப்பதுபோன்றுசெல்லப் *
பாங்குளவிடங்களெல்லாம்பரந்ததுவையைநன்னீ ... *
ரீங்கெதுசெய்வமென்றுயாவருங்கவற்சிகொண்டார்...*

(இ-ள்) தாங்கப்பெற்ற கொடிகள்கட்டிய கோபுரவாயிலையுடை யவிசாலமாகிய மதிலையிடியும்படி தள்ளிமதுராபுரிபட்டணத்தை யழிப்பதை யொத்துச்செல்ல அதுகண்டு பக்கங்களிலேயுள்ள இட ங்களெல்லாம் வையைநீரானது பரவிவந்தது இவ்விடத்திலே யாம் என்னசெய்வோமென்று எல்லாருங்கவலைகொண்டார்கள் -எ-று. (எ)

மைக்கடுங்களிற்றுத்தானைவழுதியுங்கடிதுவந்து ..... *
தொக்கபொன்மலருமுத்துந்துகின்மணிப்பூணுநல்கித் *
தக்கவன்புவியிலுள்ளோர்தமக்குயிரொன்னுமம்மனே...*
மிக்கநின்கோபமாறல்வேண்டுமென்றிறைஞ்சிநின்றான் *

(இ-ள்.) வேகத்தையுடைய கறுத்தயானைபோன்ற சேனைகளையு டைய பாண்டியராஜனும் சீக்கிரத்திலே வந்து நெருங்கியபொன் னும் பூவும்முத்தும் வஸ்திரமும் ரத்தினாபரணமும் அந்தவையை யாற்றிலேவிட்டுத் தகுந்தபூலோகத்தாருக்கு உயிரொன்கிறதாயே உன் னுடைய மிகுந்த கோபமாறுதல் வேண்டுமென்று வணங்கிநின்றா னென்றவாறு. (அ)

கலைமதிக்குலத்துமன்னன்கன்னிநன்னாடன்கூறுந் .. ..... ...*
தலைமைமிக்குடையசொல்லாற்றன்முனிவொழிதலின்றி [ன்று
மலையெனத்திரைகண்மேன்மேல் வருதலகண்டிதுவென்னெ
நிலையுறச்சிந்தையுள்ளேநேடினனடிப்பின்னர்......... *

(இ-ள்) சந்திரகுலத்துமன்னவனுங்கன்னிநாடனுமாகிய பாண் டியன்வேண்டிக்கொள்ளுந் தலைமைப்பாட்டைமிகவுமுடைய சொ லினாலே வையைநதியானது தன்னுடையகோபம்நீங்காமல் மலை யைப்போலஅலைகள்மேலும்மேலும் வருதல்கண்டு இதுஎன்னவென் றுநிச்சயந்தெரியமனதுக்குள்ளே ஆலோசித்தான் அப்படிஆலோசி த்தபின்பென்றவாறு. (௯)

ஆதியாங்கடவுளெந்தையாலவாயமலன்மங்கை ..........*
பாதியான்சிறந்தபூசைபண்டையிற்குறைந்ததுண்டோ *
நீதியாந்தவத்தின்மிக்கார்நெஞ்சகம்புழுங்கமண்மேற் *
றீதியாஞ்செய்ததுண்டோசெப்புமினமைச்சரென்றான்

(இ-ள்) யாவர்க்கும் மூதற்கடவுளாயும் எனதுபிதாவாயும் திருவாலவாயிலிருக்கும் அமலனும் உமாதேவிபாகனுமாகிய பரமசிவனுக்குமுன்செனமத்திலேயான்செய்தபூசையிலே குறைவுபட்டதுண்டோ நீறுநிறைந்த தவத்திலேயிருந்த பெரியோர்களுடையமனப்புழுங்கும்படி பூமியிலேயான் தீங்கு செய்ததுண்டோ சொல்லுங்கள்மந்திரிகளேயென்றான் பாண்டியராஜனென்றவாறு. (௰)

விளங்கியமதிசேர்சென்னிவித்தகர்பத்தரான ...... *
களந்திகழ்வாதவூரர்வருந்தியவலைப்பினீக்கி ........*
யுளங்கொளமகிழ்ச்சிசெய்யினுறுபுனலூர்கொளாதென்
றளந்தறிவறிந்துகூறியாங்கவர்தொழுதுநின்றார் *

(இ-ள்.) பிரகாசிக்கின்ற மூன்றாம்பிறையைத்தரித்த சிரசையுடைய பரமசிவனுக்கு அடியாரானவளம்பொருந்திய மாணிக்கவாசகரை வருத்தப்படுகின்ற கோட்டிநின்று நீக்கி அவருக்குமனமகிழும்படி செய்வித்தால்மிகுந்த இந்த நீர் ஊரை யடித்துக்கொண்டுபோகாதென்று ஆலோசித்துச்சொல்லிப் பாண்டியனைத்தொழுது நின்றார்கள்மந்திரிகளென்றவாறு. (௰௧)

மன்னனுமவர்கடம்மேன்மகிழ்ந்தருட்பார்வைநல்கி *
யென்னுளமதித்தவாறின்றிங்கினிதுரைத்தீரென்று *
கொன்னுறுவலைப்பினூடேநிற்குநற்குணத்தினானை .. *
முன்னுறவழைத்துநண்பான்முகமலர்ந்திதுமொழிந்தான்

(இ-ள்.) பாண்டியராஜனும் அப்படி சொன்னவர்களிடத்து மனமகிழ்ந்து கிருபாநோக்கஞ்செய்து என்மனத்தில்நினைத்தப்பிரகாரமே இன்று இங்கேஇனிதாகச் சொன்னீர்களென்று சொல்லிஅச்சத்தைத்தருகின்றவலைப்பினிடத்திலே இருக்கின்ற நற்குணத்தையுடையமாணிக்கவாசகரைத்தம்முன்னே யழைப்பித்து சினேகத்தால் முகமலர்ச்சியடைந்துஇந்தவார்த்தைசொன்னானென்றவாறு. (௰௨)

பாம்பணிசெய்யவேணிப்பரம்பரனடியார்கைமே... *
லாம்பொருணமதேயாலறம்பிறர்க்காவதன்றோ *
தேம்படுமலங்கன்மார்பீர்செயலிதற்குமதுமேனி .....*
சாம்புவதவமேயான்செய்தண்டலேதகவிலாமை . *

(இ-ள்) சர்ப்பத்தையணிந்த சிவந்தஜடாபாரத்தையுடைய பரமசிவனடியார்கள்கையிலே நீர்கொடுத்தபொருள் நம்மதேயானால்தருமம்பிறருக்குப்போகுமோவாசனைபொருந்தியமாலையையணிந்தமார்பினையுடையமாணிக்கவாசகரே இந்தக்காரியத்திற்கு உமதுதிருமேனிவருந்துவது விருதாவேயிதற்குயான் தண்டஞ்செய்தது அறிவிலாமையாமென்றவாறு. (௰௩)

உற்றவித்தகைகணமுன்னேயுணருமிவ்வுணர்வில்லாமை *
குற்றமித்தனையுநம்மேற்கொண்டனங்குறைவிலாமன் *
மற்றினிப்புகலுமாறென்வையைநம்மூர்கொளாம ...*
வற்றவத்தலைவர்நீரேயடைப்பிருமெனநவின்றான் ...*

(இ-ள்.) வந்தயிந்தக் காரியங்களை முன்னதாக அறியு மறிவில்லாமையாகியகுற்றத்தைநம்மதாகக்கொண்டோம் குறைவில்லாமல் இனிநான்சொல்வ தென்னவென்றால் வையைநதி நம்முடையமதுரைமாநகரை யழியாமல் நன்மையாகிய தவத்திலே தலைவராகிய நீரே அதைத்தடைசெய்யுமென்றுசொன்னான் பாண்டியராஜன் எ-று.(யசு)

அருட்பெருவழுதியிவ்வாறன்புரைபகர்ந்தபோது ...*
தரிப்பரிதென்னமுன்னைநந்தழலென வெகுண்டபோதும்
விருப்பொடுவெறுப்புமில்லா மெய்ம்மையார்தம்மையாண்ட
திருப்பதநினைத்தார்வையைச்செழும்புனலூர்கொளாமல்

(இ-ள்.)கிருபையையுடையபெரியபாண்டியராஜனானவன் இந்தப்பிரகாரம் பத்தியானவசனஞ்சொன்னபோது ஒருவராலுந் தாங்குதற்கரிதென்று சொல்லும்படி முன்பு அக்கினியைப்போல் கோபித்தபோதும்விருப்பும் வெறுப்புமில்லாத மனத்தினையுடையமாணிக்கவாசகர்தம்மையாட்கொண்ட பரமசிவனுடைய திருவடியைநினைத்தார்வையைநீரானது மதுராபுரியையடித்துக்கொண்டுபோகாமல் என்றவாறு. (யஎ)

சுந்தரப்பரிமேல்வந்தமேதாற்றமேமனத்திலுன்னி. .... *
யந்தரத்திறைஞ்சநன்னீரடங்கியுள்வாங்கிச்செல்ல ...*
வெந்துயர்பிறவியானவிடங்கிளர்வேலைநீத்தி... .. *
வந்தருட்கரையிற்சேர்வார்வையையங்கரையிற் சென்றார்

(இ-ள்) அழகியகுதிரையின்மேல்வந்த காட்சியையே மனதில் நினைத்துஆகாயத்திலேவணங்க நல்லநீரானது அடங்கி யுள்வாங்கிப்போக வெப்பம்பொருந்திய துயரைச்செய்கின்ற பிறவியாகிய விஷத்தையுடைய கடலைநீந்திவந்து கிருபையாகிய கரையிலே சேரப்பட்ட மாணிக்கவாசகர் வையைநதிக்கரையில் வந்தார் எ-று.(யஅ)

முறைமுறைவணங்கிநின்றவாருயிர்முகத்தைநோக்கி *
யறைதிரைநெடுநீர்வையையடைப்பதுகடிதில்வேண்டு*
முறையுமிடமாந்தரெலலா மொல்லையில்வம்மினென்று
பறையறைவித்துநட்டூர்க்கிவ்வுரைபரப்புமென்றார் *

(இ-ள்) கிரமப்படி வணக்கஞ்செய்து நின்றதூதர்களுடைய முக

த்தைப்பார்த்துச் சத்திக்கின்ற அலையையுடைய நெடியநீர்சூழ்ந்த வைகைநதியைச் சீக்கிரத்தில் அணைசெய்யவேண்டும் உழிக்கின்ற இந்தமனிதர்களையெல்லாம் சீக்கிரத்தில் வாருங்களென்று முரசறை வித்து நம்முடைய ஊருக்கு இந்தச்சொல்லைத் தெரிவியுங்கோ ளென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (யஎ)

ஆரியர்கடிதினோடிவன்பறைபறைவித்தம்பொற் ...... *
றேரியல்வீதிதோறுஞ்சென்றுரைபரப்புமுன்னே . *
கூரியகொட்டுமண்சேர்கூடையுங்கொண்டுவையை . *
நீரியல்கரைமேல்வந்துநின்றனர்மதுரைமாந்தர் ... .. *

(இ-ள்) அப்படியே தூதர்கள் சீக்கிரத்திலேயோடி வலியபறைய றைவித்து அழகியபொன்மயமாகிய இரதங்கள் நடக்கின்ற தெரு க்கள்தோறும்போ யிதனைச்சொல்லுதற்குமுன்னமே கூர்மைபொ ருந்திய மண்வெட்டியும் மண்ணெடுக்குங் கூடையுங் கொண்டு நீர் பெருகிய வைகைநதிக்கரையிலே வந்துநின்றார்கள் மதுரையிலுள் ளமனிதர்களென்றவாறு. (யஅ)

நீறுகொண்டிலங்குமேனிமறையவர்நியமஞ்செய்த ...*
வீறுகொண்டிடங்கடோறுமாரிபர்விரைந்துசென்று *
கூறுகொண்டளாக்கும்வேறுகோளறையளந்துசெங்கை
மாறுகொண்டுறுக்கிவையைவான்கரையடைக்கலுற்றா *

(இ-ள்) விபூதியைத்தரித்துவிளங்குகின்ற திருமேனியை யுடைய மாணிக்கவாசகரானவர் நியமித்த அதிகாரத்தைக்கொண்டு இடங்கள் தோறும் தூதர்கள் சீக்கிரத்திற்போய் எப்படிப்பட்டவர்களுக்கும் அளவுகோலால் வேறுவேறளந்துவிட்டுச்சிவந்தகையிலே ஒருமாறு கொண்டு அடித்து வைகைநதிக்கரையை அடைக்கத் தொடங்கினார் களென்றவாறு. (யகூ)

கண்பெறுகழையின்முத்துங்கடகரிமருப்பின்முத்தும்*
வெண்பணிலத்தின்முத்துமேதகுகரும்பின்முத்தும் *
வண்புனற்றிரைகள்வீசவரையெனக்குவைகள்செய்து *
பண்படப்பொருந்தநீருட்பதித்துயர் வரம்புசெய்வார்

(இ-ள்.) கணுக்களுடைய மூங்கிலிற்பிறந்தமுத்துக்களையும்மதத் தையுடைய யானைக்கொம்பிற்பிறந்த முத்துக்களையும் வெள்ளியசங் கிற்பிறந்தமுத்துக்களையும் மேன்மையாகிய கரும்பிற்பிறந்த முத் துக்களையும் வண்மைபொருந்தியநீர்த்திரைகள் கொண்டுவந்துஒது க்கஅவைகளைமலைகளென்னும்படிக் குவித்துத் தகுதியாகப்பொரு ந்தநீரிலேபதியத்தள்ளிஉயர்ந்தகரைசெய்வார்களென்றவாறு. (உய)

பரித்திரணிறுத்துமென்பார்பாம்புகளுருட்டுமென்பார்... *
திரைப்புனன்மிகுத்ததென்பார்தேவர்கட்கபயமென்பார்... *
நிரைப்படுமகிலோடாரமவரவொடுக்கிநீடு... ... ..... *
வரைப்பிடைக்குவித்துநிற்பாராயினர்மதுரையுள்ளார்... .... *

(இ-ள்) குரைப்பாச்சலாக மரங்களை நிறுத்துமென்பார்கள் வைக்கோலாற்செய்யும்பாம்புத்திரைகளைஉருட்டித்தள்ளுமென்பார்கள் அலையையுடையநீர் அதிகரித்ததென்பார்கள் அதற்குப்பயந்து யாம்தேவர்களுக்கு அடைக்கலமென்பார்கள், வரிசைப்படுகின்ற அகிற்கட்டைகளுடனே சந்தனக்கட்டைகளும் அடித்துக்கொண்டு வருதலைப்பார்த்து அங்குள்ளவர்கள் நெடிதாகிய ஓரிடத்திலேகுவித்துநிற்பார்கள் இத்தன்மையுடையவரானார்கள் மதுரைமாநகரத்தி லுள்ளாரென்றவாறு. (உக)

ஏருடைப்புதுநீர்வையையிவ்வகையடைக்குமெல்லை ..*
நீருடைப்பொலிந்தசென்னிநின்மலர்க்கற்புமிக்காள் *
சீருடைத்தவத்திநிற்பாள்செம்மனச்செல்வியென்னும் *
பேருடைநரைமூதாட்டிபிட்டுவிற்றுணவுகொள்வாள் *

(இ-ள்.) அழகையுடைய புதுமைகொண்ட பிரவாக மிகுந்தவையைநதிப்பெருக்கை இந்தப்பிரகாரம் அணைசெய்யும்போது கங்கையைத்தரித்த பிரகாசம்பொருந்திய சிரசையுடைய பரமசிவனிடத்தில் அன்புநிறைந்தவளும் சிறப்பையுடையதவத்திலேநிற்பவளுமாய்ச் செம்மனச்செல்வியென்னும் பெயரையுடையநரைத்தஒருகிழவியானவள் பிட்டுவிற்பனைசெய்து சீவனஞ்செய்துவருபவள் எ-று.

ஆங்கவட்களந்துநீக்குங்கோலறையடைப்பதின்றி ... *
யோங்கலைப்புதுநீர்வையையுடைப்பினையடைக்குமெல்லை
தீங்குளதூதுகளுளர்சென்றநற்குறுகண்செய்ய ...... *
வீங்கெமக்குறுதியாவாரியாவரோவென்றிரங்கி.........*

(இ-ள்) அவ்விடத்தில் அந்தப்பிட்டுவாணிச்சிக்கு அளவு செய்து நீக்கிய பங்குமாத்திரம் அடையாமல் அலைகளையுடையபுதியநீர் மிகுந்த வையைநதிக்கரையெல்லாம் அடைக்கும்போது அதைப்பார்த்து கொடுமையுள்ள தூதர்கள் வருத்தப்படத்துன்பஞ்செய்ய அந்த அம்மையானவள்பயந்து இவ்விடத்திலே எனக்குறுதியாய்வந்து இந்தப்பங்கை அடைப்பவர்கள்யாரோவென்று இரக்கமடைந்து.எ-று

பிட்டினைக்கூலிகொண்டுபெருங்கரையடைப்பாரின்றி *
தெட்டிலைச்சூலமேந்துநின்மலன்கோயிலெய்தி ......*
மட்டரத்தளர்ந்தகொங்கைமார்பினிற்கண்ணீர்வார ...*
வெட்டுருத்திரண்டபாதமிறைஞ்சிநின்றிதனைக்கூறும் *

(இ-ள்) பிட்டினைக்கூலியாக வாங்கிக்கொண்டு பெரியகரையைய டைப்பவரொருவருமில்லாமல் நெடியபிலேகளையுடையசூலாயுதத் தையேந்தப்பட்ட சொக்கநாயகராது மேகாயிற்குப்போய் அளவுகட ந்து தளர்ந்து சாய்ந்த கொங்கைகளையுடைய மார்பிலேகண்ணீரொ ழுக அஷ்டமூர்த்தியாயிருந்த அவருடையதிருவடியைவணங்கிநின் று இதைச்சொல்லுவாளென்றவாறு. (உசு)

(வேறு)

நெட்டரவக்கச்சுடையாய்நீலநிறத்திருமாதின்... ........*
வட்டமுலேத்தழும்புபடவந்தணையுந்திருமார்பா ........ ...*
கட்டியசெஞ்சடையாயுன்கண்ணருள்கொண்டெப்பொழுதும்
பிட்டினைவிற்றுண்பேற்கும்பெரும்பையுளதாமோ... ...*

(இ-ள்.) நெடியசர்ப்பக்கச்சையுடையவனே கரியநிறத்தையு டையகாமாட்சியினது வட்டமாகியமுலேத்தழும்புபடந்துஅணைந் தஅழகியமார்பையுடையவனே கட்டப்பட்டசிவந்த ஜடாபாரத்தை யுடையவனே உன்னுடையகிருபாநோக்கத்தைக்கொண்டு எப்போ தும்பிட்டினைவிற்று உண்ணப்பட்ட எனக்கும்பெரியதுக்க முண் டாமோவென்றுளென்றவாறு. (உரு)

யாருடனினிப்புகல்வேனென்னுடையாய்வையையினன்
னீருடையாதடைக்கும்வகைநீசிறிதின்றருளாயேல் ...*
சீருடையாயுனக்கடிமைசெய்யுமவர்க்கெளிமையெனும் ...*
பேருடையாயெனப்பலரும்பேசுமொழிபழுதாமோ..... *

(இ-ள்) இனியாரோடு யான்சொல்லுவேன் என்னையடிமையா கவுடையவனேவையைநதிநீருடைத்துக்கொண்டுபோகாமல் அடை க்கும்படிநீயின்றுகொஞ்சங்கிருபைசெய்யாயாகுல் சிறப்பையுடை யகடவுளே உனக்கடிமைசெய்யும் அடியவர்களுக்கு எளிமையென் னும்பெயருடையவனென்று பலரும்பேசுகின்றசொல் பழுதாகு மோவென்றவாறு. (உசா)

தாயுமிலேதந்தையிலேதமருமிலேதமியேனைப் .. ... ...*
பேயினுடனின்றுலும்பிரித்தறியவொண்ணுது......... *
தீயதெனவிலம்பாடென்சிந்தையில்வெந்துயர்தீர... *
நீயருளாயாயினுயிர்நீப்பேன்மற்றென்செய்கேன் .. *

(இ-ள்) எனக்குமாதாவுமில்லை பிதாவுமில்லை ஞாதிகளுமில்லைதனி யேளுகியஎன்னைப்பேயுடனே கூடநின்றாலும்அதினின்றுவேறுபிரி த்தறியக்கூடாது என்னுடையதரித்திரமானதுதீயதாயிருக்கின்றது என்மனதிலிருக்கின்ற வெவ்வியதுக்கம் நீங்கும்படி நீ கிருபைசெ ய்யாயாகுல் உயிரைநீக்கிக்கொள்ளுவேன் பின்னென்ன செய்வே னென்றுளென்றவாறு. (உஎ)

(வேறு)

இ ம்றெனக்குறுதியாகியாணிடும்பிட்டும்வாங்கி ........ *
வன்றிறற்கூலியாளாய்வன்கரையடைப்பாரில்லை ....... *
யுன்றனக்கபயம்யானென்றுரைப்பவடன்மேலன்பு .. *
சென்றவட்காளாமாறுதுணிந்தனர்தேவதேவர்...... *

(இ-ள்.) இன்றைக்கு எனக்கு உறுதியாய் நான்கொடுக்கப்பட்ட பிட்டினைவாங்கிக்கொண்டு மிகுந்தவலிமையுள்ள கூலியாளாய்வந்து மேலாகிய வையைபாற்றங்கரையை அடைப்பாரில்லை உனக்கடைக்க லம்யானென்று முறையிடுகின்ற பிட்டுவாணிச்சியின்மேல் அன்பு வைத்து அவளுக்கு ஆளாகும்படி துணிவுகொண்டார்தேவதேவரா கிய சொக்கநாயகரென்றவாறு. (உரு)

ஆடையுந்துணிந்தசீரையாகியேகூலியாளாய்க் ............ *
கூடையுந்தலைமேற்கொண்டுகொட்டுடைத்தோளராகிப் ... *
பீடைகொண்டயர்வாள்காணப்பெரும்பசியுடையோர்போல
வேடைகொண்டெல்லைவந்தார்வேண்டியவடிவங்கொள்வார் *

(இ-ள்.) துண்டாய்க்கிழிந்த வஸ்திரத்தையுடையவராயும் கூலி கொண்டுவேலைசெய்யும் ஆளாயும் கூடைகவிழ்த்ததலையையும்மண் வெட்டியைக்கொண்டிருக்கும் தோளையுமுடையவராயுந் தன்பசிக் கை அடைத்தற்கு ஒருவருமில்லாமையாலே துன்பங்கொண்டு ஆயா சப்படுகின்ற பிட்டுவாணிச்சையம்மை காணும்படி அதிகபசியுடை யவர்போல வேஷங்கொண்டு சீக்கிரத்தில்வந்தார் வேண்டியவடிவங் கொள்ளும் சொக்கநாயகரென்றவாறு. (உசு)

வந்தெனையேவல்கொள்வாருளர்கொலோமற்றிங்கென்று ...*
புந்தியின்மகிழ்ந்துகோயில்வாயிலிற்புகன்றபோதி. .... .... *
லந்தநன்மொழியைக்கேளாவன்னைதன்னயர்ச்சிகூருஞ் ... *
சிந்தனையொழிந்துகூலியாளரைச்சென்றுசேர்ந்தாள் ... .. *

(இ-ள்.) இங்கேவந்து என்னைவேலைகொள்வா ருண்டோவென்று மனத்திலேமகிழ்ச்சிகொண்டு ஆலயத்தின்கோபுரவாயிலிலே நின்று சொன்னார் அப்போது அந்தநல்லசொல்லைக்கேட்டுத் தாயாகியபிட் டுவாணிச்சியம்மையானவள் தன்னுடையமிகுந்தவியாகூலந் தீர்ந்து கூலியாளாகிய கடவுளை அடுத்தாளென்றவாறு. (சஎ)

புடையின்மேலுலகோரின்றிப்புணர்ந்துளபுலித்தோலாடை *
யுடையின்மேலசைக்குங்கச்சாயோங்குநச்சுரகமின்றிச் .... *
சடையின்மேன்மதியமின்றித்தாங்கியமழுமானின்றி ... .... *
விடையின்மேலின்றிநின்றவெளியனைவெளியிற்கண்டாள்...*

(இ-ள்.) பக்கத்திலே முப்பத்துமுக்கோடி தேவர்களுமில்லாம

ல் தரித்திருக்கின்ற புலித்தோலாடையும் அதன்மேற் கட்டப்பட்ட கச்சாயோங்கிய சர்ப்பமுமில்லாமல் ஜடாபாரத்திலே சந்திரனுமில்லாமல் தாங்கப்பெற்ற மழுமானுமில்லாமல் இடபவாகனமுமில்லாமல் நின்ற சிதாகாசரூபத்தையுடைய கடவுளைவெளியிலேகண்டாள் பிட்டுவாணிச்சியம்மையென்றவாறு. (௯௧)

மைந்தநீயெனக்கிங்காளாய்வருகெனமுன்னர்க்கூலி...*
தந்தியேல்வருதலென்றுசாற்றலுநுகரவிப்போ .... ... *
சிந்தவாரமுதம்போலுமினியபிட்டளிப்பேனல்லா .. *
லந்திவாயிதனைவிற்றேயளிப்பனின்கூலியென்றாள் .. *

(இ-ள்.) கண்டவுடனே மகனே நீ எனக்கு இங்கே ஆளாகிவரக்கடவாயென்றுசொல்ல அதற்குக் கூலியாளனவர் முன்கூலிகொடுத்தியேயானால் வருவேனென்றுசொல்ல அதற்குஅந்தஅம்மையிப்போதுசாப்பிடுதற்குத் தேவாமிர்தம்போலும் இனிமையுள்ள இந்தப்பிட்டுத்தருவேன் அல்லது சாயங்காலத்தில் இந்தப்பிட்டினைவிற்று உன் கூலியைக்கொடுப்பேனென்றுசொன்னவாறு. (௯௨)

இரும்பசியுடையேனன்னேயினியபிட்டளிப்பையாகிற் . *
குரம்புகொண்டடைப்பேன்யானேங்காலனறமுழுதுமென்ன
கரும்புறத்துகின்மேலிட்டபிட்டினைக்கரத்தாலள்ளி ..... *
விருப்பியிங்கிதனைக்கொள்வாயென்றனள்விருப்பமிக்காள் *

(இ-ள்) மிகுந்த பசியுடையேன்தாயே யினிமையுள்ளபிட்டினைக்கொடுப்பாயானால் கோலாலளவுசெய்த உன்பங்கு முழுவதும்யானே அடைப்பேனென்றுசொல்லக் கரியபுறத்தையுடைய வஸ்திரத்திலேயிட்ட பிட்டினைக்கையினாலள்ளி விருப்பம்வைத்து இங்கேயிதனைத் தின்னென்றுசொன்னாள் அன்புமிகுந்த பிட்டுவாணிச்சியம்மையென்றவாறு. (௯௩)

கூற்றடுங்கமலபாதர்குறுந்துணிக்கரியசீரை....... *
யேற்றிடும்பிட்டுவாங்கியின்புறவமுதுசெய்து ... *
மாற்றரும்பசியையன்னேமாற்றினையினிப்போய்வையை
யாற்றினின்கூற்றிலுண்டாமருங்கரையடைப்பேனென்றார்.

(இ-ள்) கூற்றுவனையுதைத்த தாமரைமலரையொத்ததிருவடிகளையுடைய பரமசிவனானவர் கொஞ்சத்துண்டாய்க்கருமையுள்ளகந்தையையேற்று இட்டபிட்டினைவாங்கி இன்பமிகும்படி திருவமுதுசெய்து ஒருவராலும் நீக்குதற்கரிய பசியினைத்தாயே நீக்கினாய் இனிநான் வையையாற்றுக்குப்போய் உன்பங்குக்குண்டான அரிய கரையை அடைப்பேனென்று சொன்னவாறு. (௯௪)

நன்றுநன்றின்றுமன்னைநயந்துபிட்டளித்தல்வேண்டு
மென்றுதந்துணிந்திசையேற்றதுநிறையவாங்கித் ... *
தின்றுநின்றலைநீர்வையைச்செழுங்கரையருகணிற்சென்று
குன்றெனுந்தவத்தாயுமைநம்மேகாலமைறகாட்டிநின்றார் *

(இ-ள்) நல்லது நல்லது இன்னமுந்தாயே நயப்புடனே பிட்டினைக்கொடுக்க வேண்டுமென்று சொல்லித் தமது துண்டுகந்தையை யேற்று அதுநிறையவாங்கித் தின்று நின்று அலையையுடைய நீர் மிகுந்தசெழுமையுள்ள வையைநதிக்கரையிலேவந்து மலைபோலும் உயர்ந்ததவத்தையுடைய அம்மை உமையுடையபங்கைக் காட்டினார் சொக்கநாயகரென்றவாறு. (௬௫)

மெய்த்தவம்புரிவார்தம்மின்விழுப்பமிக்குடையவன்னை .. *
யித்தடங்கரையைவல்லேயெய்தியடைப்பாயென்னப் .. *
பைத்தவெம்பகுவாய்நாகம்பணிமதிப்பாதிகொன்றைக் ... *
கொத்துடன்முடிக்கவல்லார்கோலறையடைக்கலுற்றார் . *

(இ-ள்.) மெய்ம்மைபொருந்திய தவஞ்செய்பவருக்குள்ளே நன்மைமிகுந்தபிட்டுவாணிச்சியம்மையானவள் இந்தவிசாலமாகிய கரையைச்சீக்கிரத்திலே தம்பி நீ யடைப்பாயாகவென்றுசொலப் படத்தையும் வெப்பம்பொருந்திய பிளந்தவாயையுமுடைய சர்ப்பத்தையுங் குளிர்ச்சிபொருந்திய அர்த்தசந்திரனையுங் கொன்றை மலர்க்கொத்துடனே சிரசிலேமுடிக்கவல்லவராகிய சொக்கநாயகர் கோலாலளவுசெய்த பங்குநிலத்தை அடைக்கத்தொடங்கினார் எ-று.

பேர்ப்பர்மண்கூடைபெய்வர்பிறைமுடிமேற்சும்மாடு.....*
சேர்ப்பர்பின்சுமந்துவையைத்திண்கரைசொரிந்துமீள்வர் *
வேர்ப்பர்மெய்யிளைப்பார்போலமென்றுபிட்டிரசநாவிற் *
பார்ப்பரவ்வன்னைதன்மேற்பரிந்தருட்பார்வைசெய்வார் ...*

(இ-ள்.) மண்ணைவெட்டுவார் கூடையிலேயிடுவார்மூன்றாம்பிறையைத்தரித்த சிரசின்மேற்சும்மாடுகோலிவைப்பார்பின்பு சுமந்து திண்ணியவையைநதிக்கரையிலே சொரிந்துதிரும்புவார் வேர்வையடைவார் திருமேனியிளைப்பார்போல் பிட்டினைமென்று நாவிலேசுவைபார்ப்பார் அந்தபிட்டுவாணிச்சியம்மைமேல் அன்புவைத்துக்கிருபாநோக்கஞ்செய்வார் கூலியாளாகியசொக்கநாயகர் எ-று.

பிட்டுநன்றென்றுகூறிப்பிறைமுடியசைப்பார்வேட ... ...*
விட்டமென்றசையிற்சாலவீசனுக்காமிதென்பார் .........*
கொட்டுடன்கவித்தகூடைகொண்டுநின்றாடல்செய்வார்.....*
வெட்டிமண்குவிப்பாரோடிவிரைந்தடிபாய்ந்துமீள்வார் .. *

(இ-ள்.) பிட்டுநன்றாயிருக்கின்றதென்றுசொல்லி மூன்றாம்பி

றையைத்தரித்த சிரசை அசைப்பார் வேடர்குலத்தில்வந்த கண்ணப்பநாயனார்படைத்த மெல்லியமாமிசத்தைக்காட்டிலும் பரமசிவனுக்கு இந்தப்பிட்டுமிகவும் இனிமையுள்ளதாகுமென்பார் மண்வெட்டியுடனே கவித்துக்கொண்டிருக்கின்ற கூடையையுங்கொண்டுகூத்தாடுவார் வெட்டிமண்ணைக்குவிப்பார் சீக்கிரத்திலே காலினாலே தாண்டித்திரும்புவார் என்றவாறு. (௫௮)

பரிவுடைமனத்தினளும்பரமர்தஞ்செய்திகண்டு.... ........*
களையினையடைத்தல்வேண்டுமென்றுதங்கருமங்கூறா ......*
னாருடைவழுதிதூதர்காண்பரோவுறுகண்செய்வா...... . *
ரிருவினையுடையேன்மற்றிங்கென் செய்வேனென நினைந்தாள்

(இ-ள்.) அன்புள்ளமனத்தினையுடைய பிட்டுவாணிச்சியம்மையும் கூலியாளாகவந்த சொக்கநாயகருடைய செய்தியைப்பார்த்து வையையாற்றின்கரையையடைக்கவேண்டுமென்று தன்னுடையகாரியத்தைச்சொல்லமாட்டாதவளாய் வலிமையையுடையபாண்டியராஜனுடையதூதர்கள் காண்பார்களேயானால் துன்பஞ்செய்வார்கள் இருவினைகளையுடைய நான்இதற்குஎன்னசெய்வேனென்று நினைந்தாள் என்றவாறு. (௫௯)

மற்றிவணிலைமைவெள்ளிமன்றுணின்றாடுகின்ற.... ......*
கொற்றவரறிந்துபின்னுங்கூடைமண்கரைமேலேற்றி...... *
புற்றவிக்கரையையன்னையொல்லையிலடைப்பேனின்னே...*
சற்றிதற்கிரங்காதேகுன்றகவுடைமனையிலென்றா ... .......*

(இ-ள்.) இந்தப்பிட்டுவாணிச்சியம்மை நிலைமையைவெள்ளியம்பலத்திலே நிருத்தஞ்செய்கின்ற சொக்கநாயகராகிய கூலிக்காரர் தெரிந்து பின்னும் கூடையிற்கொண்ட மண்ணைக் கரையின்மேலே கொட்டிவிட்டு இந்தக்கரையைஇப்பொழுதே தாயேசீக்கிரத்திலே அடைப்பேன்கொஞ்சமாகிலும் இதற்குஇரங்காமல் உன்னுடையஉரிமையுள்ளவீட்டுக்குப்போவென்றார் என்றவாறு. (௬௰)

நீறணிபுனிதமேனிநின்மலன்விடுப்பவேகித்...... .... . *
தோறிரைமுகத்திதன்றன்மனைப்புகுதுமெல்லை... ...*
கூறருந்தவத்தின்மிக்காள்கோலறையடைக்கவஞ்சி .... ...... *
மாறலைத்திரைக்கைதன்னாற்றொழுதனள்வையைமங்கை... ... *

(இ-ள்.) விபூதிதரித்த பரிசுத்தமாகிய திருமேனியையுடைய சொக்கநாயகனனுப்ப நடந்து தோல்திரைந்த முகத்தையுடைய பிட்டுவாணிச்சியம்மை தன்வீட்டிற்குப்போயினாள் அப்போது சொல்லுதற்கரிய தவத்தினால்மிகுந்த அவளுடையபங்கைச்சுவாமியடைக்க அதற்குப்பயந்து மாறிவருகின்ற அலையாகியகைகளால் வணங்கினாள் வையைநதியாகியமாது என்றவாறு. (௬௧)

சிறந்தமண்கூடைவேணித்திருமுடிக்கோட்டையாக.........*
நிறங்கிளர்கொன்றைநீழனிறைமணலணையதாக ... . . . . *
வுறுந்தொழின்முயற்சியாலேயுயங்கிமெய்யிளைத்தார்போல*
மறைந்துலகெங்குமானவள்ளலார்பள்ளிகொண்டார்.......*

(இ-ள்.) சிறக்கப்பெற்ற மண்ணெடுக்குங்கூடை ஜடாபாரத்தையுடைய திருமுடிக்குந்தலையணையாகவும் நிறத்தையுடைய கொன்றைமரத்தினது நீழலிலே நிறைந்திருக்கின்ற மணலே மெத்தையாகவு மிகுந்த தொழில்செய்யுமுயற்சியாலேவருந்தித் திருமேனியிளைத்தவர்போல மறைந்து உலகெங்குமா யிருக்கின்ற சொக்கநாயகர் துயில்கொண்டாரென்றவாறு. (சஉ)

ஆங்கவர்துயிலுமெல்லையருட்பெருவாழ்வின்மிக்கா...*
ரோங்கியகருமஞ்செய்வாராகியொண்பிரம்புதாங்கிப் *
பாங்குறநின்றவுரைநர்டிப்படர்ந்தகோலமையிலுள்ள *
தீங்குநன்குணர்வீரென்னச்சென்றனர்கரையிலன்னோர்.

(இ-ள்) அவ்விடத்திலே சொக்கநாயகர் நித்திரைசெய்யும் போது கிருபையுள்ள பேரின்பவாழ்விலே மிகுந்த மாணிக்கவாசகரானவர் மிகவுமுயர்ந்தகாரியஞ் செய்பவராய் ஒளியையுடைய பிரம்பை வைத்துக்கொண்டு பக்கத்திலேநின்றவர்களைப்பார்த்து அவரவருக்கு அளந்துக்கொடுத்தப்பங்கிலுள்ள குற்றத்தையும் நன்மையையும் அறியுங்கோளென்றுசொன்னார் அப்படியே அவர்கள்வையை நதிக்கரையின்மேற்போனார்களென்றவாறு. (சங)

நன்குறவடைத்தல்செய்தாரியாவருமெனநயந்து......*
சங்கரநடைக்குநீடுதடங்கரையவர்களெய்தி.......... *
யெங்கணுமுயர்ந்துதாழ்ந்ததிவ்விடமியார்க்குவந்த .... *
பங்கிதுமொழிமினென்னநின்றவரிவைபகர்ந்தார் .... *

(இ-ள்) நன்மைபொருந்த எல்லாரும் அவரவர்பங்கை நன்றாயடைத்தார்களென்று மனமகிழ்ந்துசொக்கநாயகரடைக்கின்ற நெடியகரையிலே அவர்கள்வந்து எவ்விடமும்உயர்ந்திருக்கஇவ்விடமாத்திரம் தாழ்ந்திருக்கின்றது இதுயாவர்க்குவந்த பங்கு சொல்லுங்களென்னஅங்குநின்றவர்கள் இவைசொன்னார்களென்றவாறு. (சச)

பெருவளநீடுகூடற்பிட்டுவிற்றுணவுகொள்வா........*
ளொருமுதுமடந்தையாளாயொருவன்வந்திங்கணெய்தி
யிருநிலமகிழ்த்துகூடையுட்சொரிந்திரங்கிநிற்பன். .. *
சிரமிசையெடுப்பன்மீள்வன்சிந்துவனுகுதல்செய்வான்

(இ-ள்) பெரியவளங்கள் நீடிய மதுரைமாநகரத்திலே பிட்டினை விற்றுச் சீவனஞ்செய்பவளாகிய ஒருகிழவியிருக்கின்றாள் அவளுக்காளாய் ஒருத்தன் இங்கேவந்து பெருமைபொருந்திய மண்ணைவெட்டிக்கூடையிலேசொரிந்து இரங்கிநிற்பான் தலைமேலெடுப்பான் திரும்புவான் கொட்டுவான் சிரிப்பானென்றவாறு. (௬௫)

பாடுவனாடல்செய்வன்கையவோர்கூடைமண்ணை . . ........*
நீடுதிண்கரையிலேறச்சொரிகுவனெடிதுநிற்ப ...........*
னோடுவனோடிமீள்வனொருகைமண்கரையிலேறப்... .... ...*
போடுவன்போகவென்னில்வருவன்வாவென்னிற்போவன்...*

(இ-ள்) பாடுவான் கூத்தாடுவான் மெள்ள ஒரு கூடைமண்ணை நீண்ட உரத்தகரையிலேறக் கொட்டுவான்நெடுநேரநிற்பான் ஓடுவான் ஓடித்திரும்புவான் ஒருகைமண் கரையிற்போகப்போடுவான் போவென்றால் வருவான் வாவென்றாற்போவானென்றவாறு. (௬௬)

பிட்டினைநுகர்வனையாபெரிதுநன்றென்றுகையைக்........*
கொட்டுவன்செய்கைகாணிலரசிளங்குமரனொப்பா . .....*
னெட்டலர்க்கொன்றைநீழனெடுந்துயில்கொள்கின்றானெங் *
கட்டுரைசற்றுங்கேளானவன்றனைக்காண்மினென்றார். ... ...*

(இ-ள்) பிட்டினைச்சாப்பிடுவான் ஐயாமிகவும் நன்றாயிருக்கிறதென்றுகையைக்கொட்டுவான் அவனுடையசெய்கையைப்பார்த்தால் இளமைபொருந்திய ராஜகுமாரன்போலுமிருக்கின்றான் நெடியமலருடைய கொன்றைமரநிழலில நெடும்போது நித்திரைசெய்கிறான் எங்களுடையசொல்லைக்கொஞ்சமுங்கேளான் அவனைக்காண்மினென்றார்களென்றவாறு. (௬௭)

என்றதுமவனையிங்கேகொணர்மினென்றிவருணின்ற ......*
வன்றிறலொருவன்கூறவாறியன்வல்லையோடிச்......... ....*
சென்றதுஞானயோகச்செழுந்துயிலொழிந்துமூன்று ... *
துன்றியபுரங்கள்சென்றார் துண்ணெனவிழித்தெழுந்தார்...*

(இ-ள்) இப்படியென்று சொன்னமாத்திரத்திலே அவனையிங்கேகொண்டுவாருங்களென்று இவருங்குள்ளேயிருந்த வலியசௌரித்தையுடையஒருவன்சொல்ல மிலேச்சதூதரிலொருவன் சீக்கிரத்திலோடினான் அப்போதுசெழுமையுள்ள ஞானயோக நித்திரைநீங்கித் திரிபுரங்களையெரித்த பரமசிவனானவர் திடுக்கென்று விழித்துக்கொண்டாரென்றவாறு. (௬௮)

விழித்தலுங்கடிதுசென்றவாரியன்வெருவநோக்கி.........*
மொழிக்கனல்சிந்தியந்தமுன்னவன்றன்னையெய்த ........*

வழைத்தலும்வருதல்செய்யாதஞ்சிநின்றிரங்கல்கண்டு ......*
பழித்தவர்செங்கைபற்றியீர்த்தனன்பரிவிலாதான் ........*

(இ-ள்) விழித்துக்கொண்டமாத்திரத்திலே சீக்கிரத்திலே ஓடிநின்ற மிலேச்சதூதனானவன் அவனைப் பயப்படப்பார்த்துச் சொல்லாகிய நெருப்பைப்பொழிந்து அந்த எசமானிடத்துக்குவாவென்று அவனையழைத்தமாத்திரத்திலே வாராமல்பயந்துநின்று யிரங்குதல்கண்டு பழித்து அவருடைய சிவந்தகையைப் பிடித்திழுத்தான் பத்தியில்லாதவனென்றவாறு. (௬௯)

ஆங்கவன் கடிதிற்றள்ளியன்னவலையெண்ணிலாத..........*
தீங்கினன்முன்னர்க்கொண்டுசேறலும்வெருட்சியெய்திப்...*
பாங்குநின்றவருணின்றபாவியைப்பாவிநோக்கி.......... *
யீங்கெழுகுருதிசோரவடித்திடிங்கிவனையென்றான்.........*

(இ-ள்) அந்த தூதனானவன் ஆளாகவந்தகடவுளைச் சீக்கிரத்திலே அளவற்ற குற்றங்களையுடையவன்முன்னே தள்ளிக்கொண்டுபோய்ச் சேர்ந்தமாத்திரத்தே பாவியாகிய எசமான்கோபங்கொண்டு பக்கத்திலேயிருந்தவரில் ஒருபாவியைப்பார்த்து இங்கேரத்தமொழுகும்படி இவனையடிப்பாயாகவென்றானென்றவாறு. (௭௰)

கடுத்தசொல்வன்கணாளன்கதத்துடன்மாறுகையி ...... .......*
லெடுத்தனன்முனிவர்விண்ணோரொடுத்தனர்தொழுதுசெங்கை.
யடித்தனனடித்தபோதிலன்புடையரிவைபாகங் .........*
கொடுத்திலர்துணுக்கமெய்தமறைந்தனர்குறைவிலாதார் ..*

(இ-ள்) கடுத்தசொல்லையுடைய கொடியவன் கோபத்துடனேபிரம்பினைக்கையிலேயெடுத்தான் அப்போது முனிவரும் தேவரும்கையெடுத்துக்கூப்பிவணங்கினார்கள் அவனடித்தான் அப்போது அன்புடைய உமாதேவியிருக்கும் வாமபாகத்தைக்கொடாமல் அங்கிருந்தவர்களெல்லாந் திடுக்கிடும்படி மறைத்துவிட்டார் குறைவில்லாத சொக்கநாயகரென்றவாறு. (௭௧)

(வேறு.)

தார்மேனின்றிலங்குபுயவழுதிமேலுந்-தன்மனைமங்கையர்மேலுமமைச்சர்மேலு, மார்மேலுஞ்சென்றுபொருஞ்சேனைமேலு மயல்மேலுமான்மேலுமறம்வோர்மேலுந், தேர்மேல்வெம்பகன்மேலுமதியின்மேலுஞ்சிறந்தவிந்திரன்மேலுந்தேவர்மேலும், பார்மேலுங்கடன்மேலுமாங்கண்மேலும்-பட்டதான்மெய்யிலடிபட்டபோதே........................*

(இ-ள்) அப்போது மாலையணிந்த பிரகாசம்பொருந்திய புயத்தையுடைய பாண்டியராஜன்மேலும், அவன்பத்தினி தன்மேலும்பு

ந்திரிகள்மேலும், எவர்கள்மேலும், போர்யுத்தஞ்செய்யுஞ் சேனைகள்மேலும், பிரமன்மேலும், மகாவிஷ்ணுமேலும், முனிவர்மேலும், தேர்மேலிருக்கின்ற சூரியன்மேலும், சந்திரன்மேலும், சிறப்பினைப்பெற்றுள்ள தேவேந்திரன்மேலும், தேவர்கள்மேலும், பூமியின்மேலும், சமுத்திரத்தின்மேலும், மரங்கள்மேலும்பட்டது பரமசிவன்மேலேபட்ட அடியென்றவாறு. (௫௨)

தந்தமுருவொழித்துபிறிதுருவமெய்திச் - சதுமுகனுஞ்சங்காழிதரித்தமாலு, மந்தமுதறெரிவரிதாய்வெளியேநின்ற-வண்ணலார்வடிவிலடிபட்டபோதி, லெந்தவுலகங்களினுமிருந்துளோர்க-ளெம்முடிவிலடியுறைத்ததென்றுகூற, முந்தியெழும்பன்மொழிகளுகாந்தவெல்லை - மோசரிக்குமெழுகடலின்முழக்கம்போலும்.................................... ..... ...... .... .. *

இ-ள்.) தங்கள் தங்கள் வடிவங்களைவிட்டு வேற்றுருவங்கொண்டு நான்குமுகங்களையுடைய பிரமதேவனும் சங்குசக்கரந்தரித்த மகாவிஷ்ணுவும்-தேடி அந்தமும்ஆதியுந்தெரிதற்கரிதாகி இப்போது வெளியேநின்ற சொக்கநாயகருடைய திருமேனியில் அடிபட்டபொழுதிலே எந்தலோகத்திலிருந்துவந்தவர்களும் எங்கள்தேகத்தில் அடிபட்டதென்றுசொல்ல முன்னதாக எழும்புகின்ற அந்தச்சொற்கள் உகமுடிவுகாலத்திலே சத்திக்கின்ற சத்த சமுத்திரங்களுடைய முழக்கம்போலானதென்றவாறு. (௫௩)

மாயையெனுங்கரும்பெரியபுனன்மேன்மொக்குள் - வண்ணமெனுமெண்ணிலாவண்டத்துள்ளு, மேயவகையெண்பத்து நான்குநூறாயிரமானபலயோனியிவற்றினுள்ளு, மாயவுயிர்க்குயிராகிநிற்குந்தன்மை - யவனிதலத்தஞ்ஞானமறிந்துபாதச், சேயமலர்வழுத்துதற்கோர்கூலியாளாய்ச்- சென்றுமுடிமண்சுமந்தார்தில்லைநாதர் ... ........... ... ... ......... ... ...*

(இ-ள்.) மாயையென்றுசொல்லுகின்ற கருமையுள்ள பெரியநீரின்மேலே குமிழிவடிவென்றுசொல்லும் அளவில்லாத அண்டங்களுக்குள்ளே பொருந்தியிருக்கின்ற எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதமென்னும் இவைகளினுள்ளிருக்கின்ற உயிருக்குயிராகி நிற்குந் தன்மையைப்பூவுலகத்திலே அஞ்ஞானிகளறிந்துதம்முடைய பாதமாகிய செந்தாமரைமலரை வணங்குதற்கு ஒரு கூலியாளாகிப்போய்ச் சிரசிலேமண்சுமந்தார் தில்லைமாநகரத்திலே நிருத்தஞ்செய்கின்ற சபாபதிநாயகரென்றவாறு. (௫௪)

(வேறு.)

மையனையுந்திருமிடற்றார்மெய்யிலடிவாதலு... .......*

ஐயருடம்பினும்வந்துபடுதலுமேயவர்வெய்தி .... ... *

புய்யவெனைப்பாட்கொள்ளவுகந்தொருவர்க்காளாகி........
மெய்யொழுந்தருளினரோ வென்னென்றுமிகநொந்து

(இ-ள்.) மேகத்தைபொத்த அழகியகண்டத்தையுடைய சொக்கநாயகர் திருமேனியிலேபட்ட அடியானது திருவாதவூரிலேஅவதாரஞ்செய்தமாணிக்கவாசருடைய திருமேனியிலும்வந்து பட்டமாத்திரத்திலே அவர் ஆயாசத்தையடைந்து நான்பிழைக்கும்படியென்னை அடிமைகொண்டருள மனமகிழ்ந்து சொக்கநாயகர்ஒருவருக்குக் கூலியாளாகி எழுந்தருளினரோவென்று மிகவும் தமக்குள்ளே வருத்தப்பட்டென்றவாறு. (௫௫)

தம்பெருமையறியாததம்மிறைவர் தமக்கிரங்கி......
கம்பிதமுங்கண்ணீரும்வரக்கவற்சியுறும்போதில்......
வெம்பிறவிதொலைத்தார்முன்றூரியர்கள்விரைந்தோடி
யும்பர்பிரான்றிருவிளையாட்டெல்லாமங்குரைத்தார்கள்

(இ-ள்.) தம்முடையபெருமை யிவ்வளவென்று அறியாத தமது கடவுளாகிய சொக்கநாயகருக்கு இரக்கமுற்று நடுக்கமும் கண்ணீரும் உண்டாகக்கவலையடைந்தபொழுதிலே வெய்யபிறவியைத்தொலைத்தமாணிக்கவாசகர்முன்னே தூதர்கள் சீக்கிரத்திலோடிவந்து தேவர்களுக் கிறைவராகிய கடவுளுடைய திருவிளையாட்டெல்லாம் சொன்னாகளென்றவாறு. (௫௬)

வேட்டிருகும்பெருங்காதல் வித்தகரித்தன்மையெலாம்......
கேட்டுமனந்தளர்ந்துமிகக்கிளர்ந்துவிழிப்புனல்பொங்க
வாட்டிகழுஞ்சடையண்ணன் மண்சுமந்தவிடங்கொடுபோய்க்
காட்டுமெனமொழிந்தவரோடவ்விடநேர்கடிதெய்தி......

(இ-ள்.) மிகுந்தஆசையால்விரும்புகின்றமாணிக்கவாசகர் இந்தச்செய்திகளனைத்தையும் கேள்விப்பட்டு மனந்தளர்ந்து மிகவும் கண்களிலே நீர்பெருகச்சிவந்தவொளியினாற் பிரகாசிக்கின்ற ஜடாபாரத்தையுடைய சொக்கநாயகர் மண்சுமந்த இடத்தைக்கொண்டு போய்க்காண்பியுங்களென்றுசொல்லி அவர்களுடனேஅவ்விடத்திலே நேராகச்சீக்கிரத்திற்போயென்றவாறு. (௫௭)

அழுங்கியரும்பெருநரகிலடியேனும்வீழாம..............
லெழுந்தருளும்பெரியோனே யெங்குளாயென்றென்று
தொழுங்கரமுங்கண்ணீருந்துளங்கியமெய்ப்புளகமுமாய்
விழுந்துபுரண்டிவ்வாறுபுலம்பினர்மெய்யன்பாளர்......

(இ-ள்.) அடியேன்வருத்தப்பட்டுக் கொடுமையையுடையபெரியநரகத்தில்வீழாமல் எழுந்தருளியகடவுளே நீ யெவ்விடத்திலிருக்கின்றாய் எவ்விடத்திலிருக்கின்றாயென்று தொழுகின்றகைகளும்

கண்ணீரும் நடுங்குகின்ற மெய்யிற் புளகமுமுடையவராய்க் கீழே விழுந்து புரண்டு இந்தப்பிரகாரம்புலம்பினார் மெய்யன்பையுடைய மாணிக்கவாசகரென்றவாறு. (௫௮)

நீறுபடும்பொன்மேனிநின்மலனேநெடுங்கங்கை......*
யாறுபடுஞ்சடைமுடியாயடியவர்கட்கெளியானே . *
மாறுபடும்புரமெரித்தாய்மாறுபடும்போதுடலிற் .. *
கூறுபடுஞ்சிவஞானக்கொம்பினுளங்குழையாதோ ...*

(இ-ள்.) திருநீற்றையணிந்த பொன்போன்ற திருமேனியையுடைய நின்மலனே நெடிய கங்காநதியைத்தரித்த ஜடாமுடியையுடையவனே அடியவர்கட்கெளியவனே மாறுபட்டதிரிபுரத்தையெரித்தவனே மாறானது படும்போது உன்னுடைய இடப்பாகத்திலிருக்கின்ற சிவஞானமே வடிவாகிய உமாதேவியினது மனங்குழையாதோவென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௯)

கொங்கையாண்மணிமார்பிற்குழியிடுமெவ்வீறுடைய ...*
மங்கையாள்பெருமானைமண்சுமக்கநினைத்தாளோ *
கங்கையாலலைக்கரத்தாற்கரைத்திலளோபுள்ளுருவாம் *
பங்கையாசனனறியாப்பணிமுடியென்றறியாளோ *

(இ-ள்.) ஸ்தனபாரங்களாலே அழகியமார்பிலே தழும்புசெய்த வீறுப்பையுடைய காமாக்ஷியானவள் கடவுளை மண்சுமக்கும்படி நினைத்தாளோ கங்கையானவள் அலையாகிய கையினாலே அந்தமண்ணைக் கரைக்கவில்லையோ அன்னவடிவாகிய தாமரைமலரிலிருக்கின்றபிரமனாலு மறியப்படாத சர்ப்பத்தையணிந்த சிரசென்றறியாளோவென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௬௰)

பிரமனுடன்றிருமாலும்பிறப்பகலப்பல்காலும் ......*
பரிவினுடன்றருமலரோபத்தரிடும்பச்சிலையோ... ...*
புரிதருசெஞ்சடையோநற்புதுமதியோவாயிரவாய்...*
வரியரவின்பலபடமோமண்சுமக்குஞ்சும்மாடு........*

(இ-ள்.) பிரமதேவனுடனே மகாவிஷ்ணுவுந் தம்முடைய பிறவி நீங்கப்பலதரமும் அன்பினுடனேசாத்துகின்றமலரோ அல்லது அடியவர்கள்சாத்துகின்றபச்சிலையோ முறுக்கையுடைய சிவந்தஜடையோ நல்லபுதுமையையுடையமதியோ ஆயிரம்வாயுள்ள நெடியசர்ப்பத்தினுடைய அனேகம்படங்களோ நீயெடுத்தமண்ணைச்சுமக்குஞ்சும்மாடென்றவாறு. (௬௧)

கலையறியும்புகழ்வையக்கனாதிருவம்பலமாக ..... ...*
வலையெறியும்புனலோலைசயந்தரதுந்துமியாகத்... ...*
தலைவண்டங்கண்டார்களரவமெழுந்தவமுனியுங்.......*
கொலைதவிருப்புலியென்னுங்குலமுனியுமானாரோ...*

(இ-ள்) தமிழ்ப்பாடலின் தன்மையையறிந்த கீர்த்தியையுடைய வையைநதிக்கரையே அழகிய வெள்ளியம்பலமாக அலையை வீசுகின்ற நீரினுடையசத்தமே தேவதுந்துமியாக கடவுளுடைய நிருத்தத்தைக்கண்டவர்கள் பாம்புவடிவையுடைய தவமுனியாகிய பதஞ்சலியும் கொலைதவிர்ந்த புலியென்றுசொல்லப்படுகின்ற உயர்ந்த வியாக்கிரபாதருமாளுமோ வென்றவாறு. (௬௨)

மீனேறுங்கொடித்தென்னன் விழிக்கேறவிளைதுரகந் *
தானேறுவதுகண்டிதருங்கலைபொற்செண்டேறத்... *
தேனேறுமலர்க்கொன்றைத்திருமுடிமேன்மண்ணேற.
யானேறுஞ்சிவபதமுமெனக்கேறவின்றுது . ..... *

(இ-ள்) மீனேறியகொடியையுடைய பாண்டியனது கண்ணுக்கு நேராகவிளைந்துநடக்கின்ற குதிரையேறுவதுகண்டு அவன்கொடுக்கும் பீதாம்பரமானது குதிரைச்சவுக்கிலேறத் தேனேறியமலர்ந்த கொன்றைமாலிகையைத்தரித்த அழகிய சிரசின்மேல் மண்கூடையேறவிருந்தபடியால யானேறுகின்ற சிவபதமும் எனக்கேற இனிமை யில்லாததாயிருந்ததென்றூர் மாணிக்கவாசகரென்றவாறு. (௬௩)

பொன்னுலகத்துள்ளோரும்புரந்தரனுந்திருமாலும்... *
மன்னுமறைசதுரியோனும்வழியடிமைத்தொழில்செய்ய
வன்னைதனக்காளாகியணிவையையடைத்தடியுண்......*
டென்னையருட்பணிகொள்ளவிசைந்தனையோவிறையோனே.

(இ-ள்.) தெய்வலோகத்திலுள்ள தேவர்களும்-தேவேந்திரனும்-மகாவிஷ்ணுவும் நிலைபெற்றதவத்திற்குரிய பிரமதேவனும் வழிவழியாக அடிமைத்தொழில்செய்ய பிட்டுவாணிச்சி யம்மைக்குக் கூலியாளாய் அழகிய வையைநதியை அடைத்துஅடிபட்டு எனைக்கிருடையையுடைய பணிகொள்ளச்சம்மதித்தனையே யிறையவனேயென்றூர் மாணிக்கவாசகரென்றவாறு. (௬௪)

கட்டுமரைத்துணிச்சிரைக்கச்சையுமத்திருத்தோளிற்...*
சொட்டுமுடித்தலைமீதுகவித்தவொருகூடையுமாய்ப்..*
பிட்டுநற்றவமுடையாள்பின்புவருந்திருக்கோல... *
மிட்டமுறத்தொழும்படிநான்கண்டிலேனிறையோனே

(இ-ள்.) அரையிற்கட்டுகின்ற துண்டாய்க்கிழித்த துணியுங்கச்சையும் அந்தத்திருத்தோளிலே மண்வெட்டியும் சிரசின்மீதிலே கவித்துக்கொள்ளுகின்ற ஒருகூடையுமாய்ப் பிட்டினைத்தருகின்ற நல்லதவமுடைய அம்மையினதுபின்னேவருகின்ற அழகியகோலத்தை அன்புபொருந்தத் தொழும்படி நான்காணவில்லை யிறைவனேயென்றூர் மாணிக்கவாசகரென்றவாறு. (௬௫)

தாரூருஞ்சடைமுடியாய்தவம்பெருகமுயன்றவர்க....*
ணீரூருப்புகழ்வையைநெடுங்கரைமேனின்றோ .....*
சீரூருங்கனகமுடித்தென்னவனோமதுரையெனும் ...*
பேரூரிலிருப்பவரோபிட்டமுதிட்டருள்வாளோ..... *

(இ-ள்) கொன்றைமாலிகையைத் தரித்த ஜடாமுடியை யுடைய சொக்கநாயகரே நீர்கூலியாளாய்வந்த திருவுருவைக்காண மிகவுந்த வத்தைமுயன்று செய்தவர்கள் வெள்ளமோங்கின்ற கீர்த்திமிகுந்த வையைநதிக்கரையின்மேல் நின்றவர்களோ சிறப்புமிகுந்தபொற்கி ரீடத்தையுடைய பாண்டியராஜனோ பெரியமதுரைமாநகரிலிருப்ப வரோ பிட்டமுதிட்டருளிய செம்மனச் செலவியோ வென்றூர்மா ணிக்கவாசகமொன்றவாறு. (௬௬)

பொன்மௌலித்தலைமீதுபுண்ணியர்மண்சுமந்தேறுங்*
கொன்மலியுங்கோலறையுங்குளிர்வையைப்பேராறுங்*
கன்மமெனும்பகைபோகக்கண்ணுதல்வெம்பரியேறந்.
தென்மதுராமூதூருமல்லவோசிவலோகம் ......... *

(இ-ள்) பொன்னினாற்செய்தகிரீடத்தையணிந்தசிரசின்மேலே பு ண்ணியராகியசொக்கநாயகர் மண்ணைச்சுமந்துகொண் டேறுகின்ற பெருமைமிகுந்த கோலினாலளந்த பங்குநிலமும்குளிர்ச்சி பொரு ந்திய வையையென்னும்பெயரையுடையநதியும் கன்மமலமென்னு ம்பகையானதுஒழிப்போகப்பரமசிவன்வெவ்வியகுதிரையி லேறுகி ன்றஅழகியமதுராமாநகரமும் அல்லவோ சிவலோகம் எ-று. (௬௭)

இன்னவகையன்புடையாரிரங்கினராயிடைவையைத்...*
துன்னுதிரைப்பேராறுந்தொலையவடிந்ததுபின்னர்த்.*
தென்னவனுஞ்சிவன்செயலாமெனத்தெளிந்துவாதவூர்*
மன்னவர்தம்பால்வந்துவணங்கியிதுகூறுவான்...... *

(இ-ள்) அவ்விடத்திலே இந்தப்பிரகாரம் அன்பையுடைய மாணி க்கவாசகர்இரக்கமுற்றிருந்தனர்நெருங்கியஅலைகளையுடைய பெரிய வையைநதியும் சீக்கிரத்தில் வடிந்தது பின்பு பாண்டியராஜனும்இ வையெல்லாம்சிவன்செயலாமென்றுதெளிந்து திருவாதவூரர்க்கரச ராகிய மாணிக்கவாசகரிடத்தில்வந்துவணக்கஞ்செய்து'இதனைச்சொ ல்வாரெனன்றவகறு. (௬௮)

அந்தணர்தம்பதியினிழிந்தருள்புனைமாத்தியர்குலத்து *
வந்தருளித்தமியேற்குமந்திரியாய்மகிழ்வெய்தி... ..*
யெந்தைவயப்பரியேறல்காட்டியெனக்கொழியாத .. *
பந்தமறத்திருவுள்ளம்பற்றினைநற்றவத்தோனே......*

(இ-ள்.) தேவர்கள்வசிக்கின்ற பொன்னகரத்தினின்றிழிந்து இருளையைத்தரித்தக்ஷத்திரியர்குலத்திலேவந்து திருவவதாரஞ்செய்து தனியேனாகிய அடியேனுக்குமந்திரியாகி மனமகிழ்ச்சியடைந்துள மதுபிரானாகியசொக்கநாயகர்வெற்றியையுடைய குதிரையேறிவருவதையெனக்குக்காட்டி எப்போதும் நீங்காதபாசத்தளையறும்படி திருவுளம்பற்றினீர் நல்லதவத்தையுடைய மாணிக்கவாசகரேயென்றான்பாண்டியராஜன் எ-று. (௬௯)

கருமாளத்திருமேனிகாட்டினனென்றுணராமற் ......*
றிருமாலும்பரவரியான்றேவருடன்பரியேறி ........*
வருமாயச்சூழலினுலழுக்காடையண்டர்தொழும்......*
பெருமானுக்களித்தேனென்பிழைசெய்தேன் பெரியோனே.

(இ-ள்) என்னுடைய பிறவிமாளத் திருமேனிகொண்டு காண்பித்தாரென்றறிந்து கொள்ளாமல் மகாவிஷ்ணுவாலும் வணங்குதற்கரிய சொக்கநாயகர்தேவர்களுடனே குதிரையேறிக்கொண்டுவந்தஅந்தமாயையினுடையசூழ்ச்சியினாலே அழுக்கு வஸ்திரத்தைத்தேவர்பணிகின்றகடவுளுக்குக்கொடுத்தேன் என்ன பிழையினைச்செய்தேன் பெரியோனேயென்றார் பாண்டியராஜன் என்றவாறு. (௭௰)

அப்பணிசெஞ்சடையானையரும்பரிமேலாளாக்கு.... *
மெய்ப்பொருளென்றுணராமல்வெய்யவினைப்பொருள்
வேண்டிச், செப்பருமித்தறுகண்மைசெய்வித்தேன்சிறு
மையுளேன், னெப்பிழையும்பொறுத்தருள்வா யானரகிற்
புகுதாமல் ........................................*

(இ ள்.) கங்கையைத்தரித்தசிவந்த சடையையுடைய கடவுளை அருமையையுடைய குதிரைக்காரருக்கும் உண்மைப்பொருளென்று தெரிந்து கொள்ளாமல தீவினைக்குக்காரணமாகிய திரவியத்தை விரும்பிச்சொல்லுதற்கரியகொடுமை செய்வித்தேன் சிறுமையுள்ளவனாகிய என்னுடைய எந்தப்பிழையும் பொறுத்தருள்வாய் அடியேன்நரகத்திற்புகாமலென்றவாறு. (௭௧)

தூநாகமணிந்தபிரான்றுங்கமிகும்பரியேறிப்.......... *
பூநாறுஞ்சடைமேன்மண்சுமந்தபுகழ்போதாதோ... *
யாருனருநின்பணியேசெப்தொழுகவிவ்வுலகந்........ *
தானுளம்வண்டுமெனவென்றுரைத்தான்றமிழ்மாறன்.. *

(இ-ள்) பரிசுத்தம்பொருந்திய சர்ப்பத்தையணிந்த சொக்கநாயகரானவர் உயர்வுமிகுந்த குதிரையின்மேலேறிப் பூமணம் வசிக்கிற ஜடாபாரத்தின்மேல் மண்சுமந்தகீர்த்திப் போதாதோ நான் நான்

தோறும்உம்முடைய பணிவிடையேசெய்துவர நீர்இனி இவ்வுலகத்தை யாளவேண்டுமென்றுவேண்டிகொண்டான் தமிழை வளர்க்கின்ற பாண்டியராஜனென்றவாறு. (எஉ)

(வேறு.)

வன்திறன்மன்னனிவ்வாறுரைத்தலும்வாதவூரர்..... *
தென்திசைபுரக்குநீதித்தென்னவன்றன்னைநோக்கிப் *
பின்திகழ்சடையோன்மன்னும்பெருந்துறைதகரிலேக *
வின்றெனைவிடுப்பதேமத்திவ்வுலகளிப்பதென்றார் .... *

(இ-ள்.) வலியசௌரியத்தையுடையபாண்டியராஜன் இந்தப்பிரகாரஞ்சொன்னமாத்திரத்தில் திருவாதவூரர் தென்திசையை ரக்ஷிக்கின்ற நீதியையுடைய அவ்வரசனைப்பார்த்துப் பின்னேபிரகாசிக்கின்ற சடையையுடைய கடவுள் நிலைபெற்றிருக்கின்ற திருப்பெருந்துறைக்குப் போகும்படி இன்று என்னையனுப்புவதே எனக்குஇந்த வுலகத்தை யாளும்படிகக்குக் கொடுப்பதென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (எ௩)

தென்புலத்தலைவன்றானுஞ்சிந்தையினேர்ந்துமுன்னே *
னன்பருககரசர்வாழ்விலாசையிங்குளதோவென்று *
மென்பதத்திறைஞ்சியையாவேண்டியசெய்கவென்று *
தன்புகழ்க்கூடன்மூதூர்புகுந்தனன்றானைசூழ... *

(இ-ள்) தென்திசைமன்னனாகிய பாண்டியனும் அப்படி சொல்லக்கேட்டு மனத்திலே நேர்ந்துகொண்டுமுன்னேயாகியசிவனுடைய அடியாருக்கு ராஜசம்பத்திலே ஆசையுண்டோவென்று சொல்லி மாணிக்கவாசகருடைய மிருதுவாகியபாதத்திலேவணங்கிஐயாமனதுக்கு வேண்டியபடி செய்யக்கடவீரென்று செலவுகொடுத்துத்தன்னுடைய கீர்த்திமிகுந்த மதுராபுரியிற் புகுந்தான் சேனைகள்சூழ என்றவாறு. (எச)

சற்றவத்தொழில்செய்யாததானைமன்போனபின்ன... *
நற்றவர்க்கற்றசோதியருட்பெறுவாழ்வுவேண்டிக் ... *
கொற்றவர்க்குற்றகோலங்குறையெனநீத்துமேலா ... *
நற்றவக்கோலங்கொண்டார்நம்பருக்கன்புமிக்கார்.... *

(இ-ள்.) சற்றாகிலும் அவத்தொழிலைச்செய்யாதசேனைகளையுடைய பாண்டியராஜன்போனபின்பு அற்றவர்க்கற்ற கடவுளுடையபேரின்பவாழ்வைவிரும்பி அவ்வரசனுக்காகக்கொண்டிருந்த வேடத்தைக் குறையென்றுநீக்கி மேலாகிய நல்லதவவேடங்கொண்டார்பரமசிவனுக்கன்புமிகுந்த மாணிக்கவாசகரென்றவாறு. (எ௫)

அத்தனையாலவாயிலண்ணலைவணங்கியந்த....... .......*
லைத்திகழ்சோலைநீடுமதுரையம்பதியைநீங்கி ....     ..*
வித்தகர்தம்மையாண்டமேனிகண்டிறைஞ்சவேண்டும்.*
பித்தினர்கடிதுசென்றார்பெருந்துறைபொருந்தவெண்ண

(இ-ள்.) அத்தனாய் மதுரையிலிருக்குஞ் சொக்கநாயகனைவணங்கி மேகங்கள்தவழ்கின்ற பிரகாசமிருந்த சோலைநீடிய அந்தமதுரை மாநகரைவிட்டுக் கடவுள்தம்மையாண்ட திருமேனியைக்கண்டுவணங்கவேண்டுமென்று திருப்பெருந்துறைக்குப்போகநினைத்துப் பித்தங்கொண்டவராய்ச் சீக்கிரத்திற்போனார் மாணிக்கவாசகர் -

மிடைகெடவைத்தபாதவித்தகர்துறைநோக்கி .. .. ..*
நடையிடுமெலிவிலதன்னினன்மனைவிளைவுங்காற்றுந்...*
தடைபடுகன்றைநாடுங்கபிலையுந்ததும்பிநின்று ... ...*
மடையிணையுடைக்குநீருமாயினர்வாதவூரர்..............*

(இ-ள்.) அஞ்ஞானம்நீங்கத் திருவடிவைத்த கடவுளுடைய திருப்பெருந்துறையைப்பார்த்து நடைகொள்ளுஞ்சமயத்தில் மனோவேகமும் வாயுவேகமும் தடைபட்டிருக்கின்ற இளங்கன்றை நாடிப்போகுங் கபிலைப்பசுவும் நிறைந்துநின்று மடையையுடைக்கும் நீரும்போலாயினார் திருவாதவூரரென்றவாறு. (எஎ)

கண்ணுழைபரதகானும்பதிகளுங்கடிதுநீங்கி ........*
யெண்ணறுமுனிவர்மேவுமெழிற்பெருந்துறையிலெய்திப்
புண்ணியவினைத்தர்சூழமுன்புபோ விருந்தபோதில் *
விண்ணவரதிபன்பொற்றாள்வீழ்ந்திதுதாழ்ந்துசொல்வார்.

(இ-ள்.) கண்களாலும் நுழையப்படாதகாடுகளும் ஊர்களுஞ்சீக்கிரத்திலே கடந்துபோய் அளவற்றமுனிவர்கள் வசிக்கின்ற அழகுநிறைந்த திருப்பெருந்துறைக்குப்போய்ப் புண்ணியத்தையுடைய முனிவர்கள்சூழ முன்புபோலிருந்தபோதில் தேவர்களுக்கதிபனாகிய பரமசிவனுடைய திருவடியின்மேல்வீழ்ந்து வணங்கியிதைச்சொல்வார் மாணிக்கவாசகரென்றவாறு. (எஅ)

தீண்டுதற்கரியமார்பிற்சேயினமுதனைத்திருவு ... .....*
மீண்டொருமாற்றிருவுமெய்தியதழும்புபோற்றி *
வேண்டியவடிவமாகிவெம்பரிமேற்கொண்டெம்மை *
யாண்டருள்செய்யவந்தவண்ணலேபோற்றிபோற்றி *

(இ-ள்.) மூன்றுலே சத்தபுரியிலும் விசேடமாகிய காஞ்சிமாநகரத்தில் கம்பையாற்றிற் காமாக்ஷி பூசைசெய்யும்போது அந்தப்பூசையின் உறுதியைச்சோதிக்க அந்நதியிலே சர்வதீர்த்தங்களையும்வரச்செய்து அது ஆகாசமளவுவருகிறபோது சிவபூசைக்கு விரோ

தமாய்வருகிறதென்றுபயந்து தழுவிக்கொள்ளுதலால் ஒருவராலு ந்தேடுதற்கரிய மார்பிலே அந்த காமாக்ஷியினுடையதனபாரங்களாலும் இங்கே ஒருமாற்றினாலும் அடைந்த தழும்பையுடையவனேபோற்றி வேண்டியவடிவங்கொள்பவனாகிய வெவ்விய குதிரையின்மேலேறிக்கொண்டு எங்களை அடிமைகொண்டு அருள் செய்யவந்த ஐயனேபோற்றிபோற்றியென்றார்மாணிக்கவாசகரென்றவாறு.(எகூ)

அண்டருக்கரியாய்போற்றியடியவர்க்கெளியாய் போற்றி
வண்டமிழ்பாண்டிநாடுவாழமண் சுமந்தாய்போற்றி...*
கண்டனக்கினியமேனிகாட்டியென் சென்னிமீது .. ...*
முண்டகத்திருத்தாள்வைத்தமுதனேபோற்றிபோற்றி*

(இ-ள்) தேவர்களுக்கரியவனேபோற்றி அடியவர்களுக்கெளியவனேபோற்றி வளத்தையுடைய தமிழிருந்த பாண்டியதேசம்வாழும்படி மண்சுமந்தவனேபோற்றி கண்ணுக்கு இனிய திருவுருவைக்காட்டி என்சிரசின்மேலே தாமரைமலர்போன்ற திருவடிகளைவைத்தமுதனேபோற்றிபோற்றியென்றார்மாணிக்கவாசகர்-எ-று. (அய)

போற்றியென்றின்னவாறுபுகன்றவர்முடிமேற்செங்கை
யேற்றியங்கினியகூறியெழுகெனவெழுந்தபின்னர் .. *
நீற்றறையும்புனைந்துஞானநிறையருட்பார்வைநல்கி *
வீற்றிருந்தன்பர்கூட்டம்விளங்கினர்களங்கமில்லார் *

(இ-ள்.) போற்றியென்று இந்தப்பிரகாரந்துதித்த மாணிக்கவாசகரதுசிரசின்மேலேசிவந்த கையைவைத்துஇன்சொற்சொல்லி எழுந்திருவென்றுசொல்ல எழுந்தபின்புவிபூதியுந்தரித்துஅறிவுநிறைந்தகிருபாநோக்கஞ்செய்துவீற்றிருந்துஅன்பையுடையஅடியார்கள்கூட்டத்தில்விளங்கியிருந்தார்களங்கரகிதராகிய கடவுள்.எ-று. (அக)

அந்தமுமுதலுமில்லாவடியவர்தம்மைநாடி .... .. ...*
வந்துளகருமமெல்லாமுடித்தனமகிழ்ச்சிகூர ........*
நந்திகழ்வடிவங்காணவேண்டுநற்கயிலையுள்ளார் . *
சிந்தனைசெய்தார்வல்லேயாண்டுநாஞ்சேறல்வேண்டும்*

(இ-ள்) முடிவுமுதலுமில்லாத அடியவர்களைக்குறித்து வந்தகாரியமெல்லாம் முடித்தனம் மனமகிழ்ச்சியுண்டாக நம்முடைய ஒளியையுடைய திருவுருவைத்தெரிசிக்கவேண்டுமென்று நல்லகயிலாசகிரியிலிருக்கின்றவர்கள் நினைவுகொண்டார்கள்சீக்கிரத்தில் அவ்விடத்திலேநாம்போகவேண்டுமென்றார் பரமசிவனென்றவாறு. (அஉ)

வாழ்ந்திடுமென்பின்யாமுமேகுவமென்னவந்து ......*
சூழ்ந்தருளுருவாமன்பர்தோத்திரம்பலவுஞ்சொல்லித்*

தாழ்ந்தெதிரிறைஞ்சிலையயாதரிப்பரிதெனமண்மேல்வீ
ழ்ந்தயர்ந்தழுதாரெம்மைவிடுதியோவென்றுநொந்தார்.

(இ-ள்.) நீங்களிங்கே இன்பமுடனே வாழ்ந்துகொண் டிருங்கோ
ள் நாம்செல்லுவோமென்று சொல்லவே அப்போது வந்து சுற்றிக்
கொண்டு கிருபாவடிவத்தையுடைய அடியவர்கள் அனேகந்துதிகள்
சொல்லி வணங்கி ஐயனே இனியாங்கள்தரிக்கிறது அருமையென்று
பூமியில்வீழ்ந்து ஆயாசங்கொண்டு அழுதனர் எங்களை விட்டுவிடுகி
ன்றையோவென்று நொந்தார்கள் என்றவாறு. (அ௩)

பரிந்தழுமடியார்தம்மேற்பரமனுமன்புபூண்டு ... *
வருந்துவதொழிமினிந்தமணமலிகுருந்தநீழற் ... *
பொருந்தியதெய்வபீடம்பொலிவெய்துறயிற்றிடமே *
திருந்தியமறையுந்தேடுநம்பதமாகச்செய்து ......... *

(இ-ள்.) அன்புகொண்டு அழுகின்ற அடியார்மேற் பரமசிவனும்
அன்புவைத்துவருத்தப்படுவதைநீங்குங்கள் இந்தவாசநிறைந்தகுரு
ந்தநிழலிலே பொருந்திய தெய்வபீடமொன்று பிரகாசத்துடனே
செய்து அதன்மேல்திருத்தமாகிய வேதங்களும் தேடுகின்ற நம்மு
டைய திருவடிகளைச்செய் தென்றவாறு. (அச)

தாங்கருமரந்தைநீங்கியாமெனுந்தன்மைகண்டு ...... *
நீங்கருமன்பினாலேநித்தலுநயந்திறைஞ்சி............ *
ஈங்கருண்மனத்தரெல்லாமமர்ந்திருமொருநாளிந்தத் *
தீங்ககல்பொய்கையூடேசெழுந்தழல்வந்துதோன்றும் *

(இ-ள்.) தாங்குதற்கரியதுன்பம்நீங்கி நாமென்கிற தன்மையைய
றிந்து நீங்குதற்கரிய அன்பினாலே நாள்தோறும் மகிழ்ந்து வணங்கி
இவ்விடத்திலே கிருபையிருந்த மனத்தையுடைய அடியார்களெல்
லாம் விரும்பியிருங்கோள் அப்படியிருக்குநாளில் ஒருநாள் இந்தத்
தீங்கில்லாதபொய்கையினிடத்திலே செழுமையுள்ள அக்கினிவந்து
தோன்றுமென்றவாறு. (அரு)

எழுந்தழல்விளைந்தபோதில்யாவருந்தடத்தினூடு ...*
விழுந்துபின்னெய்திநம்பால்விடுகெநுங்கவற்சியென்று
தொழுந்தவமிபற்றுமன்பர்சூழ்ந்துபின்செல்லமெல்லச்
செழுந்திகழ்கயிலைநாடிச்சென்றனர்தில்லைநாதர்..... *

(இ-ள்) அக்கினியெழுந்து விளைந்தமாத்திரத்திலே எல்லாருந்த
டாகத்தினிடத்திலே விழுந்து பின்புநம்மிடத்திலே வந்து உங்களு
டையகவலையைவிடுங்கோளென்று வணங்கத்தக்க தவத்தைச்செய்யு
ம்அன்பர்கள் சூழ்ந்துகொண்டு பின்னேவர மெள்ள செழுமையுள்

ளபிரகாசத்தையுடைய கயிலாசத்தைநாடி எழுந்தருளினார் சிதம்பர த்திலிருக்கின்ற சபாநாயக ரென்றவாறு. (அஎ)

நீங்கருமன்பரெல்லா நில்லுமினென்றுகூற ........ .. *
வாங்கவரிறைஞ்சியெந்நாளையநிற்காண்பதென்று *
தாங்கருமயக்கமெய்தித்தாயகன்மகவுபோலப் .......*
பூங்கழல்வணங்கிநின்றார்போயினர்மாயைவல்லார் *

(இ-ள்.) நீங்குதற்கரிய அன்பர்களெவரும் நில்லுங்கோ ளென்று சொல்ல அங்கே அவர்கள் வணங்கி இனி எந்த நாளிலே ஐயரே உம்மை க்காண்பதென்று தாங்குதற்கரிய மயக்கமடைந்து தாயை நீங்கியபி ள்ளைகள்போல் தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி நின்றார் கள் மாயையிலேயல்லபரமசிவனெழுந்தருளினாரென்றவாறு. (அஅ)

இங்கிவர்நின்றபின்னுமின்னருள்வாதவூரர் ............*
தங்கிளைதாழவந்ததலைவர்பின்சென்றபோதிற் ......*
பொங்கிளமுலையாள்பாகர்புரிந்தவர்வரவுகாணூ - *
வங்கொருகொன்றைநீழலிருந்தனராரத்தைநீங்கி - *

(இ-ள்) இங்கே அடியார்கள் நின்றபின்னும் இனிய அருளையுடை ய திருவாதவூரரானவர் தமது சுத்தமெல்லாம் வாழும்படி குருமூர் த்தமாயெழுந்தருளியகடவுளுக்குப் பின்னேபோனபோது பொலி வுபெற்ற இளமையுள்ளஸ்தனங்களையுடையஉமாதேவியினுடையபா கராகிய அக்கடவுள் அன்புவைத்து இவர் வருதலைப் பார்த்து அங்கே யொரு கொன்றைவிருக்ஷநிழலிலேயிருந்தார் துன்பநீங்கி. எ-று.

தன்புடைக்கவடுகொண்டோர்தடங்கிரிநிரதமாலைப் *
பொன்படத்தனையகொன்றைப் பொலிவுறவிருந்தபோதின்
மென்பதத்திறைஞ்சிகண்ணீர்விழவிழத்தொழுது நிற்கு
மன்பரைப்பரிவாலையரருகுவைத்தருளிச்செய்தார் *

(இ-ள்) தன்பக்கத்திலே கிளைகளைக்கொண்டு ஒருமலை வரிசையா கியபொன்மாலையைக்கொண்டிருப்பதையொத்த பூங்கொத்துகளு டனேகூடியகொன்றைநிழலிலே பொலிவுபொருந்தவிருந்த போ தில் மெல்லியதிருவடிகளிலேவணங்கிக் கண்ணீர்விழவிழத் தொழு துநிற்கின்ற அவ்வன்பராகியமாணிக்கவாசகரைப்பக்ஷத்தினாலே பரமசிவ ன்பக்கத்திலேவைத்து அருளிச்செய்தாரென்றவாறு. (அகூ)

அவ்வியமில்லார்தங்கட்கருடாமுன்னுமன்னுந் ....... *
திவ்வியதலமாயிந்தச்சிரந்துளகுருந்தநீழ........ ...*
செவ்வுலகெங்குமுள்ளோமாயினுமிங்குளோர்கள் ... *
வெவ்வினையகற்றியாளவேண்டியீண்டுறைவோமென்றும்

(இ-ள்) மனக்கோட்டமில்லாதவர்க்குக் கிருபைசெய்ய முன்னே நாமடைந்த திவ்வியக்ஷேத்திரமாகியசிறப்புப் பெற்றவிளங்கு இந்த குருந்தநிழலிலேஎத்தலோகத்திலும் எங்குமிருந்தேயாயினும் நீங்க யிருக்கின்றவர்களுடைய தீவினையைநீக்கி ஆளும்பொருட்டு இந்த ஸ்தலத்திலே வசிப்போமென்றவாறு. (கூய)

பொங்கெரிச்சுழுனை பூடுபுலப்பிசைக்குறியேயான ✻
மங்கலசங்கமல்லாலவாய்ந்தபல்லியங்களியாவு .... ...✻
மிங்கெமக்காகவோசையடங்கிடமாதலாலு ..... .... ✻
நங்குலக்கவுரிகாணுநடனவிலாதலாலும்...... . ......✻

(இ-ள்.)மிகுந்த ஒளியையுடைய சுழுமுனைநாடியிடத்தில் சத்திக்கின்ற அடையாளமான மங்களகரத்தையுடையசங்கவாத்தியமல்லாமல் மற்றவாத்தியங்களெல்லாம்இந்தஸ்தலத்திலேநமக்காகாவாம் அதேனென்னில சத்தநீங்கியஇடமாகையினாலும்நமதுபாகத்திலிருக்கும் பார்வதிகாண நடனஞ்செய்யுமிடமாகையினாலும்.எ-று. (கூக)

ஒழுங்குடனின்னவாறிங்குணர்ந்துநற்குருந்தநீழற்... ✻
செழுந்தவக்குழுவிநீழுநங்கழலைசேவைசெய்ந்த......✻
யெழுங்கனைமறிவிற்காளியாவருமதனிற்சென்று ✻
விழும்பொழுதுடல்விழாவிவ்வுலநூவிலாவிநீங்கி .✻

(இ ள்)ஒழுங்காக இந்தப்பிரகாரம்அறிந்துநல்லகுருந்தமரநிழலிலே செழுமையுள்ள தபோதனர்கூட்டத்துடனே நம்முடைய பாதத்திற்சேவைசெய்து எழுகின்ற அக்கினியையுடைமையினாலே யாவரும்அதிற்போய்விழுந்தபோதுஉடல்விழாமல் இந்தயிடத்திலே சீக்கிரத்தில் நீங்கியென்றவாறு. (கூஉ)

உத்தரகோசமங்கையென்னுநம்மூரிற்சென்று .... ✻
சித்திபங்கெலவையுமெய்திதெய்விகலிங்கமேபோ . ✻
வைத்தநம்பதிகட்பிறமையிலவைவணங்கிலங்கே .....✻
யித்திகழ்வடிவேகாண்டிகாட்டுதுமெனநவின்றே ..✻

(இ-ள்.) உத்தரகோசமங்கையென்னும் நம்முடைய ஸ்தலத்துக்குப்போய் அஷ்டமாசித்திகளையும்அடைந்து தெய்விகமாகியலிங்கவடிவமாயிருக்கின்ற நம்முடைய ஸ்தலங்களிலே இந்தஸ்தலங்களைவணங்கினால அங்கங்கும்இந்தப்பிரகாசமுள்ளவடிவேகாண்பாய் அப்படியேகாட்டுவோமென்றுசொல்லியென்றவாறு. (கூங)

இந்நகர்வணங்கிநீங்கியெழுங்கழுக்குன்றமேமன்னு .. ✻
மற்றெறும்பதியிறைஞ்சியாண்டுநின்நீண்டுபோந்து ✻
பொன்னினம்பலத்திலெய்திப்புத்தனைவாதில்வென்ற ✻
பின்னரேம்பதமேயானபெரும்பதம்பெறுதியென்றார்✻

(இ-ள்.) இந்த ஸ்தலங்களை வணங்கி நீங்கி உயர்ந்த திருக்கழுக்குன்றமென்னும் அந்த நெடியஸ்தலத்தையும்வணங்கி அவ்விடத்திலிருந்து இங்கேவந்து சிதம்பரத்திற்குப்போய்ப் புத்தனைவாதில்வென்றபின்பு எம்முடையபதவியாகியசாயுச்சியத்தைப் பெறுவாயென்றார் பரமசிவனென்றவாறு. (௯௪)

மன்னுமன்புடையார்செய்வாசகம்புகலுமாறும் ...*
பன்னகம்புனைவோன்மேவும்பதிபல வணங்குமாறும் *
பொன்னினம்பலத்திலெய்திப்புத்தனைவென்று மன்றன்
றன்னருங்கமலபாதஞ்சார்தலும்பகரலுற்றாம் .. ... *

(இ-ள்.) நிலைபெற்ற அன்பையுடைய மாணிக்கவாசகர் தெய்வத்தன்மையையுடைய திருவாசகஞ்சொல்லியதும் சர்ப்பாபரணத்தைத்தரித்த பரமசிவனுடைய ஸ்தலங்களைவணங்கியதும் சிதம்பரத்திற்குப்போய்ப் புத்தனைச்செயித்துச் சபாநாயகருடையதிருவடிகளிற்சேர்ந்ததும் சொல்லத்தொடங்கினோமென்றவாறு. (௯௫)

மண்சுமந்தசருக்கமுற்றிற்று. ஆக திருவிருத்தம். ௫௪௫.

---

## திருவம்பலச்சருக்கம்.

---

வரந்தரவிருந்தார்தம்மைவாதவூரிறைவர்போற்றிப்...*
பெருந்துறைநகரிலன்றிப்பிஞ்ஞகாபுலியூர்மன்றிற்...*
பொருந்துகைமுத்தியெப்பேறுபுகன்றதிங்கெவனோவென்னத்
திருந்தியதவத்தாய்கேட்டியென்றவர்செப்பலுற்றார் *

(இ-ள்.) தமக்குவரங்கொடுக்கவிருந்தகடவுளைத் திருவாதவூருக்கரசராகிய மாணிக்கவாசகர்வணங்கிப் பரமசிவனைத்திருப்பெருந்துறையிலல்லாமல் புண்டரீகபுரமென்னும்பெயரினையுடையசிதம்பரத்திற்பொருந்துதல்பரமுத்தியென்றுஅருளிச்செய்ததுஎன்னவென்று விண்ணப்பஞ்செய்ய திருத்தமாகியதவத்தையுடையவனே நீகேட்பாயாகவென்று சொல்லத்தொடங்கினார் கடவுள்.எ-று.(௧)

இத்தலத்திடையேகிடமெடுத்துளவிடுத்தலன்றி...... *
வைத்துளவிடத்தேயந்தவேட்டுவன்வடிவங்கொள்ளும் *
வித்தகவுனக்கிங்கன்பான்மெய்யுணர்வுணர்த்தேதன்மை
யொத்திடுஞ்சிவானுபூதிமுத்தியம்பலத்திலுண்டாம் *

(இள்.) புழுதன்னை யெடுத்தவிடத்திலல்லாமல் கொண்டுபோய் வைத்தவிடத்திலே குளவிவடிவங்கொள்ளும் அதுபோல உன்னைக் கண்டஇத்தஸ்தலத்திலே அன்பினாலே உண்மை அறிவை யுபதேசம்

பண்ணிடேறும் மேன்மைபொருந்திய சிவானுபூதியாகிய மோக்ஷம் சிதம்பரத்திலுண்டாமென்றவாறு. (௨)

இடம்படுமுடம்பின்மூலத்தெழுந்ததற்சுழுனை நாடி *
யுடன்கிளரொளியாயவ்வொளியிலஞ்செழுத்துமொன்றாய்
நெடுங்குழலோசையாகிநிலவுமவ்வோசைபோயங்... *
கடங்கியவிடமேயென்றுமாடுமம்பலமதாகும் *

(இ-ள்). விசாலமாகியதேசத்திலே மூலாதாரத்தினின்றும் எழுந்த நல்ல சுழுமுனை நாடியுடனே நிறைந்தவொளியாய் அந்த ஒளியிலே பஞ்சாக்ஷரமும் ஒன்றாய் நெடியகுழலோசையாய்ப்பிரகாசம்பொருந்திய அந்தவோசை நீங்கி அடங்கியவிடமே நாள்தோறும் நாம் ஆடுகின்ற சிதம்பரமாகுமென்றவாறு. (௩)

எண்டரும்பூதமைந்துமெய்தியநாடிமூன்று ......... *
மண்டலமூன்றுமாகிமன்னிடபுணர்ப்பினாலே .......... *
பிண்டமுமண்டமாகும்பிரமமேருடைவராகக் ......... *
கண்டவர்நின்றவாறுமிரண்டினுங்காணலாகும் . ... *

(இ-ள்) எண்ணிக்கையைத்தருகின்ற பிருதுவி- அப்பு-தேயு- வாயு ஆகாசமென்றுசொல்லப்பட்ட பூதங்களைந்தும் இடைபிங்கலை சுழுமுனையென்னும் நாடிகள்மூன்றும் அக்கினிமண்டலம் ஆதித்தமண்டலம்-சந்திரமண்டலம் என்னு மண்டலங்கள்மூன்றும் ஆகிநிலைபெற்றச் சம்பந்தத்தாலே பிண்டமு மண்டமாம் பிரமா - விஷ்ணு- உருத்திரன்-மகேசுரன்-சதாசிவனென்றுசொல்லுகின்ற ஐந்துவடிவமாகக்கண்டவர்கள் நின்றவிதமும் இவ்விரண்டுவிதத்திலுங் காணலாமென்றவாறு. (௪)

ஆதலாலிந்தவண்டத்தறிவரும்பொருளாயென்றுந் ... *
தீதிலாமூலநாடித்திகழ்சிவலிங்கமேனி ... ........... *
மீதிலாமந்தநாதவெளியின்மேலொளிமன்றங்குக்..... *
காதலான்மடவாள்காணக்கருத்துறநிருத்தஞ்செய்வோம்

(இ-ள்.) ஆகையினாலே இவ்வண்டத்தில் அறிதற்கரியபொருளாகி ஒன்றுங்குற்றமில்லாத மூலத்தைநாடிப்பார்த்தால்பிரகாசியாநின்ற சிவலிங்க மேனியாயிருக்கு மேலாகிய அந்தநாத வெளியின்மேல் ஒளியாயிருக்கின்றது சபை அங்கேஆசையால் உமாதேவிகாண மனம்பொருந்த நிருத்தஞ்செய்வோமென்றவாறு (௫)

த்தநன்னடமேதென்னிலைந்தொழினடத்தலாகும்...*
பந்தமதகற்றுமிந்தப்படிவமுமதுவேயாகும்.........*

வந்துலகத்தில்யாருங்காண்பரோல்வழுவாமுத்தி.... ... *
தந்தருளளிக்குந்தெய்வத்தலமுமத்தலமேயாகும் .. .. *

(இ-ள்.) அந்தநடனமென்னவெனென்றால் சிருஷ்டி-ஸ்திதி - சங்காரம்திரோபவம் - அநுக்கிரகமென்று சொல்லப்பட்ட பஞ்சகிருத்தியத்தைநடத்துவதாகும் பாசத்தளையை யறுக்கின்ற இந்த வடிவமும் அதுவேயாகும் உலகத்திலேயிருக்கின்றவர்கள் யாவர்வந்துதெரிசித்தாலும் பரமுத்தியைக்கொடுத்து கிருபைதருகின்ற தெய்வஸ்தலமும் அந்தசிதம்பரமேயாகுமென்றவாறு. (சு)

சாவருஞ்பணிலநேமிதரிப்பவர்பிரமனென்போ... ... *
ரியாவருஞ்புலிபாய்பென்னுமிருவருஞ்புரத்திலுண்டா*
மூவருந்தெய்வமூவாயிரவருமுனிவர்தாமுந் ..... ...*
தேவருந்தொழுதுபோற்றுமெல்லையத்தில்லைமூதூர் *

(எ-ள்.) நாவுகற்கரியசங்குசக்கரந்தரிப்பவராகிய மகாவிஷ்ணுவும் பிரமதேவரும் பதஞ்சலி வியாக்கிரமபாதரும் திருபுராதிகளும் தெய்வத்தன்மையுள்ள தில்லைமூவாயிரவரும் நாற்பத்தெண்ணாயிர முனிவரும் முப்பத்துமுக்கோடிதேவர்களும் போற்றும்எல்லையையுடைய து அந்ததில்லை மாநகமென்றவாறு. (எ)

மற்றிவைதெளிவாயென்றுபணிந்தெதிர்வணங்கிநிற்பார்
நெற்றியினீறுசாத்திநெற்றியென்றகலநில்லார்...... *
சற்றிடஞ்சென்றாமின்னுமிங்கிவர்தன்மைகண்டு .. *
கற்றையுஞ்சடையார்நின்றுகன்னணருள்செய்துமோந்து

(இ-ள்.) இவைகளையெல்லாந்தெளிந்துக்கொள்வாயென்று பணிந்துஎதிரேவணங்கிநிற்கின்ற மாணிக்கவாசகருடையநெற்றியிலே விபூதிதரித்து நில்லென்று கடவுளானவர் நீங்குதலும் நில்லாதவராய்க்கொஞ்சதூரம்போனார் மறுபடியும்இவருடையதன்மையைக்கண்டு பரமசிவனானவர்நின்று கிருபைசெய்துபோ யென்றவாறு. (அ)

கன்னெதிர்நடக்குமாறுகண்டுளங்களித்துநிற்கும்... *
புண்ணியர்காணமுன்னர்மறைந்தனர்புலியூரையர் -...*
துண்ணெனவிரககமெய்தித்தொழுதுகைத்தலமேற்கொண்டு
நண்ணருமன்பர்கூட்டநணுகினர்வாதவூரர்........... *

(இ-ள்) கண்ணெதிரேநடப்பதைக்கண்டு மனங்களித்துநிற்கின்ற புண்ணியராகியமாணிக்கவாசகர் காணும்படி சபாநாயகர் எதிரேமறைந்தார் அதுகண்டுஅச்சங்கொண்டுஇரக்கமுற்றுவணங்கிக்கையைச்சிரசின்மேலவைத்துக்கொண்டு பொருந்துதற்கரிய அடியார்களுடைய கூட்டத்தைப்பொருந்தினார்திருவாதவூரரென்றவாறு. (கூ)

அருந்தவமகலாநெஞ்சத்தன்பருந்தாமுமந்தத் ... .... *
திருந்தியகுருந்தின்கீழேதெய்வப்பீடிகையுஞ்செய்து *
வரந்தருசெய்யபாதமலர்வருத்திறைஞ்சியாங்கே .....*
யிருந்தனரிருந்தநாளிலெய்தியதியம்பலுற்றாம் ... ...*

(இ-ள்) அரியதவத்தைநீங்காத மனத்தையுடைய அடியார்களும் மாணிக்கவாசகரும் அந்தத்திருத்தமாகிய குருந்தநீழலின்கீழே தெய்வத்தன்மையுடைய ஒருபீடஞ்செய்து அதன்மேலே வரத்தைத்தருகின்ற சிவந்ததாமரைமலர்போன்ற திருவடிகள்செய்து வணங்கி அங்கிருந்தார் இருந்தநாளிலே நடந்தகாரியங்களைச் சொல்லத் தொடங்கினோமென்றவாறு. (௰)

வெண்பிறைமுடித்தவேணிவிண்ணவரன்பிலாத ... ...*
பண்பினொழிந்தனைப்பாடினர்க்கிரங்குமென்றே
யெண்பெறுநமசிவாயவாழ்கவென்றெடுத்துநாதன் *
வண்பதம்புகழ்ந்துஞானவாசகம்புகலலுற்றார் ........*

(இ-ள்) தெள்ளிய மூன்றாம்பிறையைத்தரித்த சடாபாரத்தையுடையகடவுளானவர் அன்பிலாதவராகப்பாடுவோரிடத்தும் அன்போடேபாடுவர்களிடத்திலே இரக்கஞ்செய்வாரென்று நினைத்துள்ளன்புடன் பெற்ற நமச்சிவாயவாழ்கவென்றெடுத்து நாதராகியகடவுளாருவளமதையுடைய திருவடியைப் புகழ்ந்து ஞானவாசகமாகிய திருவாசகம் சொல்லத்தொடங்கினாரென்றவாறு. (௰௧)

சொற்பதங்கடந்துநின்றசோதிவந்தருளைநல்கி ..............*
மற்புதமறியேனென்றுமதிசயங்கண்டாமென்று.... ..... *
பொற்பொலிசடையாய்நெஞ்சங்குழைத்தனையென்னையென்றுஞ்
சிற்பரன்றனதுபாதஞ்சென்னியின்மன்னுமென்றும்... .. *

(இ-ள்.) சொல்லுகின்றபதங்களைக்கடந்துநின்ற கடவுளானவர் வந்துகிருபையைத்தருகின்ற அற்புதமறியேனையென்றும் அதிசயங்கண்டாமேயென்றும் ஒளிவிளங்குகின்ற சடையையுடைய கடவுளேயென்னை மனங்குழைத்தாயென்றும் பரமசிவனுடைய பாதஞ் சென்னியில் மன்னுமென்றுமென்றவாறு. (௰௨)

ஐயனேநின்னைக்காணவாசைபட்டேனென்று ........ *
முய்கிலேன்வாழேனென்றுமுனக்கடைக்கலமேயென்றுஞ் *
செய்யுமாறறியேனந்தோசெத்திலேனென்றும்பொய்யர் ....*
பொய்யனேநின்பொற்பாதம்புணருநாளென்றோவென்றும்

(இ-ள்) ஐயனே நின்னைக்காண ஆசைப்பட்டேனென்றும் பிழையேன்வாழ்கிலேனென்றும் உனக்கடைக்கலமென்றும்செய்யுமா

றறியேன் ஐயோசெத்திலேனென்றும் பெய்யர்க்குப் பொய்யனே
நின்பாதம் புணருநாளென்றோவென்றுமென்றவாறு. (௰௩)

ஆதரித்தழைக்கிலிங்கேயதெந்துவெயன்றருளாயென்றும்
போதமிக்குடையபாடலிவையிவைபுகன்றபின்னர் *
மாதிரத்தவரும்போற்றவருந்திருவார்த்தையெண்ணுந்
தீதறச்சிறந்தவெண்பாதிகழெழுநான்குமோதி ... *

(இ-ள்) ஆதரித்தழைக்கில் இங்கே அதெந்துவே யென்றருளா யென்றருட்பத்தும் ஞானமிகவுடைய பாடல்கள் இவைகளிவைகள் அருளியபின்பு எட்டுத்திக்கிலுள்ளவர்களும் வணங்குகின்றதிருவார்த்தையும் எண்ணப்பதிகமும் குற்றமற்றசிறந்தவெண்பா இருபத்தெட்டும் விளங்கச்சொலலியென்றவாறு. (௰௪)

இயல்புடன்மொழியும்பள்ளியெழுச்சியேசறவுநெஞ்சத்
துயர்வரவுணாக்குமின்னேரனையபூங்கழலகளொன்று *
முயிருண்ணியெனுநற்செய்யுள்பிரார்த்தனையேயருநீதி. *
விபமனமுங்கூடற்பாண்டிவிருத்தமெய்த்தமிழுங்கூறி. *

(இ-ள்) இயல்புடனே சொல்லுகின்ற திருப்பள்ளியெழுச்சியுந் திருவேசறவும் மனத்தின்வருத்தம் நீங்கச்சொலலுயிர்ந்த மின்னேரானைய பூங்கழல்களென்றுனந்தமாலையும் உயிருண்ணிப்பத்துப்பிரார்த்தனைப்பத்தும் உயர்ந்த நீதியாகிய அதிசயமுள்ள நெடிய மதுரையினுடைய திருப்பாண்டிவிருத்தமென்னுந் தமிழ்ப்பாடலும் சொலலியென்றவாறு. (௰௫)

(வேறு.)

மருவுந்தொண்டருடன்கூடிவைகிச்சிலநாட்செல்லமுசற்... *
பரமன்சொல்லும்படியேபின்பயிலும்பொய்கைதழலகண்டு
கருதுந்திருவஞ்செழுத்தோதிக்காணக்கிளருங்கனன்மீது *
விரவும்பேரன்புடையார்களெல்லாஞ்சென்றுவீழ்ந்தார்கள் *

(இ-ள்.) தங்கியிருக்கப்பட்ட அடியார்களுடனே வாசஞ்செய்து சிலநாள் செல்ல அதற்குமுன்னே பரமசிவனனுக்கிரகித்தபடியே பின்பு பயிலுகின்றதடாகத்திலே அககினியைக்கண்டு நினைக்கின்ற அழகிய பஞ்சாக்ஷரத்தைச் செபித்துக் காணும்படிப் பிரகாசியாநின்ற அக்கினியிலே கலந்திருக்கின்ற மிகுந்த அன்பையுடைய அடியார்களெல்லாம் போய் வீழ்ந்தார்களென்றவாறு. (௰௬)

வீழ்ந்தபோதிற்புலியூரார்விடைமேற்றோன்றிக்கவுரியுடன் *
சூழ்ந்தங்கிமையோர்மலர்சிந்தித் தொழவிண்ணிடையேதோ
[ன்றுதலு

மாழ்ந்ததடத்துட்கனன்மூழ்குமன்பரடங்கத்துயர்நீங்கி... *
வாழ்ந்துவணங்கிக்கணநாதவடிவாய்த்திருமுன்வந்தார்கள்...*

(இ-ள்.) வீழ்ந்து முழுகினபோது சபாபதியானவர் இடபவாகனத்தின்மேலேறி உமாதேவியுடனே முப்பத்துமுக்கோடி தேவர்களுஞ் சூழ்ந்துகொண்டு அழகியமலரைத்தூவித்தரிசிக்க ஆகாயத்திலெழுந்தருளினமாத்திரத்தில ஆழம்பொருந்திய தடாகத்திலிருக்கின்ற அக்கினியில்முழுகிய அன்பர்கள் தங்கள் துக்கமெல்லாம் நீங்கவாழ்ந்துவணக்கஞ்செய்து சிவகணநாதர்களாய் வடிவுகொண்டு பரமசிவ னெதிராகவந்தார்க ளென்றவாறு. (௰௭)

துரியந்தலையிற் பயிலாருந்தொழுசங்கெழுவார்முகநாடி *
யொருகூற்றகலாதவர்நீரிங் கொழியக்கனிநாமெய்திய துய... *
கரையிற்றிரைபோய்விழவீசுஞ்செழுநீர்வாசங்கமழ்வாவி *
யெரியிற்புகுவீரென்றதுவும்யாதோவினவிங்கதுவாரும் *

(இ-ள்) துரியத்தின்முடியின்விளங்கிய கடவுளும் வணங்கியெழுகின்ற அடியார்களுடைய முகத்தைப்பார்த்துக் கொஞ்சநேரமாகிலும் நீங்காதவராகிய நீர் இங்கேநீங்கத் தனியே நாம்போனதுங் கரையிலே அலைகள்போய் மோதும்படி வீசுகின்ற செழுநீர்வாசங்கமழ்கின்ற திருக்குளத்திலே அக்கினியிலே முழுகவீரென்று சொல்லியதும் என்னகாரணமோவென்று கேட்டால இதுவாகுமென்றார் என்றவாறு. (௰௮)

(வேறு.)

உத்தமனென்றுந்திருவாதவூரனைமன்றும்புலியூரிற் .. [ற்
பத்தரைவெல்லும்படி நாம்புவிமிசைவைத்தோமியாமேகி
சித்தமயர்ந்தேதுயர்கூறுஞ்செய்தியறிமென்பதுகோரா. *
வித்தலமீதேசிலநாளிங்கெம்முடன்வாராதிருமென்றோம் *

(இ-ள்) உத்தமனென்கின்ற திருவாதவூரனை நிலைபெற்றசிதம்பரத்திலே புத்தரை வாதிலவெல்லும்படி நம் இந்தப்பூமியின்மேல் வைத்தோம் நாம்நீங்கினால் மனம்நொந்து துன்பமடைவானென்பதுதெரிந்து உங்களையும் இந்தஸ்தலத்திலே சிலநாள் எம்முடன்வாராதிருப்பீரென்று சொன்னோமென்றவாறு. (௰௯)

மலமகல்பவரும்புவிமீதேமானிடவடிவந்தனையெய்திச் ... *
சிலபகலெனினும்பயிலகாலைச்சேர்தருமலவாதனையென்றே *
பலமலர்கமழுந்தடமீதிற்பரவருஞானவனலசேர்வித் ... .. *
திலதெனநீறிஞ்சடம்வேவித்திவ்வுடலீந்தேமிந்நாளில்......*

(இ-ள்.) ஆணவம்-மாயை-காமியமென்னும் மலநீங்கினவர்களும் பூமியின்மேலே மானிடவடிவங்கொண்டு சிலநாளாயினும் இருக்கு

ங்காலத்திலுமிருபடியும் மலாசனிசேருமென்று அனேகமலர்கள் விசிக்கின்றதடாகத்திலேசொல்லுதற்கரிய ஞானக்கினியைச்சேர்வித்துப்பொய்யாய்த்தோன்றிய மாயாதேகத்தைவேகச்செய்து.இந்த தேகத்தைஇந்நாளிலேகொடுத்தோமென்றார் பரமசிவன்.எ-று.(உ௰)

என்றுவினம்பிக்கணநாதரொங்கஞுமகலப்புலியூரின் . ...........*
மன்றுவிளங்கப்பயில்வாருய்வானின்மறைந்தாரவ்வெல்லைத் ...*
தூன்றியஞானச்சிவநாமச்சொற்றமிழ்ச்சொலவார்வேறாகச் .......*
சென்னெருகொன்றைச்செழுநீழற்றிகழவிருந்தாரியம்யோகம் ..*

(இ-ள்) இப்படியென்று அருளிச்செய்துகணநாதர்களெவ்விடத்திலும்நெருங்கிச்சிதம்பரத்திலே கனகசபை விளங்கநிருத்தஞ்செய்கின்றசபாநாயகரும் ஆகாயத்தில் மறைந்துவிட்டார் அப்போதுநிறைந்த அறிவைத்தருகின்ற சிவநாமத்தையுடைய திருவாசகத்தமிழ்சொலவாராகிய மாணிக்கவாசகர் வேறாகப்போய்ச் செழுமையுள்ள ஒரு கொன்றைமர நிழலிலே பிரகாசத்துடனே சிவயோகஞ்செய்திருந்தாரென்றவாறு. (உக)

அப்பாழற்கேபுகுமாறுமையர்விடைக்கேவருமாறு .. ......... *
முப்புடைக்காமுறுவெப்பமுன்னவனற்றொடொழுமாறும் ......*
டன்பொதுவிற்கேயபாளர்புகுவதுமெல்லாமொருகாலத் ...*
தினபுறுமெய்ப்போதகயோகத்தியல்பொடுகண்டாரென்செய்த ॥*

(இ-ள்) அடியார்கள் அக்கினியிலே புகுந்தவிதமும் கடவுள் இடபவாகனத்தின்மேல் வந்தவிதமும் முன்னே தமக்கும்பண்டியபடி வந்துகொண்டுகடவுளினுடைய திருவடியை வணங்கினவிதமும் இனிக்கனகசபையிலே தான்போயடைவதும்ஆகிய இவையெல்லாம்ஒரு காலத்திலே இன்பமிகுந்த உண்மைஞானத்தைத்தருகின்ற சிவயோகத்திலே சுபாவத்துடனே மாணிக்கவாசகர் அறிந்துகொண்டார் பின்பென் செய்தாரோவென்னிலெனறவாறு. (உஉ)

செங்கைகுவித்தார்விழிநீராச்சிந்தினரெந்தாய்வந்தாப்பின் ....*
னெங்கொளித்தாயெனமாலுற்றெய்தினர்பொய்கைக்கரைமீதில் *
கங்கைமுடித்தாரவிடையேறிக்கண்ணுறநண்ணுந்தலமோவென் *
றங்கவிலத்தேபோய்வீழ்வுற்றழுதழுதநந்தோவெனநொந்தார ...*

(இ-ள்) சிவந்தகைகளைக்குவித்தார் கண்களாலே ஆனந்தபாஷ்பங்களைசொரிந்தார் எமது பிதாவாகிய கடவுளே வந்து பின்னெங்கேயொளித்தாயென்று மயக்கமடைந்து பொய்கைக்கரைமீதில் வந்து கங்கையைத் தரித்த பரமசிவன் இடபவாகனத்திலேறிக் கண்ணொளிமேவ வந்தருளிய ஸ்தலமோவென்று அழகியவிடத்தையுடையபூமி

யிலேபோய்விழுந்து அழுதழுது ஐயோ வென்றெழுந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௨௩)

(வேறு.)

அன்னைநிகர்ப் பொன்னையொழித்தேயன்பாளர் *
பொன்னடிபெற்றேறபொய்கையழற்கேபுகலாமோ
மின்னாருருவத்தீர்நம்மருள்கூடாவினையேனுக் *
கின்னலளித்தீரெங்கொளித்தீரெனவெழுந்தார் .. *

(இ-ள்) தாய்க்குச் சமானமானவனே என்னை நீக்கி அன்பையாளுகின்றவராய்ப் பொன்போலிற பாதத்தைப் பெற்றுத் திருப்பொய்கையிலேயுண்டாக்கி அக்கினியிலேமூழ்கலாமோ பிரகாசிக்கின்றவடிவையுடையவரே உம்முடைய கிருபையிலேகூடுதல்செய்யாத தீவினையையுடையவனே அடியேனுக்குத் துன்பத்தைக்கொடுத்து எங்கே ஒளித்தீரென்று எழுந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௨௪)

(வேறு.)

அந்நிலைதெளிந்துபொய்கையகன்றுயர்குருந்தநீழற் ......*
பன்னருமறைகள்காணாப்பதமலர்பற்றிவீழ்ந்து. .........*
மன்னியதலத்திலுள்ளோர்வலவினைப்பிறவிமாள ..........*
வின்னருட்சதகம்மெய்தானரும்பியென்றெடுத்துச் சொன்னார்.

(இ-ள்.) அந்தநிலையைத்தெளிந்து திருப்பொய்கையைவிட்டுநீங்கி உயர்ந்த திருக்குருந்தநிழலிலே பன்னுதற்கரியவேதங்கள் காணாத திருவடிமலரைப்பற்றிவீழ்ந்து நிலைபெற்றபூமியிலுள்ளோர்களுடைய தீவினைகளுக்குக் காரணமாகிய பிறவிமாளும்படி இனிய அருளையுடைய திருச்சதகம் மெய்தானரும்பியென்றெடுத்துச் சொன்னார் மாணிக்கவாசகரென்றவாறு. (௨௫)

இத்திறங்கூறியாங்கேபுலம்பிநின்றிரங்குமெல்லை .... .......*
நித்தனன்றுரைத்தநீர்மைநெஞ்சினுண்ணினைந்துபின்ன ... .. *
ரத்தலத்திறைஞ்சியெங்கோனருட்பெருவிடைபெற்றேகி...*
யுத்தரகோசமங்கையூரினிற்சென்றுபுக்கார்... ... . ......*

(இ-ள்) இந்தப்பிரகாரஞ்சொல்லி அங்கே புலம்பிநின்று இரங்குஞ்சமயத்தில கடவுளன்றருளிச்செய்ததை மனதிலேநினைந்து பின்பு அந்தஸ்தலத்திலே வணங்கிக்கடவுளுடைய செலவுபெற்றுக்கொண்டுபோய்த் திருவுத்தரகோசமங்கையென்னும் ஸ்தலத்துக் கெழுந்தருளினார் மாணிக்கவாசகரென்றவாறு. (௨௬)

சடையவர்கோயிலெய்தித்தம்மைவந்தடிமைகொண்ட ... ...*
வடிவதுகாணு[illegible]வெய்துயிர்த்துவீழ்ந்து........ ... *

விடுதிகோலென்னையென்று நீத்தல்விண்ணப்பமென்னுந் *
தொடைகெழுபாடலோதக்காட்டினர்தொல்லைமேனி... *

(இ-ள்) திருவுத்தரகோசமங்கையிலேசடாபாரத்தையுடைய பரமசிவனெழுந்தருளியிருக்கின்ற கோயிலுக்குப்போய்த்தம்மைவந் தடிமைகொண்ட திருவுருவைக்காணாதவராய் மயக்கமடைந்துபெருமூச்சுவிட்டுக்கீழேவிழுந்து என்னை விட்டுவிடுகிறாயோவென்று நீத்தல்விண்ணப்பமென்னும் பாடல்சொல்லப் பழைய திருவுருவைக்காண்பித்தாரென்றவாறு (௨௭)

கன்னலையமுதையங்கேகண்டுகொண்டிறைஞ்சிச்சின்னா *
ளந்நகரிருந்துதங்கோனருண்மொழிப்படிமேயச்செலா ... *
தன்னிகரிலாத்தெய்வத்தலம்பலவணங்கிநீங்கி .. ........*
சென்னிநன்னாட்டிலெய்தித்திருவிடைமருதூர்சேர்ந்தார் *

(இ-ள்) கரும்பையும்அமிர்தத்தையுமொத்தகடவுளை அங்கேகண்டுகொண்டு வணங்கிசிலநாள்அந்தஸ்தலத்திலிருந்து தமது கடவுள் சொற்படியேபோய்த் தனக்குநிகரற்ற அநேகந்தெய்வஸ்தலங்களை வணங்கிநீங்கிச்சோழநாட்டுக்குப்போய்த் திருவிடைமருதூரிற்சேர்ந்தார்மாணிக்கவாசகரென்றவாறு. (௨௮)

அப்பதிகொழுசபிஞ்ஞரன்புடனுறைந்தெய்திச் ... .. ......*
செப்பருமலர்த்தாள்போற்றித்தூகழ்திருப்புலம்பலோதி *
யொப்பறவிறைஞ்சியண்ணலியப்பியபதிகளெல்லாந்.... *
தப்பறவணங்கிநீங்கித்தடமதிற்புகலிசேர்ந்தார்... ... ...*

(இ-ள்) அந்தஸ்தலத்தைவணங்கினபின்பு அன்புடனே திருவாரூருக்குப்போய்ச் சொல்லுதற்கரிய தியாகராயருடைய திருவடித்தாமரைகளைவணங்கிப் பிரகாசிக்கின்ற திருப்புலம்பலென்னும்பாடல்களைச்சொல்லித்தமதுஇளைப்புநீங்கவணங்கிப்பரமசிவனாலனுக்கிரகம்பண்ணப்பட்ட ஸ்தலங்களெல்லாந் தப்பாமல்வணங்கி நீங்கி விசாலம்பொருந்திய மதிலுடையசீகாழியிற்சேர்ந்தாரென்றவாறு.

குன்றனையகோயிற்கோபுரவாயினீங்கிச் ... .. ...*
சென்றுயர்கயிலையானைச்சேர்ந்துகண்டிரங்குமெல்லை ..... ... *
மன்றிடைநடித்தபாதமலரடிபிடித்துக்கொண்டு .... *
பின்றிகழ்சம்பந்தன்முன்னர்ப்பிடித்தபத்தருளிச்செய்தார்

(இ-ள்) மலையென்றுசொல்லும்படிப்பிரகாசிக்கின்ற ஆலயத்திலுடையதிருக்கோபுரவாசலைக்கடந்துநீங்கிப்போய் அதுகயிலாசமாகச் செழுமையைக்கண்டு வணங்கும் பொழுது சிற்சபையிலே திருநடஞ்செய்த திருவடித்தாமரையைப்பிடித்துக்கொண்டுபின்புறத்தி

பிரகாசிக்கின்றசடாபாரத்தையுடையகடவுளின் முன்னேபடித்தபத்தென்பலைதஅருளிச்செய்தார் மாணிக்கவாசகரென்றவாறு (௫௰)

சொல்வினைப்பகைமையுள்ளாரியாவருந்தொழுதாலிங்கு... *
செவ்வரப்பகையையென்றுவிருப்புடன்சிலநாள்வைகி... *
மாற்றுமத்தலத்தைநீங்கிவணகழுக்குன்றிலன்பாற்...... ... *
சேவைதற்கிசைந்துநிலைத்திசைகுறித்திறைஞ்சிப்போகி ...*

(இ-ள்) பழவினைப்பகையுள்ளவர்கள்வணங்கினால்யாவரும் வருவினைவெல்வார்களென்று அந்தஸ்தலத்திலேயிருப்புடனே சிலநாள்வாசஞ்செய்து அந்தஸ்தலத்தைவிட்டு வைணத்தையுடைய திருக்கழுக்குன்றத்திலே அன்பாய்ச்சேவைசெய்து சம்மதிசைத்து நிலைநகரைத் திசைகுறித்து வணங்கிப்போனாரென்றவாறு. (௫௧)

(வேறு)

உத்தரநெடுந்திசையிலேகியொருநான்கு ... ......*
முத்தநதிசூழ்முதுகுன்றினைவணங்கா ...... *
வைத்தலமகன்றுபராருட்டுறையிதென்றே... .... ....*
மெய்த்தவர்களெண்ணியுறையெண்ணெயினடைந்தார்.*

(இ-ள்) நெடியவடக்குத்திசையிலேசென்று பிரகாசங்குறையாதமணிமுத்தாறுசூழ்ந்த விருத்தாசலத்தைவணங்கிப்பின்பு உயர்ந்த திருவருட்டுறையென்று பெரியோர்கள் நினைத்துவசிக்கின்ற திருவெண்ணெய்நல்லூரிற்சேர்ந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௨)

அந்நகர்வணங்கியபினன்புடனகன்றே........ ...*
நன்னர்வதிசென்றுநடுநாடுமுயர்காடுங்........ ......*
கொன்னிபமடங்கலுறைகுன்றமுமிகந்தே......... .. *
மன்னுமருணைபுரிமருங்கணையவந்தார்..................*

(இ-ள்) அந்தஸ்தலத்தைவணங்கியபின்பு அன்புடனேநீங்கி நல்லவழியிலேபோய் நடுநாட்டையும் உயர்ந்தகாட்டையும் அச்சத்தைத்தருகின்றயானையும் சிங்கமும் வசிக்கின்றமலைகளையும் கடந்து நிலைபெற்றதிருவண்ணாமலைக்குச் சமீபத்தில் வந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௩)

மாடமொடுகோபுரமுமன்னுமணிமுத்தஞ்.............*
சூடுமதிலும்பெரியதோரணமுமகப்பு . ........ ..... *
நீடசமுகாடவிநெருங்கியுளதனைகா ... .. ... .... ..... *
ஆடுபர்தல்கண்டுவகைகொண்டுதொழுதுய்ந்தார்......*

(இ-ள்.) உப்பரிகைகளும்-கோபுரங்களும் நிலைபெற்ற ரத்தினங்களும்-முத்துக்களும் பதித்தமதில்களும்-பெரியதோரணங்களையு

டைய முகப்பும் நீடிய கமுகங்காடுகளும்நெருங்கியுள்ள குளிர்ந்த சோலைகளினுடைய கிளைகள் உயர்ந்திருத்தல்கண்டு மகிழ்ச்சிகொண்டு வணங்கிப்பிழைத்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௪)

அன்றிருவர்தேடவழலானதொருவெற்பாய்...........*
நின்றவடிவோமனநிறைந்தபெருவாழ்வோ . *
வென்றுமலையண்ணலையிறைஞ்சியருள்கொண்டே ...*
சென்றருணையாகியசெழும்பதிபுகுந்தார் ..... *

(இ-ள்) அன்றுபிரமா விஷ்ணுக்கள்தேட அக்கினிமலையாய் நின்றவடிவோ அல்லதுமனத்திலேநிறைந்தபெரியவாழ்வோவென்று அண்ணாமலையை வணங்கிக்கிருபைகொண்டு செழுமையுள்ள திருவருணைம நகரத்திற் புகுந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௫)

(வேறு.)

சோலையுமதிலும்பல்பூந்தோரணமருகுந்தெய்வச் ... *
சாலைகள்பலவுநீங்கிச்சந்நிதிமறுகிற்சென்று .. ... *
மாலையும்பாம்புபார்திங்கண்மத்தமுமுடியில்வைத்தோ *
னாலயமிறைஞ்சிக்கண்டார்தம்மையன்றாண்டமேனி ...*

(இ-ள்.) சோலைகளும்-மதிலும்-பசிய பூந்தோரணங்களையுடைய வீதியும் அனேக தெய்வத்தன்மையுள்ள சாலைகளும் நீங்கிச் சந்நிதி வீதியிற்போய் மலர்மாலையும் மூன்றாம்பிறையும் சர்ப்பமும் ஊமத்தமலரும் திருமுடியின்மேல்வைத்த அண்ணாமலையாருடைய ஆலயத்தைவணங்கித் தம்மையன்றுவந்தாண்ட திருவுருவைக்கண்டார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௬)

மாலுடன்பிரமன்றேவர்வந்துனக்கடிமையென்றென் *
றோலிடும்பொழுதிலாலமுண்டிருள்கண்டபோற்றி.. *
மேலிடும்பவநோய்தீரவண்ணவிமலமண்ணோர்பசைப் *
பாலுடனகலந்துட்கொள்ளும்பனிமலைமருந்தேபோற்றி.

(இ-ள்) மகாவிஷ்ணுவும்-பிரமதேவனும் தேவர்களும்வந்து உனக்கடிமையென்றுமுறையிடும்போதில ஆலகாலமுண்டிருண்டகண்டத்தையுடையவனேபோற்றி அதிகரிக்கின்ற பிறவிநோய் நீங்கவே பெருமணிக்கரும்பையும்பாலுடன் அல்லது உமாதேவிபாகத்துடனே கலந்துட்கொள்ளுகின்றகுளிர்ச்சியுள்ளமலைமருந்தேபோற்றி.எ-று.

நெடியவன்மகுடமலாகிநிணிலமகிழ்ந்துங்காணு... ... ... *
வடிகளென்றலைமேல்வைத்தவருட்பெருங்கடலேபோற்றி
படிபிடம்புரக்குமுண்ணாமுலையெனும்பச்சைமேனிக் *
கொடியிடங்கொண்டசெம்பொற்குன்றமேபோற்றிபோற்றி.

(இ-ள்) கலந்த அன்பையுடையவராகிய மாணிக்கவாசகர்மேன்மைபொருந்திய அந்தத்திருவண்ணாமலையை நீங்கி அன்புடனேகாஞ்சிமாநகரிலே வந்து ஏகாம்பரத்திலேகம்பனைவணங்கித்தெரிசுதற்கரியதிருக்காமக்கோட்டத்தில் காமாட்சியினுடைய சிறிய இரண்டுதிருவடிகளையும்வணங்கித்தேவர்கள்வரங்களைக்குறித்து வணங்குகின்றதெய்விகமுள்ளவளத்தையுடையதிருக்கழுக்குன்றத்துக்கெழுந்தருளினார் மாணிக்கவாசக ரென்றவாறு. (௬௨)

கோட்டிதழ்க்கமழுங்கொன்றைச்சென்னியன் குலவுமென்பர்
சூட்டியமலர்த்தாள்போற்றித்துணைவநின்செய்யமேனி ...*
காட்டினைகலங்காவண்ணமிக்கழுக்குன்றிலென்று ....... [நார்
பாட்டினைப்பொருந்துசின்னாள்பயின்றுபின்பணிந்துபோந்

(இ-ள்) கொம்புகளின்மேலேயிதழ்வாசிக்கின்ற கொன்றைமாலிகை தரித்த சிரசையுடையகடவுளுக்கு அன்பராகியமாணிக்கவாசகர் தன்முடியின்மேற்சூட்டிய தாமரைமலர்போன்ற பாதத்தை வணங்கித்துணைவனேயுன்னுடைய கலங்காதபடி சிவந்தமேனியைக்காட்டினாய் கழுக்குன்றிலேயென்று பாட்டினைச்சொல்லிச் சிலநாள்வசித்ததுப்பின்பு பணிந்துபோற்றினென்றவாறு. (௬௩)

அந்தலமகலாநாப்பணடைந்துளநதியுங்கானு ......*
மைந்தநெடுவரியுங்காவும்வாவிகள்பலவுநீங்கிப் .........*
பைந்தமெய்ப்பாம்போடாடிநரியெலாம்பரிகளாக்குஞ்*
சிந்தர்தெய்வத்தில்லைமூன்றுகாவதமென்னச் செனறார்.. *

(இ-ள்) அந்தஸ்தலமுதல் மத்தியப்பிரதேசத்திலேயிருந்துள்ளஸ்தலங்களும் காடுகளுங்கரியவிசாலமாகிய மலைகளுஞ்சோலைகளும் தடாகங்களும் நதிகளும் கடந்துபடத்தையுடைய மெய்யசர்ப்பத்தோடுவிளையாடிநரிகளையெல்லாங்குதிரையாக்கிய சித்தராகியகடவுளாடுமழகியதில்லைமாநகர்மூன்றுகாதவழியென்று சொல்லமெழுந்தருளினார்மாணிக்கவாசக ரென்றவாறு. (௬௪)

(வேறு)

மூதாரன்மடப்பாவையர்தோளாசையிலாளா..........*
மாழ்கருமிட்டுண்டுயிர்வாழாதவர்தாமுந் ......... ...*
நீழல்கரமாமேலருள்செய்யாதவர்பலரும்.........*
போழார்வழிபோகாதவர்புலியூர்வழிபோனார்.........*

(இ-ள்) பரிசுத்தமாகிய தந்தவரிசைகளையுடையமங்கையர்கள் தோளாசையிலாட்படுகின்றவுலைமைகளும் இட்டுண்டு உயிர்வாழாதவர்களும்அக்கினிமூளுகின்ற திருக்கரத்தையுடைய கடவுண்மேல அன்

ரக்கூட்டங்கள் அனேகஞ்சாமரங்கள்வீச மாந்தளிலாக் கோதுகின்
ற அனேகங்குயில்கள் சின்னமூத மிகுந்த அன்புடனே தேவர்கள்
சொரிகின்ற பலபொன்மலரை ஒக்கும்படி ஒளிபொருந்திய மலர்
களைச்சிந்தின சண்பகச்சோலைகளென்றவாறு- (௪௯)

நீங்காவளமிவ்வாறுளநீள்சூதநரந்தந் ……… ………*
தேங்காரளிமுரல்பாதிரிமதங்கின்றிரள்வகுளங் ……*
கோங்காசினிகொந்தார்செழுமந்தாரநெருங்கும் … ….*
பூங்காவையகன்றார்புலியூர்நன்னகர்கண்டார்… … …*

(இ-ள்) நீங்காதவளங்களையுடைய நீண்டமாவும் நாரத்தையுந்நி
றைந்தவண்டுகள் சத்திக்கின்றபாதிரியுந் தெங்குமகிழும் கோங்கும்
பலாவும் கொத்தார்ந்த செழுமையுள்ள மந்தாரமும் ஆகியமரங்கள்
நெருங்கிய பூஞ்சோலையைகடந்து சிதம்பரத்தைக்கண்டார்மணி
க்கவாசகரென்றவாறு. (௫௰)

சேணொன்றியமதிலும்பணிதிகழ்கோபுரநிரையுஞ் …*
சோணந்தருகும்பங்கிளர்துணைமாளிகைபலவுங் *
காணுந்தொறுமெழில்செய்வதுகண்டஞ்சலிகொண்டே
பூணுந்திருவருளன்பர்புகழ்ந்தாருண்மகிழ்ந்தார் *

(இ-ள்) உயர்ச்சிபொருந்திய மதிலும் சிற்பத்தொழிலின்மிகுந்
த கோபுரவரிசைகளும் சிவந்தகும்பங்கள் பிரகாசிக்கின்ற அனேக
உப்பரிகைகளும்பார்க்குந்தோறும் அழகினைச்செய்வதுகண்டு அஞ்
சலியாஸ்தராய்ப் புகழ்ச்சிசெய்து மகிழ்ச்சிகொண்டார் திருவருள்பூண
்ட அன்பராகிய மாணிக்கவாசகரென்றவாறு. (௫௧)

வேதந்தருமொலியுந்தொழும்விண்ணோர்கமதொலியும்
கீதந்தருமொலியுங்கிளர்முழவங்களினொலியும் .. …*
போதந்தருசிவஞானிகள்புகலாகமவொலியு .. .. …*
மோதுந்தமிழொலியுங்கடலொலிசெய்தனபுலியூர் …*

(இ-ள்.) பின்னும் அந்தச்சிதம்பரத்திலே வேதமோதுகின்றசத்
தமும் வணங்குந்தேவர்கள்சத்தமும் பாடுகின்ற கீதங்களின்சத்தமு
ம் பிரகாசிக்கின்றபேரிகைகளின்சத்தமும் அறிவினைத்தருகின்ற சிவ
ஞானிகள்சொல்லுகின்ற ஆகமங்களின்சத்தமும் ஓதுகின்றதமிழின்
சத்தமும் கடல்போலச் சத்தித்தனவென்றவாறு. (௫௨)

நிரையொன்றியமணிமாளிகைநெடுவீதிகளகலா… …*
வரையொன்றியவுயர்கோபுரமணிவாயில்புகுந்தே… ·*
புரையொன்றியசிவஞானமுனைக்குஞ்சிவநன்னூல் *
கரைகண்டவர்மணிமன்றெதிர்கண்டாரருள் கொண்டார்.

(இ-ள்.) வரிசைபொருந்திய அழகிய உப்பரிகைகளையுடையநெ

டிய வீதிகளைக்கடந்து மலைபோற்பொருந்திய உயர்ந்தகோபுரவாசல்வழிய கப்புகுந்து பொருந்தியசொல்லையுடைய சிவஞானத்தை விளக்குகின்ற சிவாகமங்களைக்கரைகண்டமாணிக்கவாசகர் சிற்சபையை எதிரேகண்டு அருள்பெற்றாரென்றவாறு. (௫௩)

பொன்னார்பொதுநின்றாடியபுனிதன்றனைமுடிமே ...*
லன்னாளடிவைக்கும்பரனாகும்படிகண்டார்...... .. *
மன்னாவுயிரன்னாய்மணிமன்றாசரணென்றே... .... ...*
சொன்னார்பலகாலன்பொடுதொழுதார்மிகவழுதார் .. *

(இ-ள்) பொன்னம்பலத்திலே நின்று திருக்கூத்தாடிய கடவுளைத்தம்முடையசிரசிலே அந்தநாளிலே திருவடிகளைச்சூட்டிய குருவுருவமாகக்கண்டு இந்தச்சகத்துக்கெல்லாம் அரசனே உயிருக்கொப்பானவனே சபாநாயகனே உனக்கு அடைக்கலமென்று சொல்லிப் பலதரம் அன்புடனேதொழுது மிகவும் அழுதார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௪)

விண்டேயிருகண்ணீர்விழவீழ்ந்தின்னடிமுடிமேற் *
கொண்டேயெழுந்தன்பொடுகுறைவாவருணிறையா*
வண்டேர்குழலுமைபங்கனைவண்டில்லையுளின்னே. . *
கண்டேனெனநற்பாடல்கருத்தாரவுரைத்தார்...... ...*

(இ-ள்) இரண்டுகண்களும் ஆனந்தபாஷ்பம்பொழியநமஸ்காரம்பண்ணி திருவடிகளை முடியிற்சூட்டிக்கொண்டு பின்பு எழுந்து அன்புடனேகுறைவில்லாத திருவருள்நிறைந்துவண்டுகள்மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவிபாகனாகிய கடவுளை வளத்தையுடைய தில்லைமாநகரிலே இப்பொழுதே கண்டேனென்று நல்ல பாடல்களாகிய கண்டபத்து மனங்கொள்ள உரைத்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௫)

குன்றாவருண்மூலந்திகழ்குறியாகியசுடரு .. ........ ...*
மன்றாடியவெளியூடுமகிழ்ந்தாடியவொளியு............*
மொன்றாகியவனுபூதியிலுற்றார்செயலற்றார் .. ..... .. *
நின்றாரசைவில்லாவொருநிலையோவியமானார்...... ... *

(இ-ள்.) குறைவில்லாத கிருபையையுடைய திருமூலஸ்தானத்திலிருக்கும் சிவலிங்கமாகிய சோதியும் பொற்சபையாகிய சிதாகாசத்திலேமகிழ்ந்து நிருத்தஞ்செய்கின்ற சோதியும் ஒன்றென்றுசொல்லும் அநுபூதியிலிருந்து ஒருசெயலுமில்லாதவராய் அசைவற்ற ஓருசித்திரம்போலானார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௬)

மைகால்குழலுமைபங்கினன்வழிபாடுமறந்தே .... .... *
கைகாலசைவிலதாயினகண்ணுஞ்சிமிழிலையாச் ... .....*

செய்காரியமென்னேனுவீதுதெருளாமருளென்று.......
மெய்காவலர்மணிமன்றைவிடப்போமினியென்றார்

(இ-ள்.) அப்போது கருமையைவிரிக்கின்றகூந்தலையுடைய உமா தேவிபாகராகிய சபாநாயகரை வழிபடுவதுமறந்து கையுங் காலும் அசைவில்லாமலிருக்கின்றன கண்ணுங்கொஞ்சமாயினும் இமைக்க வில்லை செய்யுங்காரியம் என்னேஇது தெளியாத மயக்கமாயிருக்கி ன்றதென்று மாணிக்கவாசகரை இனிஅழகிய சபையைவிட்டுப் போ மென்றார் மெய்காவற்காரர்களென்றவாறு. (௫௭)

(வேறு.)

பூண்டருள்கொண்டகாவல்புரிபவருரைத்தல்கேளாத் *
தாண்டவநிகழுஞானத்தன்மையின்றன்மைநாடி... *
காண்டருதுரியாதீதக்கழிபரத்தொளியின்மூழ்கி.. *
நீண்டதோர்தம்பமாகிநின்றனர்நெடிதுபோது... '...*

(இ-ள்) கிருபையைக்கொண்ட மெய்காவற்காரர் சொன்னதுகே ட்டுத் தாண்டவம்புரிகின்ற அறிவின்றன்மையினது பழமையை நா டிக் காணத்தக்க துரியாதீதமாகிய மிகுந்தபரத்தினுடைய ஒளியி லேமூழ்கிப் பரவசப்பட்டு நீண்டஒருதம்பமாகிநெடுநாழிகை நின் றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௮)

போமெனப்போகாரொன்றும்புகல்கிலர்பித்தங்கொண்டா
ராமெனக்காவலாளரஞ்சிநின்றிரங்குமெல்லைச் .. *
சாமுடற்குயிர்வந்தெய்துந்தன்மைபோற்குவிந்தகஞ்சத்
தேமலர்க்கரமேற்கொண்டுசிவசிவபோற்றியென்றார் *

(இ-ள்.)இவர்போமென்றால்போகார் ஒன்றும்பேசார் பயித்தியங் கொண்டவராகுமென்று மெய்காவற்காரர் பயந்துநின்று இரங்கும் போது இறந்ததேகத்திற்கு உயிர்வந்தடைந்த தன்மையைப்போ ல அஞ்சலிசெய்த தாமரைமலர்போன்றகைகளை மேற்கொண்டு சிவ சிவபோற்றியென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௯)

முன்னவன்செம்பொன்மன்றைமும்முறைவலங்கொண்டங்குத்
தன்னிகரில்லாமூலத்தலைவனைவணங்கிப்பின்ன... ... .........*
ரன்னையைப்பிகைத்தன்பாதமன்புடனிறைஞ்சியந்தப் .. *
பொன்னவிர்கோயின்மேற்பாற்புலீச்சரஞ் சென்றுசேர்ந்து

(இ-ள்) ஆதியாகிய கடவுளுடைய பொன்னம்பலத்தை மூன் றுதரம் வலங்கொண்டு அங்கேதனக்குநிகரில்லாத திருமூலஸ்தானக்க டவுளை வணங்கி பின்பு உமாதேவி திருவடிகளை அன்புடனே வணங் கி அந்தப்பொன்னொளியையுடைய கோயிற்குமேற்பக்கத்தில் திரு ப்புலீச்சரத்திலடைந்ததென்றவாறு. (௬௰)

வரந்தரவமர்ந்தநாதன்மலரடிவணங்கிநாகீச் ..........*
சரந்தனிலிருந்தவண்ணறன்பதமிறைஞ்சிநீங்கித்.... ....*
திருந்தியமறையோர்வாழுந் தில்லையம்பலஞ்சூழ் வீதிப்
பொருந்துழியமிர்தமானவாசகம்புகலலுற்றார் ...*

(இ-ள்.) வேண்டியவரங்களைத்தருதற்கு யெழுந்தருளிய அந்தக்க டவுளுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி அதற்கருகே திருநாகீச்சரத்திலிருந்த பரமசிவனுடைய பாதங்களைவணங்கிநீங்கித் திருத்தமாகியதில்லைமூவாயிரவர்வாழ்கின்ற சிதம்பரத்தைச்சூழ்ந்த வீதியிற்போகும்போது அமிர்தமாகிய திருவாசகஞ் சொலலத்தொடங்கினார் மாணிக்கவாசகரென்றவாறு. (கூக)

ஆடுமிக்குலாநற்றில்லையாண்டவன்றனைக்கொண்டென்னும்
பாடலைப்புகன்றுகோயிலிருவகைப்பதிகங்கூறி...... *
நாடுமச்சிவபுராணமொழிந்தநல்லகவன்மூன்று... ...*
நீடுமெய்த்தமிழுமன்பாலோதினர்நீதிமிக்கார்.........*

இ-ள்.) ஆடுங்குலாத்தில்லை யாண்டானைக் கொண்டென்னும் குலாப்பத்துப்பாடிக் கோயிற்றிருப்பதிகமுங்கோயின்மூத்ததிருப்பதிகமும்பாடிக்கீர்த்தித்திருவகவல்திருவண்டப்பகுதிபோற்றித் திருவகவல ஆகியமூன்றகவலும் அன்பினாலேபாடினார் நீதியின்மிக்கவராகிய மாணிக்கவாசகரென்றவாறு. (கூஉ)

கைவளைசிலம்பச்செம்பொற்கிங்கிணிகறங்கச்சூழ்ந்து......*
மைவளர்குழன்மேலவணடுமருண்டிசைசதிரண்டுபாட ....,..*
மெய்வியர்வரும்பவெம்போர்விழிக்கயல்புரட்டிஞாங்க .. *
ரிவ்வகைநின்றுசுண்ணமிடித்தனர்மடநதைநல்லார்...... *

(இ-ள்.) கைகளிலேயிருக்கின்ற சங்குவளையல்கள்சத்திக்கச் செம்பொன்னாற்செய்த கிங்கிணிகள் சத்திக்க மயிர்ச்சாந்துபூசியகரியகூந்தலின்மேல் வண்டுகள்மயங்கி இசையைப்பாடத் தேகத்தில்வேர்வையுண்டாக வெவ்வியபோர்செய்கின்ற கண்ணாகிய கயல்களைப்புரட்டிப்பக்கங்களிலே யிந்தவகைநின்று மாதர்களெல்லாம் திருப்பொற்சுண்ணமிடித்தார்களென்றவாறு. (கூஙு)

அத்திருவனையார்பாடல்கேட்டவரிசைத்ததாக.............*
மெய்த்தமிழருணன்குமிகுதிருச்சுண்ணமோதி.......... *
மைத்திகழ்கண்ணினாடுவாருதலுமங்கேபொய்தல் .......... . *
தத்தமிழமுபலுங்காதற்சிறுமியர்தம்மைக்கண்டார்.........*

(இ-ள்.) அந்தமாதர்களுடையபாடல்களைக்கேட்டு அவர்கள்சொல்லியதாக மெய்யாகியதமிழினால் நன்மைமிகுந்ததிருப்பொற்சுண்

ணம்பாடி மேகங்கள்பிரகாசிக்கின்ற சோலையிடத்தே வருமளவில்
அங்கே தங்கள்தங்களுக்குள்ளே விளையாடுகின்ற பெண்பிள்ளைகளை
ப்பார்த்தார் மாணிக்கவாசகரென்றவாறு. (௯௪)

கண்டபின்வறிதுகூறுங்கட்டுரைசிறிதுமற்றெம் ......... *
மன்றனையுரைமினீரென்றவரவருரைத்ததாக ........... *
வெண்டருதிருத்தெள்ளேணந்திருவுந்தியெழிற்றோணோக்கம்
பண்டிகழ்திருப்பூவல்லிப்பாடல்பொன்னூசல்சொன்னார் .. *

(இ-ள்.) பார்த்தபின்பு வீண்பேச்சுச் சிறிதுமில்லாமல் எமதுக
டவுளையேசொல்லுங்கள் நீங்களென்று அவரவர்கள் சொல்லியதாக
த் திருத்தெள்ளேணம்-திருவுந்தியார்-திருத்தோணோக்கம்-பண்கள்
விளங்குகின்றதிருப்பூவல்லி-திருப்பொன்னூசல்-பாடினார்மாணிக்க
வாசகரென்றவாறு. (௯௫)

ஆங்கொருசிறுமிதன்சீரன்னையைநோக்கிக்கூறுந் ........... *
தாங்கிசைமொழியேயாகத்தகுமலையீரைந்தோதி ...... ... *
ஞாங்கரின்முரலுந்தும்பிதன்னையுநயந்துநாதன் ...... ..... *
பூங்கழல்வழுத்தென்றுபுனிதர்கோத்தும்பிசொன்னார் ... *

(இ-ள்.) அங்கே ஒருபெண்சிறந்ததனதுதாயைப்பார்த்துச்சொ
ல்லும் தாங்கப்பெற்ற இசையையுடைய சொல்லென்னத்தக்க அன்
னைப்பத்துப்பாடிப் பக்கங்களில்பாடுகின்ற தும்பியைவிரும்பிப்
பார்த்துக்கடவுளுடைய திருவடியைத் துதிசெய்யென்றுதிருக்கோ
த்தும்பி சொன்னார் மாணிக்கவாசகரென்றவாறு. (௯௬)

பொங்கரினிடையேவாழும்பொற்பிளங்குயிலேகூவி ... ... *
யிங்கழையெம்பிரானையென்பதுங்கிளியைநோக்கித் .... ... *
திங்களஞ்சடையோன்பாதஞ்செப்பெனத்தசாங்க மென்னுந்
தங்கிசைதமிழுஞ்சொன்னார்தன்னிகரொருவரில்லார் .... ..... *

(இ-ள்) சோலையின் மத்தியத்திலே வாழ்கின்றகுயிலைப்பார்த்து
அழகியஇளங்குயிலேஇங்கேஎமதுகடவுளைக்கூவியழையென்பதாகி
ய குயிற்பத்தும் கிளியைப்பார்த்துச் சந்திரனைத்தரித்த கடவுளைச்
சொல்லென்னும் திருத்தசாங்கமும் பாடினார் தனக்குநிகரொருவரு
மில்லாத மாணிக்கவாசகரென்றவாறு. (௯௭)

மண்ணிடைத்தம்மையாண்டவடிவினையன்றிமற்றோ ....... *
ரண்ணலைக்கடவுளென்பார்க்கஞ்சுதும்வினையேயென்றும்... *
பண்ணுறச்சிறந்தசெய்யுள்பகர்ந்துநற்பன்னசாலை ...... *
யொண்ணகர்ப்புறம்புசெய்தங்கிருந்தனருண்மைமிக்கார்... *

(இ-ள்) பூமியிலே தம்மை யடிமைகொண்ட கடவுளையல்லாமல்
வேறொருவரைத் தெய்வமென்பதற்கு அஞ்சுகின்றேன் வினையை

யுடையேனென்னும் சிறந்தபண்ணையுடைய அச்சப்பத்துப்பாடியபின்பு அந்தநகர்ப்புறத்திலே ஒருபன்னசாலைசெய்து அங்கிருந்தார் உண்மையிலேமிக்க மாணிக்கவாசகரென்றவாறு. (௬௮)

பரம்பரப்பொருளாமிந்தப்பைந்தமிழோதிவையம் ... ...*
பெரும்பிறப்பகலவந்துபிறந்தவர்செய்தியெல்லா ......*
மிருந்தநற்றெருக்குதோறுமியம்பிநன்மகிழ்ச்சியெய்தி.....*
யருப்புகழ்த்தில்லையுள்ளாரியாவருமதிசயித்தார்... ..... . *

(இ-ள்) உலகமானது வேதாந்தப்பொருளாகிய இந்தத்திருவாசகத்தமிழைச்சொல்லிப் பெரியபிறப்பினின்று நீங்கவந்து திருவவதாரஞ்செய்த மாணிக்கவாசகருடைய செய்தியனைத்தும் அரியபுகழையுடைய தில்லையிலுள்ளவர்யாவரும் தங்கள்கூட்டங்கள்தோறுஞ் சொல்லி நல்லமகிழ்ச்சிபெற்று அதிசயித்தாரென்றவாறு. (௬௯)

தத்துவ முடிவிலாடுந்தாணடவந்தம்முட்கண்டு...... ....*
நித்தலுஞ்சென்றுமன்றினிமலனையன்பாலேத்தி........ ..*
யித்திறமையர்தில்லையெல்லையில்வைகலிப்பாற்..........*
புத்தனைவாதில்வென்றபுகழினையுரைத்தல்செய்வாம் .........*

(இ-ள். முப்பத்தாறு தத்துவத்தின் முடிவிலேசெய்கின்ற சடாநாயகரது நிருத்தத்தைத் தமக்குள்ளேகண்டு நித்தியம்போய் அந்த கடவுளைப் பத்தியினாலே வணங்கி யிந்தப்பிரகாரம் மாணிக்கவாசகர் தில்லைமாநகரத்து எல்லையிற்செய்த பன்னசாலையி லெழுந்தருளி யிருக்க இப்பால அவர் புத்தனைவாதிலேசெயித்த கீர்த்தியைச் சொல்லுவாமென்றவாறு. (௭௰)

திருவம்பலச் சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௱௭௰.

---

## புத்தனைவாதில்வென்றசருக்கம்.

(வேறு.)

தாழுநீடுவேணியண்ணறாள்விடாவொர்மாதவ .........*
னூழினாலவண்மையுண்மையாயுநேயநெஞ்சினான் .. *
சோழநாடுகண்டுதில்லைதொழுதுபின்புபழுதிலா ...*
வீழநாடுதன்னைநாடவெண்ணியங்குநண்ணினான் .. *

(இ-ள்.) தாழ்ந்து நீடியசடாபாரத்தையுடைய பரமசிவனுடைய இரண்டுபாதங்களையும் விடாத ஒரு தபசியானவர் சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ளவளத்தை ஆயத்தக்க இச்சையுள்ள மனமுடையவராய்ச் சோழநாட்டைக்கண்டு தில்லைமாநகரை வணங்கிப் பின்பு குற்றமில்லாத ஈழதேசத்தைப்பார்க்க வேண்டுமென்று நினைத்து அங்கே போயினரென்றவாறு. (௧)

# ௱௨௨ புத்தரைவாதில்வென்றசருக்கம்.

நண்ணுமாதிமாதவனலங்கொளீழநாடனு ................ *
மண்ணருனிருந்தவூரடைந்துசேரிடந்தொறு ......... *
மெண்ணிலாதகாலம்வாழ்கதில்லைமன்றமென்றுகூ ...... *
றுண்ணிலாவுமன்பினோடுரைக்கவேதொடங்கினான் . .. *

(இ-ள்) அப்படிப்போன தபசியானவர் முதன்மைபெற்ற நன்மையைக்கொண்ட ஈழநாட்டரசன்-இருந்தவூரைச்சேர்ந்து மிகுந்த உள்ளன்பினாலே தானிருக்குமிடந்தோறுஞ் சிதம்பரம் அளவில்லாதகாலம் வாழ்கவென்று சொல்லத்தொடங்கினானென்றவாறு. (௨)

சென்றுசேரிடந்தொறுஞ்சிறந்தசெம்பொனம்பல ...*
மென்றுகூறிவைகுநாளிலீழநாடன்முன்புபோய் .... *
நன்றிலாதமூடர்தாநயந்திறைஞ்சிமன்னனே ... ... *
யொன்றியாமுரைத்துமென்றுயந்திவ்வாறுகூறினார் .. *

(இ-ள்) தான்போய்ச்சேருமிடந்தோறுஞ்சிறக்கப்பெற்றபொன்னம்பலம்வாழ்கவென்றுசொல்லியிருக்குநாளில அங்கேயிருக்கும் நன்மையில்லாத மூடராகியபுத்தர் ஈழதேசத்துராஜாவுக்கெதிரேபோய் நயப்புடன்வணங்கி அரசனேயொன்றுகேள் நாம்சொல்லுகிறோமென்று மகிழ்ச்சியுடன் இந்தப்படிச் சொன்னார்கள் என்றவாறு. (௩)

ஒற்கமிற்றிருத்தனுமொருத்தநின்னகர்க்குளா ......... .. ... *
னற்கலன்களக்குமாலைதானுமுண்பதையமே................ *
நிற்கினுமிருக்கினுநிலாவுசெம்பொன்மன்றெனுஞ் ........* 
சொற்கிளர்ந்துரைக்குமென்றுசொல்லிமுன்வணங்கினார் ..... *

(இ-ள்.) குறைவில்லாத திறமையுடையவனாகுமொருத்தன் இந்நகரிலேயிருக்கின்றான் அவனுக்காபரணம் ருத்திராக்ஷமாலிகை அவன் நாள்தோறும்புசிப்பது பிக்ஷைநின்றாலும் இருந்தாலும் பிரகாசத்தையுடையபொன்னம்பலமென்னுஞ்சொல்லைச்சொல்லுகிறானென்று முன்னேவணங்கினார்களென்றவாறு. (௩)

(வேறு.)

இன்றிங்கவனைக்கொணர்வீரென்றிசைத்தானிருபனுங்கவருஞ் ..... *
சென்றன்புடையாய்வருகவுனை யழைத்தான்றிறன்மன்னவனென்ன
நன்றென்பதுவுந்தீதுமிலாநாளுட்பலிபெற்றுண்பதொழிந் ...... *
தொன்றுங்கருதாருடன்கருமமுளதோவேந்தற்கெனவுரைத்தான் *

(இ-ள்) அவ்வரசனானவன் இன்று இங்கே அவனைக்கொண்டுவாருங்களென்று சொன்னான் அவரும்போய் அன்புடையவரே உம்மையரசனழைக்கின்றான் வாருமென்றார் அதற்குஅவர்சொல்லுவார் நாள்தோறும் நன்மையுந்தீமையுமில்லாத பிச்சையெடுத்து உண்பதல்லாமல் ஒன்றும் நினையாதவர்களிடத்தும் அரசனுக்குக் காரியமுண்டோவென்றானென்றவாறு. (௪)

ஊரிற்பலிகொண்டுண்கினுமற்றொன்றுங்கருமமிலதெனினும்
பாரிற்பயில்வாருயிர்புரத்தல்பாரம்நிருபர்க்காதலினால் .... *
சேரிற்கமழ்ந்தாமம்மரசன்றன்பால்வருதல்வேண்டுமெனச் *
சீரிற்றிகழ்வேற்றூதருடன்சென்றானென்றுந்தீமையிலான் *

(இ-ள்) ஊரிலேபிக்ஷையெடுத்துண்டாலும் காரியமொன்றுமில்லை யானாலும் பூமியிலேயிருக்கின்றவர்களுடைய உயிரை ரட்சித்தல் அரசர்களுக்குப் பாரமாகும் ஆதலினால் கமழுகின்ற வேராற்செய்த மாலையையுடைய எங்களரசனிடத்திலே வரவேண்டுமென்று சொல்ல நல்லதென்று சிறப்புவிளங்கிய வேலையுடைய தூதருடனேபோனார் தீங்கொன்றுமில்லாத தபசியானவரென்றவாறு. (௬)

முந்துபிடகமூன்றுணர்ந்து செயிர்நான்கொழிந்துமூதுசீல
மைந்தும்புனைந்துபார்மீதையாறைந்தடக்குமியல்புடையோன்
கந்தங்கெடுத்தன்முத்தியெனக்காட்டுங்குரவனிருப்பவுடன் .... *
சந்தஞ்சிறந்தபுயநிருபனிருந்தான்றானைபுடைசூழ ..... *

(இ-ள்.) ஆதியாகியபிடகநூல்மூன்றுமறிந்து நான்குகுற்றமும்நீங்கிச்சீலமைந்துந்தரித்துக்காமாதியாறும்பஞ்சேந்திரியங்களும் அடக்கப்பட்டஇயல்பையுடையவனும்பஞ்சகந்தமுங்கெடுவதுமுக்தியென்றுகாட்டுகின்றபௌத்தாசாரியன் தன்னுடனேயிருக்கச்சேனைகள் புடைசூழ அழகுசிறந்தபுயத்தையுடைய புத்தராசனுமிருந்தானென்றவாறு. (௭)

உடுக்குந்தனிவெண்கோவணமு மொளிர்பொக்கணமுமாத்திரையு
மெடுக்குஞ்சதங்கைநெடும்பிரம்புமிலகுந்திலதத்திருமுகமு ... *
மடுக்குஞ்சிறுபுன்முறுவலுநின்றசையுஞ்சடையுங்கண்டரசன் ... *
றிடுக்கங்கொளவந்தருகாகவிருந்தான்றிருவம்பலமென்று. .. .... *

(இ-ள்.) அப்போதுதபசியானவர் உடுக்கப்பட்டஒருவெள்ளைக் கோவணமும்பிரகாசிக்கப்பட்டகபாலமும் சதங்கைகட்டியநெடிய பிரம்பும் திலதப்பொட்டணிந்ததிருமுகமும்சிறியபுன்சிரிப்பும்அசைகின்றசடையும்பார்த்து அரசன்றிடுக்கிடவந்துஅருகேயிருந்தார்திருவம்பலமென்றுசொல்லி யென்றவாறு. (௮)

இருக்குந்தலைவன்றனைநோக்கியிப்போதிருவம்பலமென்றிங் ...... *
குரைக்குந்தகைமையெவன் கொலெனவுலகாள்பவனுக்கவனுரைப்
பான் பெருக்கும்புகழார்திகழ்வளவன்பிரியாவிருட்பேரருளா
ற்புரக்குந்திருநாட்டறந்தழைக்கும்புலியூரொன்பதொன்றுளதால்

(இ-ள்.)இப்படியிருந்தபோதனைப்பார்த்து இப்போது நீர்திருவம்பலமென்று இங்கேசொல்லுந்தன்மையென்னவென்று வினவஅவ்வரசனுக்கு அவர்சொல்லுவார்செல்வத்தை அதிகரிக்கச்செ

 புத்தரைவாதில்வென்றசருக்கம்.

ய்யுங்கீர்த்தியினாலேபிரகாசிக்கின்றசோழராஜாவானவன்பிரியாததன்னுடையகிருபாநோக்கங்களாலே ரட்சிக்கின்ற சோழநாட்டிலேசிதம்பரமென்றொருஸ்தலமுண்டு என்றவாறு. (௯)

அந்தப்பதிமுன்தில்லைவனமஃதேபுவனமனைத்தினுக்கு *
முந்தக்கிளருந்தெய்வதலமதனான்மூலதானமதா *
மிந்தப்புவிக்குநாப்பணெனவிலங்கும்பொதுவாமிடமதனிற்
சந்தத்தனத்தாளுமைகாணத்தலைவன்றிருத்தாண்டவம்புரிந்தான்.

(இ-ள்.) அந்தஸ்தலம் முன்னேதில்லைவனம்அதுவே திரிபுவனத்துக்குமுன்னே உண்டாகிய தெய்வஸ்தலமாம் அதனால் மூலஸ்தானமென்றுசொல்லலாம் இந்தப்பூமிக்குநடுவாகப்பிரகாசிக்கின்றசிற்சபையிலே சந்தனம்பூசப்பட்ட ஸ்தனத்தையுடைய உமாதேவி காணச் சபாநாயகர் நிருத்தஞ்செய்தாரென்றவாறு. (௰)

மன்னுந்திறலான்மனுமைந்தன்வடிவிற்றொழுநோய்மாற்றி
நெய்ப், பொன்னங்கிரிபோலுருநல்கும்புனிதத்தடமுண்டத
ன்மூழ்கி, முன்னைப்புவிமேற்றவமொன்றுமுயலாதவருமைந்
துதொழி, லென்னுந்திருத்தாண்டவம்புரிதல்கண்டாலுலகிலி
னிற்பிறவார்.................................*

(இ-ள்.) நிலைபெற்ற திறலையுடைய மனுச்சக்கரவர்த்தி குமாரனாகிய இரணியவன்மனுடையதேசத்திலிருந்த குட்டநோயைநீக்கி நெடியமகமேருவைப்போலுந் திவ்வியதேகத்தைக்கொடுத்த பரிசுத்தமாகிய சிவகங்கையென்னும் ஒருதடாகமுண்டு முன்னேபூமியிலேயொருதவமுஞ்செய்யாதவரும் அதிலேமூழ்கிப் பஞ்சகிருத்தியத்திற்குக்காரணமாகிய நிருத்தத்தைத் தெரிசித்தால் அவர்கள்உலகத்திலேவந்து பிறவார்களென்றவாறு. (௰௧)

நண்ணும்பிறவியொழித்துயிர்க்குநலஞ்சேர் முத்திகொடுக்கு
மகற், கெண்ணுஞ்சமயக்கடவுளரில்யாமேவல்லேனெனப்ப
தமேல், வண்ணந்திகழ்பொற்கழலணிந்துமதுகைக்கொடியுங்
கட்டியருட், பெண்ணம்பிகைகண்காணநடஞ்செய்தானந்தப்
பெருந்தருக்கால் ................................ *

(இ-ள்) பொருந்திய பிறவியைநீக்கிஆத்மகோடிகளுக்கு நன்மையான மோக்ஷத்தைக்கொடுப்பதற்கு நினைக்கின்ற அனேகசமயதெய்வங்களில் யானேவல்லவனென்று திருவடிமேல்அழகுவிளங்கிய பொன்னினாற்செய்த வீரக்கழலையணிந்து வலிமையுடைய கொடியுங்கட்டி அந்தக்கர்வத்தால் அருட்சத்தியாகிய உமாதேவி காணநடனஞ்செய்தானென்றவாறு. (௰௨)

தேக்குஞ்சடிலமுடிக்கடவுளிருதாள்கருதாத்தீமனமும் ... *
வாக்குஞ்செயலுங்கொடியாருமொருகாற்பொன்னம்பலமெ
ன்னிலாக்கந்தருமஞ்செழுத்திருபத்தோராயிரத்தோடறுநூறு
நாக்கொண்டுரைக்குமதற்குநிகரொன்றென்குன்றாநற்புகழான் *

(இ-ள்) நிறையப்பெற்ற சடாமுடியையுடைய பரமசிவனுடைய இரண்டுபாதத்தைவணங்காத தீயமனமும் வாக்குஞ்செய்கையுமுடைய கொடியவர்களும் ஒருதரம் நிலைபெற்ற பொன்னம்பல மென்று சொன்னால் செல்வத்தைத்தருகின்றபஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத் தறுநூறுதரம் நாவைக்கொண்டு சொல்வதற்கு நிகரல்லவாமென்றார் குறையாத நல்லகீர்த்தியையுடைய தபசியானவர் எ-று. (௰௩)

நீறுந்திருவஞ்செழுத்துமிலாநிருபர்திருவம்பலமென்று .. ... . *
கூறும்பொருளிக்கிதுவாகுமென்றான்குன்றாமெனுங்குணத்தா .. *
ரேறும்பிடகமுமன்றுமாசெய்யுந்தலைவனல்லாது ..............*
வேறுங்கடவுளொன்றுளதோவென்றேபுத்தன் வெகுண்டுரைப்பான்.

(இ-ள்.) மலையென்று சொல்லுங் குணத்தையுடைய தபசியானவர் விபூதி பஞ்சாக்ஷரமில்லாத அரசனே திருவம்பலமென்று நாம் சொன்னதற்குப் பொருள் இதுவாகுமென்றார் அப்பொழுதேறுகின்ற பிடகாகமமென்றும் சொன்னதலைவனல்லாமல் வேறே ஒரு தெய்வமுண்டோவென்று கோபித்துச் சொன்னான் புத்த குருவானவனென்றவாறு. (௰௪)

சென்றேதில்லையெனும்பதியிற்சேர்வேன்வாதுசெய்தவன்ற
னின்றேநடிக்குங்கழலீர்நீடுங்கொடியுமீங்கறுப்பே... ...*
னென்றேகடவுள்புத்தனெனவுலகோரறியவுரைத்தந்த ...*
மன்றேபோதிநிழற்பெருமாள்பள்ளியென்னவழங்குவிப்பேன்

(இ-ள்) அப்படியானால் தில்லைமாநகருக்குப்போய் வாதுசெய்து அவரிருந்துநிருத்தஞ்செய்கின்ற பாதத்திலிருக்கின்ற வீரக்கழலையும் பிடிக்கின்றகொடியையும் அறுத்துப்போடுவேன் புத்தகுருவனைத்தவிர வேறுதெய்வமில்லையென்று அந்தச்சபையையரசமரநிழலிலிருக்கும் புத்தன்கோயிலென்று சொல்லும்படி வைப்பேனென்றான் புத்தகுருவானவனென்றவாறு. (௰௫)

இந்தக்கருமந்தினமூன்றில்யானேமுடிப்பனெனவெழுந்து
சந்தச்சிவிகைமேற்கொண்டுதன்றன்வணங்குங்கணஞ்சூழ *
நந்தக்கிளருந்திரைக்கடலுநாணுங்காடுமகன்றேகிப்.. .........*
புந்தித்துயரங்கொண்டொலலைசென்றான்புத்தன்புலியூரில்.*

(இ-ள்) இந்தக்காரியத்தைமூன்றுதினத்தில் யானேமுடிப்பே னென்று அழகியசிவிகையின்மீதிலேறிக்கொண்டு தன்னுடைய பா

தத்தைவணங்குகின்ற பௌத்தக்கூட்டங்கள்சூழ மிகவும் பிரகாசிக்கின்ற அலையையுடையகடலும் நாடும் காடும்நீங்கிப் புத்தியிலேவியசனங்கொண்டு சீக்கிரத்திலே புத்தகுருவானவன் சிதம்பரத்துக்குப்போயினா னென்றவாறு. (௰௬)

(வேறு.)

மன்னனுந்தனதுசெல்வமகட்குளமூகைநீங்கப் ... ..... *
பொன்னினம்பலத்திலேகவெண் பதுபொருந்தவுன்னித்
தன்னெடுந்தானைசூழ தனிப்பெருஞ்சிவிகையேறிச் *
சென்னிநன்னாடுசேர்ந்துதில்லையிலெல்லைபுக்கான் ...*

(இ-ள்) புத்தராஜனுந் தன்னுடைய செல்வம்போன்ற புத்திரிக்கு முன்னமே புண்டான ஊமைத்தன்மை நீங்கிச் சிதம்பரத்திற்குப் போகவேண்டு மென்பதை நினைத்துத் தன்னுடைய சேனைகள்சூழ ஒப்பற்ற பெரிய சிவிகையி லேறிக்கொண்டு சோழநாட்டில் வந்து தில்லைமாநகரத்துக்குவந்தா னென்றவாறு. (௰எ)

இங்கிவன்செல்லுமுன்னமெய்தியபுத்தனங்கி......... *
செங்கரன்றில்லையெல்லைச்சிவிகையினிழிந்துசென்று *
பொங்குதண்புனல்சேர்சென்னிப்புலீச்சரவரன்பொற்கோயி
றங்குசெங்கனகசாலத்தயங்குமண்டபத்திலானான்... . *

(இ-ள்) இந்தப்புத்தராஜன் வருதற்குமுன்னேவந்த புத்தகுருவானவன் அக்கினியைத்தரித்த சிவந்தகையையுடைய பரமசிவனுடைய தில்லைமாநகரத்து எல்லையின் முன்னே சிவிகையைவிட்டிறங்கி மிகுந்த குளிர்ச்சிபொருந்திய கங்கையைத்தரித்த சிரசையுடைய பரமசிவனது ஆலயத்திலே பொன்னினாற்செய்தமண்டபத்திலவந்து சேர்ந்தா னென்றவாறு. (௰அ)

ஆங்கவனிருப்பச்செம்மவரசனுமிறைஞ்சியேத்தி... *
யோங்கியமகிழ்ச்சிமெய்தியமர்ந்துழியுரகராசி... ... *
தாங்கியசடிலன்கோயிறன்னிலுட்கருமஞ்செய்வா .. *
ரீங்கிவர்வரவுகண்டேயாவருமொருங்குச்சேர்ந்தார் ...*

(இ-ள்) அங்கேயிருந்த புத்தகுருவைப் புத்தராஜன் வணங்கித் துதிசெய்து உயர்ந்தமகிழ்ச்சியடைந்திருந்தபோது சர்ப்பக்கூட்டத்தைமுடித்த சடையையுடையபரமசிவனதுகோயிலிலேபணிவிடைசெய்பவர்கள் இவர்கள் வருதலைக்கண்டெல்லாரும் ஒன்றாய்ச்சேர்ந்தார்களென்றவாறு. (௰௯)

(வேறு)

தத்தமனநொந்துகனன்றுனனவெகுண்டே .... ......*
சித்தமயர்வெய்தும்வகைசின்மொழிகள்கூறு........ *

வைத்தனுறைதில்லைநகரெல்லையையகன்றே......... ... *
வித்தகடிதேகுதிபோறேமெனவுரைத்தார் ...........*

(இ-ள்.) அப்படிசேர்ந்தவர்கள் தங்கள்தங்கள் மனநொந்து அக் கினியைப்போற்கோபித்து அவர்களாயாசங்கொள்ளும்படிசிலவார் த்தைகளைப்பேசிக் கடவுளிருக்கின்ற தில்லைமாநகரினெல்லையைவிட் டுப் புத்தனே சீக்கிரத்திலோடிப்போ இது நாங ்கள் பொறுக்கமா ட்டோமென்று சொன்னார்களென்றவாறு. (௨௰)

தார்வளவன் முன்னருயர்தக்கவுரைகொண்டே.........*
நீர்பரவுசைவநிலையன்றெனமொழிந்தே...............*
சீர்மருவுபுத்தனுயர்தெய்வமெனவிப்போ ......... ... *
தேர்பெறவுரைப்பதலதேகுவதிலென்றான்............ *

(இ-ள்.) வெற்றிமாலையையணிந்த சோழன்முன்னே உயர்ந்ததர் க்கம்பேசி நீங்கள் போற்றப்பட்ட சைவமார்க்கம் நிலையன்றென்று சொல்லிச் சிறப்புப்பொருந்திய புத்தனே உயர்ந்த தெய்வமென் று அழகுபொருந்திய இப்போது சொல்வதல்லாமற்போவதில்லை யென்றானென்றவாறு. (௨௧)

புத்தனவனிவ்வுரைபுகன்றபினெவர்க்கு ........ .........*
மித்திறமுரைக்குவமெனக்கடிதகன்றே .............. *
மெய்த்தவர்கள்வேதமுதலோர்பரிகலத்தோர் ........ ...*
தத்தமனைதோறுமிதுசாற்றினர்களன்றோர்............*

(இ-ள்.) புத்தகுருவானவன் இந்தவார்த்தையைச்சொன்னபின்பு யாவர்க்கும் இதைச்சொல்லுவோமென்றுசீக்கிரத்திலேஉண்மையா கியதபோதனர்களுக்கும் தில்லைமூவாயிரவர்களுக்கும் பரிகலத்தார் களுக்கும் அவரவர்கள்வீடுகள்தோறும்போய்ச்சொன்னார்கள் எ-று

புண்ணுழையும்வேலிகர்புகன்றமொழிகேளா .... ... *
வண்ணலுறைகோயிலிடையாவருமடைந்தே.......... *
வண்ணமணிமண்டபமதெய்திவருபுத்த...............*
னெண்ணமதுகேட்குவமெனக்கடிதுசென்றார் .. ...*

(இ-ள்.) புண்ணிலே வேல்நுழைந்ததுபோல இவர்களெல்லாஞ் சொன்னசொல்லைக்கேட்டுச் சபாநாயக ரெழுந்தருளியிருக்கின்ற கோயிலிலெல்லாரும்போய் அழகியரத்தினம்பதித்தமண்டபத்தி லிருக்கின்ற புத்தகுருவினுடைய நினைப்பென்னவென்றுகேட்போ மென்று சீக்கிரத்திற்போனார்களென்றவாறு. (௨௩)

தெய்வநரரானவர்கள்செல்லவெதிர்வாரா ................ *
மெய்புணர்வில்புத்தனெவருக்குமிபலசொல்லா.......... *

வுய்வதறியாதவொருநீபயமிலாதே ..................*
யிவ்வகையிருந்தமதியாமையெதுவென்றார் .... . *

(இ-ள்.) தெய்வத்தன்மையையுடைய தில்லைமூவாயிரவர் போக வெதிர்கொண்டு வாராத உண்மைஞானமில்லாத புத்தனைக் கோபித்துப் பலபேச்சுகள்பேசிப் பிழைக்கும்வகையறியாத நீ இங்கேயஞ்சுதலிலாமல் மதியாமலிருந்த தன்மையென்னென்று கேட்டார்களென்றவாறு. (௨௪)

அங்கமறையாகமபுராணமவையாலே.............. *
நுங்கடவுளேகடவுளென்றுநுவல்வீரோ ............ *
லெங்கடவுளேகடவுளென்றுநவிலவேண்டா............*
னிங்கெனெதிர்கூறுமெனவேயவனுரைத்தான் ...... *

(இ-ள்.) ஆறுசாஸ்திரமும் நான்குவேதமும் இருபத்தெட்டாகமமும் பதினெண்புராணமும் ஆகிய அவைகளாலே உங்களுடைய தெய்வமேதெய்வமென்று சொல்வீர்களானால் எங்கள் தெய்வமே தெய்வமென்று யான்சொல்லுமேவென் இங்கேயென்னெதிரே சொல்லுமென்றுசொன்னான் புத்தகுருவென்றவாறு. (௨௫)

போற்றுமறையந்தணர்கள்புத்தனைவெகுண்டே...... *
தோற்றனையெனக்கிலைநூர்சொல்லவுனைவெல்வோ... *
மாற்றமினியுன்னுடனுரைக்குமதுமற்றோர் ......... *
சேற்றினெதிர்கல்லெறிதல்செய்வதலதுண்டோ ......*

(இ-ள்.) யாவராலுந்துதிக்கப்பட்ட தில்லைமூவாயிரவர்கள் இதுசொன்னபுத்தகுருவைப்பார்த்து கோபித்துஉன்னைவித்துவான்கள் தோற்றாயென்று சொல்லும்படிசெயிப்போம் இனிஉன்னுடனே பேசுவது சேற்றின்மேல் கல்லெறிவதுபோலல்லாமல வேறுண்டோவென்றார்களென்றவாறு. (௨௬)

நன்றிதருவாருமொருவ்ரிகுறைசெய்தா .............. *
னின்றதன்வெகுட்சியைநிறுத்தல்கடனுமா ............ *
லின்றிழியுநின்னுடனிகழ்ச்சியெனினுஞ்சீ.............*
ரொன்றுமிலையானவுனையோருரையிலவெல்வோம்...*

(இ-ள்.) ஒருத்தருக்குநன்மையைச் செய்யப்பட்ட பெரியோர்களும் ஒருநாயானதுகுலைத்தால் அங்கேநின்று அதன் கோபத்தை ஆற்றுவது முறைமையாகுமென்பார் ஆதலால இன்று இழிவினையுடைய உன்னோடும்பேசுகிறது நமக்குத் தகாதகாரியமானாலும் சிறப்பொன்றுமிலலாத வுன்னை ஒருசொல்லிலே செயிப்போமென்றார்கள் தில்லைமூவாயிரவரென்றவாறு. (௨௭)

மிக்கதிறன்மன்னவருமெய்யுணர்வினோருந் .... ......*
தொக்கசபைமுன்னர்நமதர்க்கவுரைசொன்னாந் .. .... *

றக்கதெனலாமிதுதகாதிதுவென்று .... .............*
லெக்கலைகளும்வல்லயிதேகருமமாமால்......... .......*

(இ-ள்) மிகுந்த திறலையுடைய அரசர்களும் மெய்யுணர்வினையு
டைய பெரியோர்களுங்கூடியிருக்கின்ற சபையெதிரே நம்முடை
யதர்க்கவார்த்தையைச்சொன்னால் இதுதக்கது இதுதகாதென்று அ
வர்கள் சொல்லுவார்களானால் எந்தக்கலைகளும்வல்லவிதுவேகாரியமா
குமென்றார் தில்லைமூவாயிரவரொன்றவாறு. (௨௮)

உத்தரமுரைக்கவறியாதுபுலியூரர்... ...... ...... *
புத்தனைமுனிந்தனர்புடைத்தனர்களென்றே... ......*
யித்தலமுரைத்துவிடுமென்றுவளமன்பான் ........ *
மெய்த்தவருரைத்தெழுதுமோலையைவிடுத்தார் ...*

(இ-ள்) உத்தரஞ்சொல்லமாட்டாமல் தில்லைமூவாயிரவர் புத்தகு
ருவைக்கோபித்தார்கள் அடித்தார்களென்று இந்தவுலகஞ்சொல்லு
மென்று சேரராஜனை வரும்படி ஒரு ஓலை யெழுதிவிட்டார்கள்
இவர்களெல்லாமென்றவாறு. (௨௯)

அந்தணர்பெருந்தவரருங்கலையுணர்ந்தோர்... ... ...*
வந்தணுகுநாளைமணிமன்றுதொழவென்றே ...... . *
புந்திமகிழோலைபலபோக்கியபின்வெய்யோன் ..... *
முந்துறவொளித்தனன்முளைத்தனனிராவோன் .... . *

(இ-ள்.) பிராமணர்களும் பெரியதபோதனர்களும் அரியகலைஞ்கி
யானத்தில்வல்லவரும் நாளைச்சிதம்பரத்தைத் தெரிசிக்கவந்து சே
ருமென்றுபுத்திமகிழும்படியாகப்பலவோலைகளெழுதிவிட்டார்கள்
அப்போதுசூரியன்மறைந்தான் சந்திரனுதயமானான் எ-று. (௩௰)

(வேறு.)

துங்கவானென்னுமாதின்சுடர்நுதற்றிலதமென்னக்...*
கங்குலாமடந்தைபார்க்குங்கவின்கொள்கண்ணாடியென்னச்
சங்கவார்குழையாரிட்டதரளவெண்கவிகையென்னத் *
திங்கண்மாகடவுட்டோன்றச்சிறந்ததுஞாலமெல்லாம் .*

(இ-ள்) உயர்ந்த ஆகாசமாகிய மங்கையினுடைய ஒளிவிளங்குகி
ன்ற நெற்றியிலணிந்த திலதப்பொட்டுபோலும் இரவாகிய மங்கை
யானவள் பார்க்கும் அழகுபொருந்திய கண்ணாடிபோலும் நெடி
யசங்கக்குழையையுடைய பரமசிவனுக்கிட்ட ஒருவெள்ளியமுத்து
க்குடைபோலும் சந்திரன்தோன்ற உலகமெங்கும் சிறப்புப்பெற்ற
து என்றவாறு. (௩௧)

இன்றொருதினமுந்தேராவிங்கிருநாளையாங்க... ... *
ளொன்றனதுயர்ச்சியின்மைகாட்டுவோமுலகிற்சென்று *

 புத்தனைவாதில்வென்றசருக்கம்.

நன்றிகொண்மனையிற்சென்றேயாருநல்லுணவுமாந்தி.*
யன்றிருண்மேன்மையாளரருந்துயில்பயிலுங்காலை . *

(இ-ள்.) இன்றொருபொழுதுமாத்திரம் புத்தனேயிங்கிருப்பாய் யாங்கள் நாளை உன்னுடையதாழ்வை உலகத்திற்குக் காட்டுவோமென்று நன்மையைக்கொண்டவீட்டிற்குப்போய் அறுசுவையுந்நிறைந்த நல்ல உணவையுண்டு அன்றிராத்திரி மேன்மை பொருந்தியவர்களெல்லாம் நித்திரைசெய்யும்போதென்றவாறு. (௫௨)

அழகுறமன்றிலாடுமையர்கைப்பிரம்புதாங்கித் .... ....*
தழைசடைமுடியுமேனிசாத்தியநீறுமாகி.... ... .. ...*
விழைதருவடிவங்கொண்டுவெளிப்படக்கனவில்வெய்யோ
னெழுவதன்முன்னரெய்தியாவர்க்குமிதுபுகன்றார் . *

(இ-ள்) அழகுபொருந்திய பொன்னம்பலத்திலே நிருத்தஞ்செய்கின்ற சபாநாயகரானவர் கையிற்பிரம்புகொண்டு தழைந்தசடைமுடியும் திருநீறணிந்ததிருமேனியும் உடையவராய் எல்லாரும்விரும்புகின்ற திருவடிவங்கொண்டு சூரிய உதயமாகுமுன்னேவந்துகனவிலே எல்லார்க்கும் இதுசொன்னாரென்றவாறு. (௫௩)

வருந்துவதொழிமினம்மூரெல்லையில்வைகுமெய்யன்பா *
விருந்தனன்வாதவூரனிவ்வுரைகேட்டபோதிற் ......*
பொருந்தியதர்க்கநூலாற்புத்தனைவெல்வானின்னே . *
யருந்தவமுடையநீர்போயழைத்திடுமவனையென்றார் *

(இ-ள்) வருந்துவதையொழியுங்கள் நம்முடைய தில்லைமாநகரத்து எல்லையில் திருவாதவூரனாகிய மாணிக்கவாசகனிருக்கின்றான் இந்தச்செய்தியைக்கேட்டால் பொருந்திய தர்க்கசாஸ்திரத்தைக்கொண்டு புத்தனைவாதுசெய்து வெல்வான் ஆதலாலிப்பொழுதே அரியதவத்தையுடைய தில்லைமூவாயிரவரே நீங்கள்போய் அவனையழையுங்களென்றார் சபாநாயகரென்றவாறு. (௫௪)

கண்டனர்கனவுதன்னில்விழித்தனர்கனகமன்றி ... ... *
லொண்டொடிபாகனன்பாலுரைத்ததுகருத்திலாய்ந்து*
கொண்டனர்மகிழ்ச்சிசெங்கைகுவித்தனர்முடியிற்கோயின்
மண்டபமிசையிலெல்லாமாந்தரும்வந்துதொக்கார்... *

(இ-ள்) இப்படிசொற்பனத்திலே கண்டார்கள் பின்பு விழித்தார்கள் பொன்னம்பலத்திலே உமாதேவிபாகராகியசபாநாயகர்அன்பினாலே சொல்லியதைக்கருத்திலாராய்ந்துமகிழ்ச்சிகொண்டார்கள் சிரசின்பேரிலேசிவந்தகையைக்குவித்தார்கள் கோயின்மண்டபத்திலே எல்லாரும்வந்துசேர்ந்தார்களென்றவாறு. (௫௫)

புல்லறிவுடையபுத்தன்புகன்றதற்கிரங்கிப்பின்னை... ...*
யெல்லையில்கருணையான்வந்திருங்கனவதனிலெய்திச் .... *

சொல்லியமொழியினாலேசோதிகொண்முகத்தராகி ...*
வல்லிருட்கிடைந்துவெய்யோன்வரவிரிகமலமொத்தார்*

(இ-ள்.) அற்பவறிவையுடைய புத்தகுருசொன்னபேச்சுக்கு இரக்கமுற்றுப்பின்பு அளவில்லாதகிருபையினாலே கடவுள் கனவிலே வந்துசொல்லியசொல்லினாலே முகமலர்ச்சியுடையவராய் இருளுக்கு ஒதுங்கிப்பின்பு சூரியன்வர விரிந்ததாமரைமலரையொத்தார் தில்லைமூவாயிரவரென்றவாறு. (௫௬)

தெய்விகமானமன்றிற்றிருநடம்புரியுநாதன்...........*
றைவருநீறுஞ்செய்யசடையுநற்பிரம்புமாக .. ........ *
மைவிரிகங்குற்காலைவந்துநன்மகிழ்ச்சியெய்த .. ......*
விவ்வகைமொழிந்தானென்றேயாவருங்கனவுசொன்னார்*

(இ-ள்) தெய்விகமானசபையிலே திருநடனஞ்செய்யுஞ் சபாநாயகர் விபூதிபூசிக்கொண்டுசிவந்தசடையும்நல்லபிரம்பையுமுடையராகக்கரியநிறத்தையுடைய இராத்திரியில்எழுந்தருளி நலமகிழ்ச்சியடைய இப்படிஅனுக்கிரகஞ்செய்தானென்று யாவருந்தாங்கள் கண்ட கனவைச்சொன்னார்களென்றவாறு. (௫௭)

அத்தனைமன்றுளாடுமையனைவியந்துகூறித்..........*
தத்தமிலன்புகூர்ந்துதனித்துளம்வருத்தநீங்கி.........*
மெய்த்தவவாதவூரர்மேவிடத்தணுகுவோமென்......*
றுத்தமபன்னசாலையொல்லையிற்குறுகினார்கள் ...... *

(இ-ள்) அத்தனாகியும் சிற்சபையிலேநிருத்தஞ்செய்கின்ற ஐயனாகியும் இருக்கின்ற சபாநாயகனை அதிசயித்துச்சொல்லித் தங்கள்தங்களுக்குள்ளே அன்புமிகுந்து தனித்து மனவருத்தநீங்கி மெய்த்தவத்தையுடைய மாணிக்கவாசகர் இருக்கின்றவிடத்துக்குப்போவோமென்று உத்தமமாகிய பன்னசாலையிற் சீக்கிரத்திற்போனார்கள் தில்லைமூவாயிரவரென்றவாறு. (௫௮)

கூடினர்பன்னசாலைகூரருட்குன்றையன்பா.......... *
னாடினர்நயந்துகண்டார்நளினவாசனத்தினெய்திப்...*
பீடினரிருந்தயோகம்பெயர்ந்தனர்வியந்துமன்றி *
லாடினருரைத்தவெல்லாமாங்கவர்க்கியம்பினார்கள்....*

(இ-ள்.) அப்படிபோனவர்கள் பன்னசாலையிலிருக்கின்ற சிறந்த கிருபாமலையாகிய மாணிக்கவாசகரைஅன்பினாலேதேடிநயப்புடனே கண்டார்களப்போது அவர்பதுமாசனத்தின்மேலிருந்தயோகம்நீங்கினார்அதுகண்டுசபாநாயகர்கனவினிடத்திலேவந்தனுக்கிரகஞ் செய்ததையெல்லாம் அவருக்குச்சொன்னார்கள்தில்லைமூவாயிரவரெ-று

(வேறு)

அந்தமொழியன்பினர்செவிப்புலனிலங்குதலு மன்றிறைபணி
ந்ததுணரா,வந்தவழிடன்கடிதுசென்றுதிருமன்றனைவணங்கிய

ருள்பெற்றுமயலாகு, சிந்தையரிருந்தமணிமண்டபமதெய்தி
யவர்தியமுகநோடிலிட்டோ, நந்துமெனவேயெழுனிகொண்டுமெ
றைவித்தெதிரிருந்தனர்நலங்கொளண்ணமேல் ....... .... *

(இ-ள்) அந்தத்திருவார்த்தையானது மாணிக்கவாசகர் செவியினி டத்திலேசேர்ந்தமாத்திரத்திலே முன்னமேகடவுள் சொல்லியிருப்ப தைநினைத்துவந்த தில்லைமூவாயிரவருடனேசீக்கிரம்போய் உழகியச பாநாயகனைவணங்கி கிருபைபெற்றுப் பௌத்தர்களிருந்தம ண்டபத்திற்குப்போய் அவர்கள் தீமையுள்ள முகத்தைப்பார்த்தால துன்பமுண்டாகுமென்று திரைபோட்டுக்கொண்டு ஆசனத்திலே யெழுந்தருளியிருந்தாரென்றவாறு. (சு௰)

மன்றுமறையந்தணர்புராணியருங்கலைகள்வல்லவர் நலோர்க ளுடனே, சென்னிவளவன்கடிதுவந்துதிருமன்றினெதிர்சென் றுதொழுகங்கணகலா, பின்றுமணி மண்டபமதெய்தியரு ளன் பனைவியந்தடிவணங்கியருகா, நன்னரணையின்புறமிருந்தன ன்விரிந்தகலைநாணிறைவுகொண்டமதிபோல... ... ......*

(இ-ள்) நிலைபெற்றவேதப்பிராமணர்கள்-புராணிகர் கலைஞான ம்வல்லவர்கள்பெரியோர்களுடனேசோழராஜா சீக்கிரத்தில்வந்துஅ ழகிய சபாநாயகனைத்தெரிசனம் பண்ணிக்கொண்டு அதைவிட்டுப் பிரகாசம்பொருந்திய ரத்தினமிட்டிழைத்த மண்டபத்திற்குவந்து கிருபையிகுந்த மாணிக்கவாசகர்திருவடியைவணங்கி அவருக்குப்ப க்கத்திலே பூரணசந்திரன்போல ஆசனத்திலிருந்தான்.எ-று. (சுக)

ஈழவளநாடனுமெழுந்தடிபணிந்துதிறையிட்டருறைநல்கியி றைவா,வாழியிகவாழியெனநின்றபொழுநங்கணைமன்னர்பெ ருமனுமகிழ ,மேழமிசைநல்லவிலையிலையிமணிக்கெனவிய ந்கருள்ருத்துபெருகு, சூழமவைதங்குமுழிடங்கயலிருந்தன ர்மருந்துகரிசொலவுமயலோர் ... ... .. ........ ...... ....*

(இ-ள்) ஈழதேசத்துராஜனுமெழுந்துசோழராஜாவைப்பணிந் துகுறையாகவிருந்ததிறையையுங்கொடுத்துஅரசனேயிகவும்வாழக் கடவாயென்றுதுதித்தபோதுஅந்தஅரசனை அரசர்க்கரசனுகியசோ ழராஜாவுஞ்சந்தோஷித்து நீகொடுத்தயானை மெத்தவும்நலலதாயின நீகொடுத்தரத்தினத்துக்குவிலையிலையென்று அதிசயித்துபக்கத்தி லிருக்கச்சொல்லிஎல்லாருஞ் சூழ்ந்திருக்குஞ்சபையினிடத்திலே ப க்கத்திலிருந்தார்கள்ஆலோசித்துசாக்ஷி சொலபவர்கள். எ-று. (சுஉ)

தில்லைநகரந்தணர்தபோதனர்சிறந்தினிதிருந்துழி விரிந்தசிவ நூல், வல்லவரிழிந்தகுணபுத்தனுடன்வாதுசெயுமன்றுசபை யாவைருவோர். தொலலைமறைதந்தவர் முருகுந்தன்முனிவோர

டூழுவர்சூழுமிருநான்குதிசைமேலெல்லையிலிருப்பவருருத்
திரர்கள்வித்தையரிராப்பகலிலங்குகதிரோர்........ *

(இ-ள்.) தில்லைமூவாயிரவர்களும் முனிவர்களும் சிறப்பாகவி ருக்கமாத்திரத்திலேமாணிக்கவாசகர் இழிவுபெற்றருணத்தையுடைய புத்தனுடனே வாதுசெய்யும்நிலைபெற்ற சபையைக்காணவருபவர்களியாவரென்றால் பிரமதேவன்-மகாவிஷ்ணு- சப்தமுனிவர்கள்-அஷ்டதிக்குப்பாலகர்கள்-உருத்திரர்கள்-வித்தையர்கள்- இரவும்பகலும்விளங்குகின்ற சந்திரசூரியர்களென்றவாறு. (௬௩)

(வேறு.)

தன்பெருந்தானைசூழவிருந்ததண்பொன்னிநாடன் *
றென்பெருந்துறைசூழ்நாடன்றிருவடிவணங்கிநின்று *
நின்பரஞ்சைவரு நிலைமையைநிறுத்தலின்னே... *
மென்பரம்புத்தருயிரைக்குறைப்பதென்றான்.

(இ-ள்) தன்னுடைய சேனைகளெல்லாஞ் சூழும்படியிருந்த சோழன் மாணிக்கவாசகர் திருவடிகளை வணங்கிநின்றுசுவாமிஉம்முடைய பரம் சிவனுடைய நிலைமையை உலகத்திலே நிறுத்துவது என்பாரம் புத்தனை உயிர்போக்குவதென்று னென்றவாறு. (௬௪)

ளைமணிவ்வகையிற்கூறவந்தபொய்ப்புத்தரெல்லா..... *
மூளமயர்மெய்த்தவாதவூரருமகிழ்ச்சியெய்திக் . *
களவுரைபகர்வாய்வந்தகாரணமுரைநீயென்னக் ... *
கிளர்செவிநுழைவேல்போலக்கேட்டவனிதனைச்சொல்வான்

(இ-ள்) இப்படிசோழராஜன் சொல்லவந்திருக்கின்ற அபத்தம்பேசும்புத்தர்களெல்லாம் மனமருளுமுடைய மாணிக்கவாசகர் மகிழ்ச்சியடைந்து புத்தனைப்பார்த்துத் திருட்டுவார்த்தைசொலலப்பட்டவனே நீவந்தகாரணத்தைச்சொல்லென்றுகேட்க வேலாயுதஞ்செவியிலே நுழைந்ததுபோல் அவ்வுரைகேட்ட புத்தனவன் இதைச்சொல்வானென்றவாறு. (௬௫)

மன்னுமங்கடவுளல்லான்மற்றிலைகடவுளென்றே ... ... *
யிந்நெடும்பதியிலெய்தியியம்பியிங்கெவருங்காணப் *
பொன்னினம்பலத்தேயெங்கள்புத்தனைவைத்தல்வேண்டி
நென்னவந்திருந்தேனிங்குவேறிலைநினைத்ததென்றான்.

(இ-ள்) நிலைபெற்றவெங்கள் தெய்வமல்லாமல் வேறேதெய்வமில்லையென்று இந்த ஆரிலைவந்து சொல்லி இங்கேயெல்லாருங்காணப் பொன்னம்பலத்திலெங்கள்புத்தனைவைக்க விரும்பி நேற்றேவந்திருக்கின்றேன் இதல்லாமல் யானினைத்தது வேறொன்றுமில்லையென்றான் புத்தகுரு வென்றவாறு. (௬௬)

# ஈடச புத்தனைவாதில்வென்றசருக்கம்,

என்றலும்வாதவூரெம்மிறைவர்புன்முறுவலெய்தி ... .. *
மூன்றவமொன்றுமில்லாய்மூயலிபமாவதுண்டோ .... *
நன்றதுநிற்கவுன்றனைற்பெருங்கடவுடானுஞ் ....... .. *
சென்றவனடியிற்சேருஞ்செய்தியுங்கூறுகென்றார் ... *

(இ-ள்) இப்படியென்று சொல்லியவளவில்மாணிக்கவாசகர்புன்னகைகொண்டு மூன்பிறப்பிலே தவமொன்றுமில்லாதவனே மூயல்யானையாவதுண்டோ நல்லது அதுநிற்க உன்னுடைய நல்லபெரிய தெய்வமும் ஆத்மாக்களவனடியிற்சேருஞ் செய்தியுஞ்சொல்லென்று கேட்டா ரென்றவாறு. (சஎ)

அண்ணலாருரைத்தமோதிலங்கவன்வெகுட்சியெய்திக் *
கண்ணிலாதவர்க்குவெய்யோன்கதிரொளிகாட்டலாமோ *
நண்ணலாவெங்களுகனற்புகழுரைக்கினன்று ..... ...*
வெண்ணிலயிரங்கள்வேண்டுமென்றுபிணிதுபுகன்றான் *

(இ-ள்) இப்படி மாணிக்கவாசகர் சொன்னவளவில் அந்தப்புத்தகுருவானவன் கோபமடைந்துகண்ணில்லாதவனுக்குச் சூரியகிரணத்தினொளியைக்காட்டக்கூடுமோ பொருந்துவதற்கரிதாகிய எங்கள் புத்ததேவனுடைய நல்லகீர்த்தியைச்சொல்ல வேண்டுமானால் நல்ல நாவானவைகள் பல்லாயிரம்வேண்டுமென்று பின்பு இது சொன்னானென்றவாறு. (சஅ)

அறந்திகழ்பிடகநன்னூலோதியன்புடையனாகிப்...... *
பிறங்குபல்யோனிதோறும்பிறந்துயிர்க்குறுதிசெய்து *
மறந்தருகோறலாதிநால்வகையொழிந்துமேன்மை...*
சிறந்துளபோதிநீழற்சேர்வனம்மிறைவனாவான்...... *

(இ-ள்.) தருமம்விளங்குகின்றநல்பிடகாகமமுஞ்சொல்லி அன்பையுடையவனாய்ப்பிரகாசிக்கின்ற அனேகயோனிகள்தோறும்பிறந்து ஆத்மகோடிகளுக்கு உறுதிசெய்து பொல்லாங்கைத்தருகின்ற கொலை-களவு-பொய்- கள்ளுணணல்-என்னும் நாலுகுற்றங்களையும் நீக்கி மேன்மை சிறந்திருக்கின்ற அரசமரநிழலிலே சேர்ந்திருப்பானெமதுகடவுளென்றவாறு. (சகூ)

மேவியகருவிச்சேருமுருவம்வேதனைகுறிப்புப்...... *
பாவனையுடன்விஞ்ஞானம்பஞ்சகந்தங்கள்கூடி... ... *
யோவில்பல்லுணர்வுண்டாக்கியொழிவதுபிறவித்துன்ப
மாவதுபொன்றக்கேடாயழிவதுமுத்தியென்றான்... *

(இ-ள்.) பொருந்திய கருப்பத்திற்சேருகின்ற உருவம்வேதனைக்குறிப்புப்பாவனைவிஞ்ஞானம்ஆகியபஞ்சகந்தங்களுங்கூடி ஒழிவில்லாத அனேக அறிவுண்டாய்நீங்குவது பிறவித்துன்பமாம் அதுநீங்கக்கேடாயழிவது மோக்ஷமென்றானென்றவாறு. (ருய)

வாதவூரண்ணலாரும்வண்புனற்பொன்னிநாடன் ...... *
நீலாமுகத்தினோக்கிச்சிறந்தருட்பார்வைநல்கிப் ... ... *
பேதையாயறிமால்கொண்டயிர்த்துரைபகரும்புத்தற் *
கேதுயாமின்றுசொல்வதென்றுபின்னிதுபகன்றார் ...... *

(இ-ள்.) அப்போது மாணிக்கவாசகரும் நீர்வளமிகுந்த காவேரி சூழ்ந்த நாடனாகிய சோழராசாவினது களங்கமற்ற முகத்தைப்பார்த்துக்கிருபாநோக்கஞ்செய்துஅறியாமையினால்மயக்கங் கொண்டு பயித்தியவார்த்தைசொல்லும் புத்தனுக்கு இன்று யாமென்னசொல்வதென்று பின்பு இதுசொன்னாரென்றவாறு. (௯௧)

தருமமுண்டென்றுநன்னூற்சாற்றினன்றலைவனென்னை
மருவியவுணர்வுண்டாகிமறைந்திடுங்கணத்திலென்னை *
பொருளுடனுரைநீர்தேடிப்புகலுமுனுணர்வுபோகு *
விருடருநின்னூல்சொல்வதெப்படிகூறல்வேண்டும் *

(இ-ள்.) தருமமுண்டென்று புத்தனானவன் பிடகநூல் சொன்னானென்றாய் பொருந்திய அறிவுதோன்றி க்ஷணநேரத்தில்மறைந்து போமென்றாய் சொல்லும்பொருளும் நீ தேடிசொல்லுமுன்னே உணர்வுகெட்டால அஞ்ஞானத்தைத்தருகின்ற உன்னூல்சொல்வது எப்படி சொல்லலென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௯௨)

ஆதலாலறநூலென்பதுனக்கிலையுயிர்கட்காகப் ... .. *
பேதமாய்யோனிதோறும்பிறந்தனனிறைவனென்றாய் *
தீதுசேரொருவர்மாலைத்தீர்க்கவந்தவர்கடாமும் .. *
பேதமாலைகொள்ளின்மால்போவதங்குள்ளதாமோ *

(இ-ள்.) ஆதலினாலே தருமசாஸ்திரமென்பது உனக்கில்லை ஆத்மாக்களுக்காக அநேகம் யோனிகள்தோறும் உன்கடவுள்போய்ப் பிறந்தானென்றாய் குற்றம்பொருந்திய ஒருவர்மயக்கத்தைத்தீர்க்க வந்தவர்களும் அதிகமயக்கத்தைக்கொண்டால் அந்தமயக்கம் போகுமோவென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௯௩)

கொல்வதுகருதானெங்கள்கோவெனவுரைத்தாய்முன்னம்
பல்வகையோனிதோறும்பாரிசைப்பிறக்குநாளில்... *
வெல்புலிநரியாகிவெம்பசியுற்றூன்மற்றிப் ... .... *
புல்லொடுதழையோதின்பானின்பெரும்போதிநாதன்.

(இ-ள்.) எங்கள்கடவுள் கொல்லநினையானென்று சொன்னாய் முன்னே அநேகயோனிகள்தோறும்பூமியின்மேற்பிறக்குங்காலத்தில் வெல்லுகின்ற புலிகளாயும்நரிகளாயும் பிறக்கும்போதுவெவ்வியபசிவந்தால் புல்லுந்தழையுந் தின்பானோ அரசமரநிழலிலிருக்கும் உன்னுடையகடவுளென்றவாறு. (௯௪)

 புத்தனைவாதில்வென்றசருக்கம்.

ஈரவெனுமுன்றனூலிற்கந்தமைந் துடனேகூடி...... *
யுருவமுமழியுமென்றாயுன்னிறைக்குருவமெங்கே ... *
விரணியயோனிதோறுமுயிர்க்கருள்செய்யவேண்டி...*
மருவொருவடிவங்கொண்டானென்பதேமதியிலாதாய்*

(இ-ள்) பொய்யாகிய உன்னாகமத்தில் ஐந்துகந்தங்களுடனே கூடத் தேகமுமழியுமென்று சொன்னாய்அப்போது உன் கடவுளுக்கு உருவெங்கே அனேகயோனிகளில் ஆத்மாக்களுக்குஅருள்செய்யும் பொருட்டு ஒருவடிவங் கொண்டுவந்தானென்பதென்ன புத்தியில் லாதவனே யென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௫)

காரணவுயிரிற்கூடுங்காரியவுருவின்றேலுன்...............*
சீரணிபோதிநீழற்சேரிறைக்குருவமில்லை... .... . . . . *
பூரணஞானமில்லாய்பொன்றுகைமுத்தியென்னும் . *
பேருணர்வில்லாவுன்றன்பிடகநூலயாவர்சொன்னார் *

(இ-ள்) காரணமாகிய ஆத்மாவோடே கூடுகின்ற காரியமாகியவடிவில்லாதிருந்தால் உன்னுடைய சிறப்புப்பெற்ற அரசமரநிழலிலேயிருக்குந் தெய்வத்துக்குவடிவில்லைநிறைந்த அறிவில்லாதவனே பஞ்சகந்தமும் கெடுவது முத்தியென்றுசொல்லும் பேரறிவில்லாத உன்பிடகாகமத்தை யார்சொன்னாரென்றவாறு. (௫௬)

இருபதிற்றொருவராகவெண்ணுமுன்புத்தரெல்லாம்...*
வருவதுசிறந்ததாயர்வயிற்றினைப்பீறியென்னை ......*
பரிவொடுசுமந்துபெற்றாருயிர்கெடப் பழுதுசெய்தே
யருநரகத்தில்வீழுமவர்களோகடவுளாவார்........ *

(இ-ள்) இருபத்தொருவரொன்றெண்ணப்பட்ட உன்னுடையபுத்தர்களெல்லாம் பிறப்பது சிறப்புப்பெற்ற தாயார் வயிற்றைப்பீறியென்று சொன்னாய் அன்புடனேசுமந்துபெற்ற தாய்மாருடைய உயிர் நாசத்தையடைய குற்றஞ்செய்து அரியநரகத்திலே வீழ்வார்களோ தெய்வமாவார்களென்றவாறு. (௫௭)

காவுடைப்பூதநான்கின்கலப்பினிற்பேதமல்லா..... ... *
தருவினுக்குயிர்வேறில்லையென்னைநின்பொய்மைநூலி
னிரவினிற்றுயிலுங்காலுன்முகத்துடனேறிப்போகு *
மரவினைப்பூதபேதமறிந்தனோதறிவிலாதாய் ...... . . *

(இ-ள்.) காவினையுடைய நான்குபூதத்தையுடைய கலப்பிலேபேதமேயல்லாமல் தோன்றியவடிவுக்கு உயிரொன்றுவேறில்லையென்பாய் நீ சொல்லிய அபத்தசாஸ்திரத்தில் இராத்திரியிலேநித்திரைசெய்யும்போது உன்முகத்திலேயேறிப்போகும் சர்ப்பத்தை யிந்தப் பூதங்களிற்தனோ வறிவிலாதவனேயென்றவாறு. (௫௮)

உருவுமுயிருங்கூடுமுணர்வுனக்கில்லையிந்த .... .... *
வருமங்கிறந்தகாலையுயிர்கழிதன்றுபோகு........ *

மூருவமுமுயிருங்கூடிப்பிறக்குமேலகனுனுன்ற ......*
னுருவமுமுயிரும்வேறாமென் றுரையுன்றன்வாயால். .*

(இ ள்.) உருவும் உயிரும் ஒன்றாய்க்கூடும் அறிவுஉனக்கில்லையெ ன்றாய் இந்த உருவம் நீங்கினகாலத்தில் உயிரும் சீக்கிரத்தில் நீங்கி ப்போகும் உருவமும் உயிரும் ஒன்றாய்க்கூடப்பிறக்குமானால் அத னால் உன்னுடைய உருவும் உயிரும் வேறாகுமென்று உன்வாயாற் சொல்வாயென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௫௯)

வானமுமிலலைவானத்தேசையுமில்லைவானை ..........*
மானதிலவழக்கதாமென் றாற்றுலையுன் றனுலிற்......*
காணிலம்புனநீநான் குங்கலப்பதற்கிடமதாகு... ....*
நீநவிலோசைவானினிகழ்ந்தளசெய்தியென்பாய்....*

(இ-ள்.) ஆகாசமுமில்லை அதனிடத்தேசத்தமுமில்லை அந்தஆகா சம் இல்வழக்காமென்றுசொன்னாய் உன்னாகமத்தில் பிருதுவி அப் பு-தேயு-வாயு நான்குபூதமும்-இருப்பதற்கு இடம்ஆகாசமல்லவோ நீ சொல்லப்பட்ட சொல்லினுசை ஆகாசத்திலுண்டாகிய தென் று சொல்லுவாயென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௬௰)

இடமிகுந்திசைதானென்பதில்வழக்கென்னுநீயே ... *
வடநெடுந்திசையிற்போதிமரமெனவணக்கஞ் செய்வை
புடவியிலறிவிலாரும்பித்தரும்பொய்மையோரு.....*
முடனிகழவையிற்கூறிலெக்குநீயுரைப்பவெல்லாம். *

(இ-ள்.) இடமிகுந்த திசையென்றுசொல்வது இல்வழக்கென்று சொல்வாய் இப்படி சொல்லுநீயே நெடியவடதிசையிலே அரசம ரமிருக்கின்றதென்று வணக்கஞ்செய்வாய் பூமியிலே அறிவில்லாத வர்களும் பயித்தியங்கொண்டவர்களும் அபத்தம்பேசுகிறவர்களும் இருக்கின்றசபையிலே உன்சொல்லெல்லாம் பொருந்துமென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௬௧)

மரமுயிரல்லவென்பைமன்னுமைம்பூதமான... ....... *
வுருவினர்போலநன்னீருணவினாற்கிளைகொண்டோங்குஞ்
சருகெழுமுணவின்றாகிலாதலாற்சனனபேதத்........*
தருவினையுருத்தவெங்கோனுருயிர்க்கமைத்ததென்பாய்*

(இ-ள்) மரங்கள்உயிரல்லவென்று சொல்வாய் நிலைபெற்றபஞ்ச பூதத்தினுலுண்டாகிய தேகத்தையுடையவர்கள்போல நல்ல நீரை உண்கையினாலே இலைகள்தளிர்த்து வளர்ந்திருக்கும் அஃதில்லாவி ட்டால் சருகாகும் ஆகையினாலே செனனபேதத்தில் கன்மங்களைப் புசிப்பிக்க எமதுகடவுள் உயிர்களுக்கு அமைத்த வடிவாகுமென்று சொல்வாரென்றவாறு. (௬௨)

வன்பெரும்பழுதுகோநன்மண்மிசைத்தானேசெத்த *
புன்புலைதின்னனன்றன்றுணாப்பைதின்பொய்ம்மைநூலிற்

# ௩௨-வது புத்தனைவாதில்வென்றசருக்கம்.

நின்மையென்றுனக்குநல்லூனுடலுயிர்செகுத்தேயூட்டி
வுன்பசிதணிப்பார்பாவமெய்துவதுனக்குநன்றோ *

(இ-ள்) ஒருஉயிரைக்கொல்வது பழுது பூமியிலேதானே செத்த மாமிசத்தைத்தின்பது நன்றென்றுசொல்வாய் உன்பொய்யாகமத்திலேநின்றென்று உனக்குநல்லஉயிரைக்கொன்று மாமிசத்தை உண்பித்து உன்பசியைத்தணிப்பார்க்குப் பாபமடைவது உனக்கு நல்லதோவென்றவாறு. (௬௩)

காரணநிற்கவென்றுங்காரியங்கெடுதல்வீடென் ... . *
றாரணம்பரவுமெங்கோனாகமம்புகல்வார்சொல்வர் ... *
பேரணங்குளிருஞ்சேரப்பொன்றுதன்முத்தியென்னும்
பேரணங்குற்றநீயேபிரிவறியாதுசொல்வாய் ... *

(இ-ள்.) காரணமிருக்க எப்போதுங் காரியங்கெடுவதே மோக்ஷமென்று வேதங்கள்பரவுகின்ற எங்களுடையகோனாகிய சிவனுடைய ஆகமஞ்சொலலப்பட்டவர்கள் சொல்லுவார்கள்போராலவருந்தும் உயிருங்கூடக்கெடுவது முத்தியென்கின்றபெரியவருத்தங்கொண்டநீயே பிரிவையறியாமற்சொல்வாயென்றவாறு. (௬௪)

அழிந்திடினைந்துகந்தமுத்தியென்றுரைத்தாயைந்து *
மழிந்திடின்முத்திபெற்றாரொனவினவும்போதி *
லழிந்திடுமைந்திலுண்டாமுணர்வெனவுரைக்கிலைந்து *
மழிந்தனவிலையாமுத்தியாவதுமில்லையென்றார் ... ... *

(இ-ள்.) பஞ்சகந்தமும் அழிந்தால் முத்தியென்றுசொன்னாய் பஞ்சகந்தமும்அழிந்தால் முத்திபெற்றவர் யாவரொன்றுவினவும்போதில் அழிந்த அஞ்சிலும் உண்டான அறிவென்று சொன்னால் அப்போது பஞ்சகந்தமும் அழிபவுமில்லை மோக்ஷமுமில்லையாமென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (௬௫)

(வேறு)

பொங்குபுகழ்மங்கியுளபுத்தனும்வெகுண்டே .. *
யெங்கடவுளேதுபெறுமுத்தியிலையென்றீ .. *
ருங்கடவுள்யாதுமதுமுத்தியெதுவென்னத் ... . *
தங்குசிவஞானமுணர்சைவரிதுசொல்வார் . .. *

(இ-ள்.) மிகுந்தகீர்த்தியானது மங்கியிருந்தபுத்தனுங் கோபித்து எங்களுக்குத் தெய்வமுமில்லை மோக்ஷமுமில்லையென்று சொன்னீர் உம்முடைய தெய்வமாவதேது நீங்களடையு மோக்ஷமேதுவென்று கேட்கச் சிவஞானத்தையறிந்த சைவராகிய மாணிக்கவாசகர் இது சொல்வாரென்றவாறு. (௬௬)

ஆலமணிநீழலிலிருந்தறமுரைக்குங் ... ... *
கோலமதுகண்டுபலர்கும்பிடநடிப்பான் ... ... *

மேலணியுநீற்றனுமைகூறனருண்மேவுஞ்........ *
சீலனவனற்பெருமைசெப்பவெளிதாமோ... ..... *

(இ-ள்.) அழகிய கல்லாலின்கீழலிலிருந்து தருமஞ் சொல்லுகின்ற வடிவைக்கண்டு அனேகம்பேர் தெரிசிக்க நிருத்தஞ்செய்வான் விபூதிதரித்த திருமேனியையுடையவன் உமாதேவியை யொருபாகத்திலுடையவன் கிருபையையுடையவன் இப்படிப்பட்ட கடவுளதும் பெருமைசொல்வதற்கு எளிதோவென்றவாறு. (௯௭)

தில்லைமணிமன்றிலுறைதிங்களணியெங்கோ...... *
னெல்லையுளதென்றுமொழிபவென்றருள்புரிந்தே... *
சொல்லுமளவிற்பலதொடுத்துமுயலாதே... ... *
நில்லுமிதுகூறுமெனநீசனிதுரைத்தான்..... *

(இ-ள்.) தில்லைமாநகரில் அழகிய பொன்னம்பலத்திலிருக்கின்ற சந்திரனையணிந்த எமது கடவுளானவர் ஒருமுடிவு உண்டாமென்று சொல்லுதற்கென்று சொன்னீர் சொல்லுமளவில் பலபேச்சுகள் சொல்லமுயலவேண்டுவதில்லை நில்லும் நான்கேட்டதைச் சொல்லுமென்று நீசனாகியபுத்தனிதுசொன்னானென்றவாறு. (௯௮)

முன்னர்வடநீழலிலிருந்தறமொழிந்தா ....... .. *
னென்னிறைவனென்னுமுனையென்னெனுரைத்தீர்
மன்னுசெபமாலைகொடிருக்குமதுமற்றோ... .. *
ருன்னரியநற்கடவுளுண்டெனநினைந்தோ ... .... *

(இ-ள்.) முன்னே கல்லாலின்கீழிருந்து தருமஞ்சொன்னவன் எங்களுடையகடவுளென்று என்னென்றோசொன்னீர் கையிலே நிலைபெற்ற செபமாலையைக்கொண்டிருப்பது வேறொரு நினைத்தற்கரிய நல்லதெய்வமுண்டென்று நினைத்தோவென்றவாறு. (௯௯)

மல்லலுலகத்தவர்வணங்கிடநடிப்பன் ..........*
றில்லையிறையென்னவுரைசெப்பினிர்முனிப்போ *
நல்லறிவினோர்கள்சிலர்நாடுமவருண்டா...... ...*
யல்லதுதமிச்சைதனிலாடுமவருண்டோ...... .. *

(இ-ள்) வளம்பொருந்திய உலகத்தார் வணங்கும்படிக்குச் சிதம்பரத்திலே நிருத்தஞ்செய்வான்எமதுகடவுளென்று சொன்னீர் நினைத்துப்போகப்பட்ட நல்லறிவையுடையசிலர்பார்க்க ஆடுவதல்லது தமதிச்சையினாலே ஆடுவாருமுண்டோ வென்றான் புத்தகுரு. எ-று.

வையமுழுதுய்யமணிமன்றினுநடிப்போன் ...*
மெய்யணிபுநீறனைமேன்மைகொடுரைத்தீர்...*
செய்யவொளிதங்குதிருமேனிதனினீறே........*
துய்யதெனவேவுமதுதொலைவிறைபுனைந்தான்..*

(இ-ள்) உலகமெல்லாம்பிழைக்க அழகிய பொன்னம்பலத்திலே

## ராசய புத்தனைவாதில்வென்றசருக்கம்.

திருத்தஞ்செய்யும் எமதுகடவுள் திருமேனியிலே விபூதி தரித்திருக்கின்றுமென்று மேன்மைகொண்டு சொல்லீர் சிவந்தபிரகாசந்தங்கிய திருமேனியிலே விபூதி பரிசுத்தமானதென்றோ உமதுகடவுள் தரித்தாரென்றான் புத்தகுருவென்றவாறு. (எக)

மங்கையொருபங்கனெனவண்மைகொடுரைத்தீர் *
பங்குபடுபெண்வடிவுபார்மிசையிலுண்டோ *
அங்கமொருபாதிமடமாதினுருவானால் ...... ...... *
உங்களிறைநீர்துறவிலுற்றதவமென்னோ ..... *

(இ-ள்) உமாதேவியை யொருபாகத்திலே யுடையவனென்றுபெருமைகொண்டு சொல்லீர் பாதிதேகம் பெண்வடிவாயிருப்பது பூமியிலேயுண்டோ அப்படி பாதிதேகம்பெண்ணுருவா யுமதுகடவுளிருந்தால் நீர் துறவியிலிருக்குந் தவமென்னென்றவாறு. (எஉ)

என்றதன்மொழிக்கவினிகழ்ச்சிநகைசெய்தே ...*
மன்றனடியார்கள்பெருவாழ்வுபெறவந்தார் ..... *
நன்றியுபதேசமிதுநற்றவமிலாதா ...............*
யுன்றனெதிர்சொல்வதலவென்றிதுரைசெய்வார்..*

(இ-ள்) இப்படியென்றுஅந்தபுத்தகுருசொன்னதற்குயிகழ்ந்துநகைசெய்து எமது கடவுளுடைய அடியார்கள் பெரியவாழ்வைப் பெறவந்தவர்கள் நல்ல உபதேசமாகிய யிதனை நல்லதவமொன்றில்லாத உன்னெதிரே சொல்வதல்லவென்று இது சொல்வார் மாணிக்கவாசகரென்றவாறு. (எங)

ஓங்குசெபமாலைகொடிருத்தலுலகெல்லா ...... ... *
மீங்குயிர்தவங்கள்செயவென்பதெனவெண்ணாய்.*
தாங்கியபடைத்தொழில்கள்சார்பொடுபழக்கம் .*
பாங்குளபணிக்கர்கரபத்திரமதாகும் .........*

(இ-ள்) உயர்ந்தசெபமாலிகையைக்கையிலேவைத்திருப்பது உலகத்தாரெல்லாம் இங்கே உயர்ந்ததவங்கள் செய்தற்கென்று நினையாய் தாங்கப்பெற்ற ஆயுதத்தொழில்களைச் சார்புடனே பழக்குகின்ற பக்குவமுள்ள ஆசிரியருடைய கையிலே கொள்ளும் ஆயுதம்போலாகுமென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. (எச)

கூட்டியதவப்பயனிலாதவர்கள்போலு ...........*
நாட்டமுடையாரெதிர்நடித்திடுவமென்றாய்... *
காட்டவனலமேபோலுடல்கலந்துயிரையெல்லா ...*
மாட்டுமொருநட்டுவனெம்மண்ணலெனவெண்ணாய்

(இ-ள்) தவப்பயனைச் சம்பாதியாதவர்களைப்போல ஊனக்கண்ணையுடையவராகிய உலகத்தார்காண எதிரேகூத்தாடுவாயென்றாய் விறகிலேயிருக்குந் தீயைப்போலத் தேகத்திலேகலந்து உயிரையெல்

லாம்ஆட்டுவிக்கும் ஒருநாட்டுவன் எமதுகடவுளொன்றுளனென்றணிக்கொள்வாயென்றார் மாணிக்கவாசக ரென்றவாறு. (௭௫)

நீற்றினையணிந்ததுவெணிஃனிறமெனன்றே ..*
சாற்றினையுயிர்க்கிடர்தணிப்பதெனவென்றாய் *
தோற்றியுளநம்புதல்வர் துன்பமுறு தீநோய் . *
மாற்றும்வகையன்னையாருந்தியமருந்தாம் ...*

(இ ள்) உம்முடைய கடவுள்விபூதியையணிந்ததுளன்னவென்று கேட்டாய் அது ஆத்மாக்களுக்குத் துன்பத்தைத்தணிப்ப தென்றெண்ணிக்கொள்ளாய் பிறந்திருக்கின்ற நம்முடைய பிள்ளைகளடைந்த நோயை நீக்கும்படி தாய்மார்சாப்பிட்ட மருந்தாகுமென்றார் மாணிக்கவாசக ரென்றவாறு. (௭௬)

புல்லறிவுகொண்டுபலபொருமொழிபுத்தா .... *
நில்லவனலாலொருவர் நீறணிவதுண்டோ.........*
நலலதிருநீற்றிலுள நன்குமனறதாமே ........ *
சொல்லுமதலாலொருவர்சொல்லவெளிதாமோ..*

(இ-ள்) புல்லறிவைக்கொண்டு அநேகப் வீண்வார்த்தைகள்பேசுகின்ற புத்தனே நிற்பாய் அவனையல்லாமல் ஒருவர் நீற்றைத் தரிப்பதுண்டோ நல்ல திருநீற்றிலுள்ள சுகம்வேதஞ்சொல்லுவதல்லாமற்றொருவராற் சொல்வதற்கெளிதோவென்றவாறு. (௭௭)

பாகமதிலுத்தமியைவைத்தல்பழுதென்றாய் ... *
போகமுலகுக்கருள்புரிந்தருளவென்றே ........*
மாகமுகிலொத்தகுழன்மங்கையொடிருந்தான் *
யோகமுயிர்கட்குதவயோகவுருவானும் .........*

(இ-ள்.) ஒருபாகத்திலே உமாதேவியைவைப்பது குற்றமென்றுசொன்னாய் உலகத்தாருக்கும்போகத்தைத்தரல்வேண்டுமென்று நினைத்து ஆகாசத்திற் சஞ்சரிக்கின்றமேகத்தையொத்த கூந்தலையுடையபார் வதியையொருபாகங்கொண்டிருந்தார் அல்லாமலும் உயிர்கட்கு யோகத்தைகொடுக்கும்பொருட்டு யோகவுருவுங் கொண்டிருந்தாரெமதுகடவுளென்றவாறு. (௭௮)

அந்தர்காமுற்றதடியன்றியறியார்போ ... ........ *
விந்தமொழிகற்றனையினிப்பிறிதுதோரய் ....... *
மைந்துபுனைசந்தவிடையான்மலரின்மன்னும் ... *
கந்தமெனநின்றநிலைகண்டிலைகணில்லாய் ... ....*

(இ-ள்.) குருடர்கையிலிருக்கின்ற தடியையல்லாமல் வேறொன்றுமறியாத விதம்போல இந்தப்பேச்சுமாத்திரஞ் சற்றுயல்லாமல் வேறொன்றுமறியமாட்டாய் வலிமைபெற்ற அழகிய இடபவாகனத்தையுடைய பரமசிவன் பூவிலிருக்குமணம்போல ஆத்மாக்களிடத்தில் கலந்துநின்ற நிலைமையைப் பார்த்தாயில்லைகண்ணில்லாதவனே

சொல்லவல்லவர்மூகையாயினர் சொல்லிலாவொருமூகையாம்
வல்லியென்புதல்விக்குமூகைமறைந்துநல்லுரைகூடிடு
னல்லதொண்டனு[illegible]நானெனநாயகனுரவடன்னைநீ *
யொல்லையிங்கழையென்னவந்தவனுண்மைச்சபைநண்ணினன்

(இ-ள்) பேசத்தக்கவர்களூமையாயினர்கள் பேச்சில்லாதவூமையாகிய என்புத்திரிக்கு ஊமைநீங்கி நல்லவார்த்தை பேசவந்தால்நானுமக்கு நல்ல அடியனாவேனென்றுசொல்லமாணிக்கவாசகர்சீக்கிரத்திலே அழைத்துக்கொண்டுவாவென்றுசொல்ல அவனும் உண்மைபொருந்திய சபைக்குவந்தானென்றவாறு. (௮௪)

நண்ணியங்குமுநிவற்கன்னியைநன்மையாளருநாடியே
கண்ணிநின்னருள்செய்துபின்னர்கனைத்துமுன்னிருத்தியே
யண்ணலங்கிருந்தபுத்தனுரைத்ததர்க்கமவைக்கெலாஞ் *
சுண்ணநுங்குழலவல்லிதவுரைசாற்றுகென்றுவிளம்பினர்

(இ-ள்.) சபையிலே வந்துநின்ற கன்னிகையை மாணிக்கவாசகர் பார்த்து கிருபாநோக்கஞ்செய்து பின்பு அழைத்து எதிரிலிருக்க வைத்து உள்ளநெருங்கி அங்கிருந்த புத்தன்சொல்லிய தர்க்கத்துக்கெலாங்குளிர்ந்தவாசனைபொருந்தியகூந்தலையுடைய பெண்ணே நீயுத்தரஞ்சொல்லென்றுரைத்தவாறு. (௮௫)

பற்றுநற்குணராதபுத்தர்பகர்ந்ததர்க்கமவைக்கெலாம் *
கற்றறிந்தவர்போலமன்னியகன்னிமாறுரைகூறினள் *
மற்றுமங்கையர்சாழலாம்விளையாடலாகமகிழ்ச்சியா *
லுற்றதன்பொருடன்னைவாசகமாகவுண்மையமோதினர்.

(இ-ள்) பத்தியை நன்றாயறியாதபுத்தராணவர்கள்சொல்லிய தர்க்கவார்த்தைக்கெல்லாம்படித்தறிந்தவர்கள்போல இந்தப்பெண்ணானவளுத்தரஞ்சொன்னாள் அதைமங்கையர்செய்யுந் திருச்சாழல் விளையாட்டாக மகிழ்ச்சியினாலே அந்தப்பொருளையெடுத்துப் பாடலாகச்சொன்னார் மாணிக்கவாசகரென்றவாறு. (௮௬)

ஈழமன்னனுமஞ்செழுத்துமியம்புநீறுபுனைந்துபின் *
றாழநின்றடிமைத்திறந்தவறாததொண்டனுமாயினான் *
சோழனும்புலியூரின்மன்னியதொன்மையாளருமம்பலம்
வாழ்கவென்றுதுதித்துநின்றெழில்வாதவூரனையேத்தினர்

(இ-ள்.) ஈழராசனும் அஞ்செழுத்துஞ்சொல்லிவிபூதிதரித்தபின்புதாழநின்றுஅடிமைத்திறத்திலே தவறில்லாத அடியனாகினான்சோழராசனுந்தில்லைமூவாயிரவரும் அம்பலம் வாழ்கவென்று துதித்து அழகிய மாணிக்கவாசகரையேத்தினர்களென்றவாறு. (௮௭)

தக்கசீர்பயிலீழமன்னுயர்சைவனாயெதிர்நின்றுநின்.....*
றக்கமாலைபுனைந்துநீறுமணிந்துதொண்டினனாகவே...*

## ௱சச புத்தனாவாதில்வென்றசருக்கம்.

துக்கமாகியசீவரத்துவராடைமூடுமுடம்பினர்... .... *
மிக்ககாதரமூகைதீர்ந்திடல்வேண்டுமென்றுவணங்கினார்

(இ-ள்.) துக்கதாகிய சிறப்புள்ளமூவாயிரவரும் மாணிக்கவாசகரெதி ரேநின்றுருத்திராட்சமணிந்து விபூதிதரித்து அடிமைத்திறமுடை யவனாகவே துக்கத்தைத்தருகின்ற சிவந்தசீவரவஸ்திரத்தால் மூடுமு டம்பையுடைய புத்தர் மிருந்த ஊமைத்தன்மைத் தங்களுக்குநீங்க வேணுமென்றுவணங்கினார்களென்றவாறு (அஅ)

இன்னவாறருள்செய்குவாயினியெம்பிரானெனவன்புடன்
பொன்னிசூழ்வளநாடனும் புலியூருளாருமிறைஞ்சினர் *
மன்னுசீர்புனைவாதவூரர்மகிழ்ந்துபார்வையைநல்கவே *
முன்னதாகவணங்கியவர்மூகைதீர்ந்திதுகூறினார் *

(இ-ள்) இந்தப்படி அருள்செய்வாய் எமது கடவுளே யென்று அன்புடனே சோழராசனுந் தில்லைமூவாயிரவரும் மற்றவரும்வண ங்கினார்கள் நிலைபெற்றசிறப்பினையுடைய மாணிக்கவாசகர்மகிழ்ந்து கிருபாநோக்கஞ்செய்யவுடனே அவர்களெல்லாம் நமஸ்கரித்து ஊ மைத்தன்மைநீங்கியிதுசொன்னார்களென்றவாறு. (அகூ)

மாசிலாதமனத்தினாய்முனமன்னுதீவினைசெய்தலா... *
லாசிலாதநன்னீறணிந்துநலஞ்செழுத்தனை செய்திலேம்
பூசலாகியநீறுடல் புனையக்கமாலைகள்காவியாந் ... *
தூசுதாதுவராடையைச்சுடுவென்றுதான்றிவணங்கினார் *

(இ-ள்) களங்கரகிதமான மனமுள்ளபெரியவரே முன்பிறப்பிலே நிலைபெற்ற தீவினையைச்செய்தபடியால் குற்றமற்ற விபூதிதரித்து நல்லபஞ்சாக்ஷரத்தை உச்சரியாமலிருந்தோம் பூசுவதாகியதிருநீறு ந்தரிக்கப்பட்டருத்திராட்சமும் காவிவஸ்திரமும் ஆகியஇவைகளெ ல்லாங்கொடுப்பீர் இந்தசிவப்பு வஸ்திரத்தைச் சுடுவீரென்று வண ங்கினார்களென்றவாறு. (கூ௰)

கோட்டமின்றியவுண்மையார்நகைகோட்டுகின்றமுகத்தரா
யீட்டுமுன்செய்தவத்தினாரிவரென்றுசிந்தையிலெண்ணியே
வாட்டருந்திருநீறணிந்துவயங்குருத்திராசாதனம் *
பூட்டியங்கவர்சீவரங்கிளர்பொங்குதீக்கிரையாக்கினார் *

(இ-ள்) அழுக்காறில்லாத மாணிக்கவாசகர் புன்சிரிப்புடையமுக த்தினராய்ப் பூர்வசன்மத்திலிவர்கள் தவஞ்செய்தவர்களென்று மன த்திலேநினைத்துக்கெடுதல்செய்யாத விபூதிதரித்துப் பிரகாசங்கொ ண்டருத்திராட்சமும்அணிவித்துஅவர்களுடையசீவரமாகிய வஸ்தி ரங்களைக் காந்தியையுடையநெருப்புக்கு இரையாக்கினாரெ-று.(கூக)

பொய்யிலாவருளையருப்புலியூருளார்களுமன்புசேர் *
மையலாகியவேடமின்றுவயங்குநீறணிவார்களும்......*

தூய்யகாவிரிநாடனுந்துகடீருமீழர்தமன்னனுஞ் ... *
செய்யமாமணிமன்றுளார்திருமுன்புசென்றுவணங்கினார்

(இ-ள்) பொய்ம்மையில்லாத திருவையையுடையமாணிக்கவாசகரும்தில்லை மூவாயிரவரும்முன்பு சேர்ந்தமயக்கமாகிய வேஷமிலலாமல் பிரகாசம்பொருந்திய விபூதி தரித்தவர்களும் பரிசுத்தமாகிய காவேரிநாட்டையாளுகின்ற சோழராஜனும் குற்றம்நீங்கிய ஈழதேசத்தரசனும் சிவந்த ரத்தினமிட்டிழைத்த கனகசபையிலிருக்கும் சபாநாயகரை நேராகவந்து தெரிசித்தார்களென்றவாறு. (௬௨)

பொன்றுகின்றதுமுத்தியென்றுபுகன்றுநின்றுழல்புத்தர்தா
மன்றுகண்டுவணங்கியன்புகின்மாபெருந்தவராவதே. *
பின்றிதன்பொருளாவதென்பலவாறுடன் கடல்மீதிலே
சென்றதண்புனலல்லவோவுயர்தில்லையெல்லையினண்ணினார்.

(இ-ள்.) இறக்கின்றதே மோக்ஷமென்று சொல்லிநின்று உழலுகின்ற பௌத்தர்கள் பொன்னம்பலத்திலே சபாநாயகரைக் கண்டு வணங்கி அன்புமிகுந்த பெரியதபோதனர்களாவது என்ன அதிசயம் இன்று இதனதுபொருளானதென்னவெனிலப்பலநதிகளுடனே கடலிலேபோன குளிர்ந்தநீரல்லவா உயர்ந்ததில்லைமாநகரத்தில்வந்தவர்களென்றவாறு. (௬௩)

மன்றகன்றபின்யாவருஞ்செலவாதவூருறையெந்தையார்
சென்றிலங்குதிருப்புலீசர்சிறந்தபாதம்வணங்கியே. *
நன்றிதுன்றியவங்கணைவிக்கினர்நல்லதில்லையுளாரெலா *
மென்றுமிங்கிருமையர்நீரினியென்றுதம்மனையேகினார்.

(இ-ள்.) சபையைவிட்டு நீங்கியபின்பு எல்லாருந் தங்களிடத்திற்குச்செல்ல மாணிக்கவாசகர் திருப்புலீச்சரத்திலிருக்கும் கடவுளுடைய சிறந்ததிருவடிகளைவணங்கி அங்கேயிருந்தனர் நன்மைபொருந்திய தில்லைமாநகரத்தாரெல்லாம் எந்நாளும் ஐயா நீர் இங்கேயிருமென்று வேண்டிக்கொண்டு தங்கள்கிரகத்துக்குப் போனார்.

பொன்னிநாடனுமீழநாடுபுரந்தமன்னனுமுன்புசேர் *
மன்னுதீவினைதீரமன்றுவணங்கிநீறணிவார்களு .. ... *
முன்னதாகவிறைஞ்சிஞானமுதிர்ந்தகோலவயகன்றுபோய்
மின்னுமாமணிமாடமாளிகைதன்னிலன்புடன்மேவினார்.

(இ-ள்) காவேரிநாட்டையாளுகின்ற சோழராஜனும் ஈழதேசத்துராஜாவும் வந்தராஜாக்களுக்கும் முன்புசேர்ந்திருந்ததீவினைகளெல்லாம் நீங்கிச் சபையைவணங்கி விபூதிதரித்தபுத்தர்களும் முன்னதாகவணங்கி மாணிக்கவாசகரைநீங்கிப்போய் மின்னுகின்ற ரத்தினங்கள்பதித்தஉப்பரிகையிலன்புடனேசேர்ந்தாரென்றவாறு. (௬௫)

புன்மைவேடமகன்றுநீறுபுனைந்துளார்களு மன்னனுந்
தொன்மையார்திருவாதவூரர்துலங்குபாதம் வணங்கியே

## ௱௪௯ புத்தரைவாதில்வென்றசருக்கம்.

நன்மையாமணிமன்றிறைஞ்சிநயந்துநெஞ்சினில்வஞ்சமாய்
வன்மையானதொழிந்துதில்லைதமன்னுமூதானவையுற்றார்.

(இ-ள்.) இழிவானவேடங்கள் நீங்கி விழுமியமைத்தரித்தபர்தாகளும் ராஜனும் பழமையாயுள்ள திருவாதவூரராகிய மாணிக்கவாசகர் இரண்டுபாதங்களையும் வணங்கி நன்மையாகிய அழகிய திருச்சிற்றம்பலத்தைவணங்கி நயப்புடனே நெஞ்சிலேயிருக்கும் வஞ்சகநீங்கிச் சிதம்பரமேதங்களுக்கு நிலைபெற்ற பதியாக விருந்தார்கள் என்றவாறு. (௯௫)

புத்தரைவாதில்வென்றசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௫௱௪௯.

---

## திருவடிபெற்றசருக்கம்.

(வேறு.)

உடன்படப்பொய்யைமெய்யாவுரைத்திடுஞ்சமயமென்னுந்
தடங்கயத்திரளைவெல்லுந்தனிப்பெருமடங்கலன்றோ *
நெடுந்தவப்பெருமையாலேநினைப்பருஞ்சைவஞான *
மிடம்படப்புகலவார்பின்னமெய்தியசெய்திசொல்வாம் *

(இ-ள்.) உடன்படும்படி பொய்யை மெய்யாகச்சொல்லிய பரசமயங்களென்னும் யானைக்கூட்டத்தை வெல்லுகின்ற ஒப்பற்றபெரிய சிங்கமேற்றுக்கொப்பாகியவரும் நெடியதவத்தின் பெருமையாலே நினைத்தற்கரிய சிவஞானத்தை விரித்துச் சொல்லப்பட்டவருமாகிய மாணிக்கவாசகர் பின்பு அடைந்த செய்தியைச் சொல்லுவார் என்றவாறு. (௧)

ஆடல்வெம்படையிருட்சியெழுச்சியோடச்சோவென்னும்
பாடலுந்தெய்வலோகயாத்திரைபத்துமோதித் ...... *
தேடலுந்திகைப்புமீளத்தெளிதலுஞ்சிறுமைகொண்டு *
நாடலுங்களிப்புமில்லாநற்பெருவாழ்விலானார் . ... *

(இ-ள்) ஆடலையுடைய திருப்படையாட்சியும் திருப்படையெழுச்சியும் அச்சோபத்தும் தெய்வலோகயாத்திரைப்பத்தும்பாடியுன்றைத்தேடுதலும் திகைத்தலும் பின்புதெளிதலும் சிறுமைகொண்டுவாடுதலும் களித்தலுமில்லாதபெரியவாழ்வுபெற்றிருந்தார்மாணிக்கவாசகரென்றவாறு. (௨)

போற்றுமஞ்செழுத்துநீறும் புவிமிசைவிளங்கத்துன்ப
மாற்றிடுஞ்சைவஞானவாசகம்புகலவந்தார் ...... ... *
சீற்றமில்புலியும்பாம்புஞ்சீர்பெறவிளங்குமன்றி ..... *
லேற்றினன்புலியூர்மேலைச்சிவபதமென்றுகண்டார் .... *

(இ-ள்) யாவரும்போற்றுகின்ற பஞ்சாக்ஷரமும் விபூதியும் பூமியின்மேல்விளங்கத் துன்பத்தைநீக்குகின்ற சிவஞானத்தைவிளக்குந் திருவாசகஞ்சொல்லவந்த மாணிக்கவாசகர்கோடமிலாதவியாக்கிரபாதரும் பதஞ்சலியாரும் சிறப்புப்பெறவிளங்குகின்றபொற்சபையிலாடும் இடபவாகனத்தையுடைய சபாபதியினது சிதம்பரம்மேலான சிவபதமென்றுகண்டாரென்றவாறு (௫)

அம்பரந்துறையநாளிலாடகமன்றிலாடு.........*
மெய்யர்தங்கருணையாலேவேதியவடிவங்கொண்டு ...*
துய்யமுப்புரிநூன்மார்புந்துலங்குபுத்தகமுந்தோன்றச்
செய்யமென்பாதந்தோயச்சென்றுமுனாகநின்றார் ...*

(இ-ள்.) மாணிக்கவாசகர் அந்தச்சிதம்பரத்திலே வசிக்கின்ற நாளிலே பொற்சபையிலாடுகின்றசபாபதியானவர் தமதுகிருபையினாலே பிராமணவடிவங்கொண்டு பரிசுத்தமாகிய முப்புரிநூலணிந்தமார்பும் விளங்குகின்றபுஸ்தகமுந் தெரியச்சிவந்த திருவடிகளுந் தோயவெழுந்தருளி எதிராகநின்றாரென்றவாறு. (௬)

முன்புறநின்றவேதமுதல்வனைமுகத்திநோக்கி .......*
யின்புறவாசகனாரிருமெனவிருந்தபின்னர்க்..........*
கொம்புன்னமன்றயில்மிக்கோங்குவீர்கூறுமென்ன .. *
மன்பெருவளஞ்சேர்பாண்டிமண்டலந்திருப்பமென்றார்

(இ-ள்.) எதிரேவந்துநின்ற வேதப்பிராமணனைப்பார்த்து இன்பம்பொருந்த மாணிக்கவாசகரிருமென்றுசொல்ல அவரிருந்தபின்பு பெருமையையுடைய வேதத்திற்மிகுந்தவரே நீரெங்கேயிருக்கிறது சொல்லுமென்றுகேட்க விலைபெற்ற பெரிய வளத்தையுடைய பாண்டியதேசத்திலேதானிருக்கிறதென்றார் அந்தப்பிராமணர் எ-று (௭)

பாண்டிநாடென்றபின்னர்ப்பரிவுடன்செறிவுகூறி ...*
யீண்டுநீர்வருதல்வேண்டுங்காரியமியம்புமென்ன.... *
வாண்டநாயகன்றனாணையாகியகருமநும்மைக் ... *
காண்டலேயென்றபின்னுங்கருத்துறவிதனைச்சொன்னார்

(இ-ள்) பாண்டியதேசமென்றுசொன்னபின்பு அன்புடனேயுபசரித்து இங்கேநீர் வருதற்குக்காரணஞ் சொல்லுமெனக் கடவுளது ஆக்கினையாகிய காரியம்உம்மைக்காணுவதேயென்றுபின்னும் மனத்திலேபொருந்த இதைச்சொன்னாரென்றவாறு. (௮)

மண்ணிடைப்புகுந்துமேலைவானிடைப்பறந்துமுன்னர்க்
கண்ணனுமயனுந்தேடிக்காண்பதற்கரியார்தம்மைப் *
புண்ணியமன்றிலாடும்புனிதனைப்பரியிலேறப்... ... .*
பண்ணுனும்பெருமையாலேவாழ்ந்ததுபாண்டிநாடு...*

(இ-ள்) பூமியைப்பிளந்தும் ஆகாசத்திற்பறந்தும் முன்னேமகாவிஷ்ணுவும் பிரமதேவனுந் தேடிக்காணுதற்கரிய கடவுளாகியும் சி

ற்சபையிலே திருத்தஞ்செய்பவருமாகிய பரமசிவனைக்குதிரையேற ச்செய்த உம்முடையபெருமையினாலே பாண்டிநாடெல்லாம் வாழ் ந்ததென்றவாறு. (எ)

தென்பெருந்துறையிலையன்றிருவடிசேவைசெய்து...*
துன்பமொன்றின்றிவாவிசூழ்கழுக்குன்றிற்சென்று...*
பொன்பொலிமன்றிலெய்திப்புத்தரைவாதில்வென்றீ...*
ரென்பதுகேட்டுப்பின்னரியாவருமகிழ்ச்சி கொண்டார்

(இ-ள்) அழகியதிருப்பெருந்துறையி லெழுந்தருளி யிருக்கின்ற கடவுளுடைய திருவடியைவணங்கித் துன்பமொன்று மில்லாமல் த டாகஞ்சூழ்ந்த திருக்கழுக்குன்றத்திற்குப்போய்ப்பின்புசிதம்பரத் திற்குவந்துபுத்தரைவாதுசெய்துசெயித்தீரென்பது கேள்விப்பட்டு யாவரும் மகிழ்ச்சியடைந்தாரென்றவாறு. (அ)

ஆதியையமன்றுளாடுமையனையன்பினாலே ........ .... *
யோதியதமிழின்பாடலுள்ளவையோதவெண்ணி... ...*
மாதுயரகலவிங்குவந்தனனெழுதல்வேண்டும் ........*
வேதியர்பெருமானின்றுவிளம்பிடும்விளங்கவென்றார்..*

(இ-ள்.) ஆதியாகியும் சிற்சபையிலேஆடுகின்றஐயனுமாகியு மிருக்கி ன்ற கடவுளைப்பத்தியினாலே நீர் சொல்லியதமிழ்ப்பாடலை முழுவது மோதுதற்குநினைத்துத் துன்பந்நீங்கஇங்கேவந்தேன் அது எழுதல் வேண்டும் பிராமணரில் உத்தமரே விளக்கமாக இன்றுசொல்லவேண் டுமென்றார் அந்தப்பிராமணரென்றவாறு. (௯)

பின்னைகம்பரவுநாதனிவ்வகைவிளம்பச்சிந்தை *
நனையுமன்புடையராகிநற்சடைமுடியார்தம்மை.....*
யெண்ணருந்தமிழின்பாடலாலியம்பியவையரப்போ *
தண்ணெகிழ்ந்துளமெய்ஞ்ஞானவாசகமுவந்துசொன்னார்

(இ-ள்) தெய்வலோகத்திலுள்ளதேவர்கள்வணங்குகின்றசபாநாய கர் இவ்வாறுசொல்லமனத்திலேமிகுந்தஅன்பையுடையவராய்ஜடா முடியையுடைய பரமசிவனை யெண்ணுதற்கரிய தமிழ்ப்பாடலாற் சொல்லிய மாணிக்கவாசகர் அப்போது அகமலர்ந்து உண்மைஞா னத்தைத்தருகின்ற திருவாசகத்தை மகிழ்ச்சியுடனே சொன்னாரெ ன்றவாறு. (௰)

அங்கவருரைத்தவெல்லாமம்பலத்தாடுமையர்........*
செங்கையிலேவாங்கித்தெளிவுறவரைந்தபின்னர்ப்...*
பொங்கியவருளினும்புகன்றிடரகலத்தையல்....... *
பங்கினர்தம்மைக்கோவைபாடுதல்வேண்டுமென்றார்....*

(இ-ள்) அவர்சொல்லியபாடலெல்லாம் சிற்சபையிலாடுஞ்சபாப தியானவர் தம்முடைய திருக்கரத்தில் ஏட்டைப்பிடித்துக்கொண்டு தெளிவாக எழுதியபின்பு மிகுந்த அருளையுடைய மாணிக்கவாசக

ருஞ் சொல்லித் துன்பநீங்க உமாதேவிபாகராகிய சபாநாயகரைப் பாட்டுடைத்தலைவனாகவுடைய ஒருகோவை பாடல்வேண்டுமென்றார் அந்தப்பிராமணரென்றவாறு. (௰௪)

மன்னியதவத்தின்மிக்காரதற்குளமகிழ்ந்துகூற... ...*
முன்னுறவிருந்துகோவையெழுதினர்முடிந்தபின்னர்ப்
பொன்னவிர்மேனியார்தாம்புத்தகஞ்சேமித்தங்கண் *
மின்னெனமறைந்தார்சொன்னவித்தகரயர்ச்சிகொண்டார்.

(இ-ள்) நிலைபெற்ற தவத்திலேமிகுந்த மாணிக்கவாசகர் அதற்கு மனமகிழ்ந்து சொல்ல எதிரேயிருந்து திருக்கோவையையெழுதிமுடிந்தபின்பு பொன்போலும் பிரகாசிக்குஞ் சடையையுடையவர்தம்முடைய புத்தகத்தைக்கட்டி அவ்விடத்திலேகொண்டுமின்னலைப் போல்மறைந்தார் அதுகண்டுமாணிக்கவாசகர் வருத்தங்கொண்டார்.

எழுந்தனரெங்குமோடிநாடினரென்கொலென்று ......*
வழிந்தனர்மன்றுளாடுமாதியென்றறிந்தபின்னர்ப் .... ...*
பொழிந்தனர்கண்ணீரெங்கேபோயினையென்றுமண்மேல் *
விழுந்தனர்பரமானந்தவேலைவெள்ளத்துளானார் ..........*

(இ-ள்) எழுந்தார் எங்குமோடித் தேடிப்பார்த்தார் இதென்ன ஆச்சரியமென்று மனமழிந்தார் சிதம்பரத்திலே நிருத்தஞ்செய்கின்றசபாபதியென்றறிந்து பின்புகண்ணினாலே ஆனந்தபாஷ்பம் பொழிந்தார் எங்கேபோயினையென்று பூமியிலேவிழுந்தார் பரமாநந்த சமுத்திர நீரிலழுந்தினாரென்றவாறு. (௰௫)

செந்தமிழ்க்கன்புமிக்கார்சென்றுதம்மன்றிலெய்தி...*
யந்தரத்தவரைமாலையயனைநன்முகத்துநாடி.. ... ... *
நந்தமக்கடிமைபூண்டுநயந்தவனொருவன்சொன்ன *
விந்தநற்பாடல்கேண்மினென்றவர்க்கருளிச்செய்தார் *

(இ-ள்) உயர்ந்ததமிழினிடத்திலேஅன்புமிகுந்த சபாநாயகர்புத்தகத்தையெடுத்துக்கொண்டு தமதுசபைக்கெழுந்தருளித் தேவர்களையும் மகாவிஷ்ணுவையும்பிரமதேவனையும்பார்த்து நமக்கடிமைசெய்துநயப்பினைப்பெற்றமாணிக்கவாசகன்சொன்ன இந்தநல்லபாடல்களைக்கேளுங்களென்று அவர்களுக்கனுக்கிரகஞ்செய்தார்-எ-று

மெய்த்தவவாதவூரர்விளம்பிடவெழுதுமிந்தப் .. .... *
புத்தகமன்றுளாடல்புரிந்தவனெழுத்தாமென்று ...*
முத்தியையுதவுங்கோவைமுடிவிடத்தெழுதிப்பின்னர் *
சித்திரமலர்க்கையாலேதிருத்தமைக்காப்புஞ்செய்தார் *

(இ-ள்) மெய்ம்மையுள்ள தவத்தையுடைய மாணிக்கவாசகர்சொல்ல எழுதப்பட்ட இந்தத்திருவாசகம் கனகசபையிலே நிருத்தஞ்செய்கின்ற அழகிய திருச்சிற்றம்பலமுடையார் திருவெழுத்தாமென்றும்மோக்ஷத்தைத்தருகின்ற திருக்கோவையார்முடிந்தவிடத்திலே

யெழுதிப்பின்பு அழகிய மலரையொத்த கையினாலே திருத்தமாக மைகாப்பஞ்செய்தாரென்றவாறு. (௰௫)

வெண்பிறைமுடித்தவேணிவித்தகருலகுக்கெல்லா ... *
நண்புடைவாதவூரர்நற்றவமுணர்த்தவெண்ணி . *
யெண்பெறுமுனிவர்விண்ணோரிறைஞ்சுமம்பலத்துவாயில்
வண்படியின்மேற்றூயுண்மைவாசகமுறையைவைத்தார்......*

(இ-ள்.) வெள்ளிய மூன்றாம்பிறையைத்தரித்த ஜடாபாரத்தையுடைய சபாநாயகர் உலகத்துக்கெல்லாம் சிநேகமுடைய மாணிக்கவாசகரது நல்லதவத்தையெல்லாருக்கும் அறிவிக்க நினைத்து எண்ணைப்பெற்ற முனிவர்கள் தேவர்கள்வணங்கும் சபைவாசற்படியின்மேல் திருவாசகமாகிய திருமுறையைவைத்தாரென்றவாறு. (௰௬)

வைத்தபின்பூசைசெய்யுமந்தணனொருவன்கண்டிப் ... *
பத்தகமிங்குநண்ணும்புதுமைதெய்விகமாமென்று.. *
சித்தமங்குருகிநின்றுதில்லையுள்ளவர்கட்கெல்லாம் ...*
மித்திறங்கூறவேண்டுமென்றுமன்றகன்றுபோந்து. *

(இ-ள்) படியின்மேல்வைத்தபின்பு பூசைசெய்யும் ஒருபிராமணன் பார்த்து இப்புத்தகம் இங்கேயிருக்கப்பட்டமை தெய்விகமாமென்று மனமுருகிநின்று தில்லைநகரத்தார்க்கு இதனைச்சொல்லவேண்டுமென்று சபையைவிட்டுப்போனானென்றவாறு. (௰௭)

செந்திருமருவுந்தொல்லைத்தில்லைநன்னகரிலுள்ளார்...*
தந்திருமுன்புசென்றுசாற்றிடவறிந்தநீர்மை.......... *
யந்தணர்மொழிந்தபின்னரதிசயமிதுவென்றோடி ...*
வந்தனர்படிமேலண்ணல்வைத்தபுத்தகங்கண்டார்கள் .*

(இ-ள்) இலக்குமியானவள் வசிக்கின்ற பழைமையாகிய சிதம்பரத்திலுள்ளவர்களிடத்துக்குப்போய் ஒருபுத்தகம் சபையின்படியின்மேலிருக்கின்றதென்றுசொல்லப் பின்பு இது அதிசயமாமென்று ஓடிவந்து படியின்மேல் சபாநாயகர்வைத்த புத்தகத்தை எல்லாருங்கண்டார்களென்றவாறு. (௰௮)

யாவருந்தம்முணாடியெம்மிறையுறையுமன்றுட் ... ...*
மேலவரும்புகுதவொண்ணாத்தெய்விகமிதுவென்றெண்ணி
மேவுமன்பதனாலண்ணல்விளம்பியசைவநூலோ......*
தாவுசெந்தமிழ்நூலோவென்றுபார்ப்பதுதகவதென்றார்...*

(இ-ள்) எல்லாருந்தங்களுக்குள்ளேபார்த்து எமது கடவுளிருக்கின்ற சபையிலேதேவர்களும் புகுதற்குக்கூடாத தெய்விக மிதுவென்றுநினைத்துப் பொருந்துகின்ற அன்பினாலே கடவுள் சொல்லிய சிவாகமமோ தமிழ்நூலோவென்று பார்ப்பது தகுதியாமென்றார்கள்.

தேக்கியவருளுமன்புஞ்சிறந்தவரெல்லாருஞ்சொல்லும்...*
வாக்கினிலொருவன்சென்றுமலர்கொடுவணக்கஞ்செய்து

பூக்கமழ்சடையோன்வைத்தபத்தகந்தன்னைச்சேம... *
நீக்கினரோதினார்முனிநீதிகொளேகவலுநான்கும்........ *

(இ-ள்) அருளும் அன்பும் நிறைந்த தில்லைமூவாயிரவர்களெல்லாருஞ் சொல்லுகின்ற வாக்கில் வல்லவராகிய ஒருவர்போய் மலரைக்கொண்டு அருச்சித்து நமஸ்கரித்துப் பரமசிவன் வைத்த புத்தகத்தை அவிழ்த்து கட்டைநீக்கிப்படித்தார் நீதியைக்கொண்ட அகவல் நான்குமென்றவாறு. (௨௰)

திருச்சதகமுதலாகச்சிறந்ததமிழறுநூறும்........ *
விரித்தவகப்பொருட்கோவைவிளங்கவொருநானூறு...*
முடியாத்தனர்பின்முடித்தவிடத் தூயர்வாத வூரன்மொழி
தரித்தெழுதுமம்பலவனெழுத்தென்றுசாற்றினார்... *

(இ-ள்) திருச்சதகமுதலாகச்சிறக்கப்பெற்ற தமிழ்ப்பாடல் அறுநூறும் விரித்துச்சொல்லப்பட்ட அகப்பொருட்கோவை நானூறு பாடலும் விளங்கப்படித்தார்கள் பின்பு அதுமுடிந்தவிடத்திலே இதுமாணிக்கவாசகர்சொல்ல அழகியதிருச்சிற்றம்பலமுடையார்கையெழுத்தெனறுபடித்தார்களென்றவாறு (௨௧)

கேட்டவர்களெல்லாருங்கிளர்புளகங்குறுவேர்வு...... *
காட்டிடலுங்கண்ணீருங்கசிந்துருகுஞ்சிந்தையுமா... *
யீட்டியமெய்த்தவமுடையோனியம்பியவித்தமிழன்றி*
வீட்டுநெறிக்கினிச்சிவநூல்வேறுளதோவென்றார்கள் *

(இ-ள்) இந்தத்திருமுறையைப்படிக்கக்கேட்டவர்களெல்லாம்மெய்ப்புளகமும் குறுவேர்வுகொள்ளுதலும் ஆனந்தபாஷ்பமும் கசிந்துருகுமனமுங்கொண்டவராய் மெய்த்தவத்தையுடைய மாணிக்கவாசகர்சொல்லிய இந்தத்தமிழல்லாமல் மோக்ஷவழிக்குச் சிவநூல்வேறுண்டோவென்றுசொன்னார்களென்றவாறு. (௨௨)

பூணரவன்றிருநாமம்புகழுமருந்தவர்சொல்ல....... *
யாணரிதன்பொருட்டேனையின்றுணர்வோமெனவெண்ணி
மாணுடைமன்றகன்றேகிமறைவல்லார்போதிநிழல் .. *
வீணருடன்பெருவாதுவென்றவர்முன்சென்றார்கள் *

(இ-ள்) சர்ப்பாபரணந்தரித்த சபாநாயகரைப் பாடிய மாணிக்கவாசகர் சொல்ல அழகிய இதன்பொருளாகிய தேனை இன்றறிவோமென்றுநினைத்துப் பெருமைபொருந்திய சபையைவிட்டுப் போய் அரசமர நிழலிலேயிருக்கும் வீணராகியபுத்தருடன் பெருவாது செய்துவென்ற மாணிக்கவாசகர் முன்னேபோனார்கள் தில்லைமூவாயிரவரென்றவாறு. (௨௩)

சென்றவர்தந்திருமுன்புதிருமுறைவைத்தண்டர்பிரா *
னின்றுசெயுஞ்செயலிதுவெனவியம்பினர்நின்றெல்லோரு

